# தமிழ் இலக்கிய வரலாறு

## ஒன்பதாம் நூற்றாண்டு

### இரண்டாம் பாகம்



மு. அருணாசலம்

# தமிழ் இலக்கிய வரலாறு

## ஒன்பதாம் நூற்றாண்டு

### பாகம் - 2

மு. அருணாசலம்

**The PARKAR**

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை*

*இராயப்பேட்டை*

*சென்னை - 14.*

தமிழ் இலக்கிய வரலாறு

ஒன்பதாம் நூற்றாண்டு, பாகம் – 2

மு. அருணாசலம்



முதற் பதிப்பு : ஆகஸ்டு 1990.
திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.
பக்கம் : xii + 192 = 204.

பதிப்பு :
**தி பார்க்கர்**
293, அகமது வணிக வளாகம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

**விலை : 163. 00**

வடிவமைப்பு :
**வே. கருணாநிதி**

அச்சிட்டோர்:
**தி பார்க்கர்**
293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.

# முகவுரை

திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கையைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னையில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர்களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர்பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.

'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன்றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதிகள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர்களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன்னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.

திருச்சிற்றம்பலம். **அ. சிதம்பரநாதன்**
15. 11. 2004.

# நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவனத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ. சரவணன், ஜெயகுமார், தனசேகர், பாலசுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல் விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையது அலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

# பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படையிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், "9ஆம் நூற்றாண்டு வரலாறு 3 பகுதிகளாக வெளிவரும்." என்பது, ஆசிரியர் மேற்கொண்டிருந்த திட்டமாகும்.

ஆசிரியருக்கு ஏற்பட்ட பல்வேறு காரணங்களால் அது முடியாமல் போனது போலும். ஒன்பதாம் நூற்றாண்டில் முதல் தொகுதி மட்டுமே 1975ஆம் ஆண்டில் ஆசிரியரால் வெளியிடப் பட்டது. இரண்டாம், மூன்றாம் தொகுதிகள் வெளியிடப்பட வில்லை. பின்னர் வெளிவந்த அவரது பல இலக்கிய வரலாற்றுத் தொகுதிகளிலும் அவை அச்சில் உள்ளதாக ஆசிரியரே பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். எனினும் அவரது மறைவு வரை இவ்விரண்டு தொகுதிகளும் வெளிவரவில்லை.

இத்தொகுதிகளின் திருத்தப்பட்ட இந்த மறு பதிப்புத் தொடர்பாக, திருச்சிற்றம்பலத்தில் உள்ள அவரது வீட்டில் நாம் பல நாட்கள் தங்கியிருந்தோம். இவ்வேளையில் அவர் மகனார் திருமிகு சிதம்பரநாதன் அவர்களது ஒத்துழைப்புடன் இவ்விரு தொகுதிகளின் கையெழுத்துப் படிகளையும் தேடும் பணியில் ஈடுபட்டோம். ஏதேனும் அச்சகத்தில் கொடுத்துத் தவறிப் போனதோ என்னும் ஊகமே ஏற்பட்டது.

ஆசிரியர் மு. அருணாசலம் ஐயா அவர்கள், 1990ஆம் ஆண்டில் 'நம்மாழ்வார்' என்ற பெயரில் ஒரு நூலை வெளியிட்டுள்ளார். இது திருமலை, திருப்பதி தேவஸ்தானத்தின் நிதி உதவியுடன் 'காந்தி வித்தியாலயம்' பதிப்பாக வெளிவந்தது. இந்நூலில் அவர் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"இது எம்முடைய இலக்கிய வரலாற்றில் 9ஆம் நூற்றாண்டுக்கு உரிய 2ஆம் பகுதி ஆகும். இதில் நம்வாழ்வாருடைய வரலாறும், நூல்கள் பற்றிய ஆராய்ச்சியும், மாணிக்கவாசகர் பற்றிய வரலாறும், திருவாசகம் பற்றிய ஆராய்ச்சியும் அடங்கியிருக்கின்றன. மாணிக்கவாசகர் வரலாற்றில் திருவாசகம் பற்றிய ஆய்

வும், இதனுள் அடங்கும். திருக்கோவை பற்றிய ஆய்வு இதனுள் அடங்காது; இதனுள் மாணிக்கவாசகர் திருக்கோவை பாட வில்லை என்ற கருத்து உறுதி செய்யப்படும்." என்ற செய்தியைப் பதிப்புரையாகக் குறித்துச் செல்கிறார்.

இதிலிருந்து 9ஆம் நூற்றாண்டின் இரண்டாவது தொகுதி எப்படி அமைய இருந்தது என்பதை நாம் உணரமுடிகிறது. இக்கருத்தின் அடிப்படையிலும், அவரது நம்மாழ்வார் நூலில் பக்கத்துக்குப் பக்கம் 'நம்மாழ்வார்' என்ற நூல் தலைப்புக் குறிப் பிடப்படவேண்டிய இடத்தில், 'தமிழ் இலக்கிய வரலாறு : 9ஆம் நூற்றாண்டு - பாகம் - 2' என ஆசிரியரே குறிப்பிட்டுள்ளதாலும் மேற்படி நூல் 'தமிழ் இலக்கிய வரலாறு - 9ஆம் நூற்றாண்டு - பாகம் 2 என்ற பெயருடன் இத்தொகுதிகளுடன் சேர்க்கப்பட் டுள்ளது ஆசிரியரின் கருத்தை ஈடுசெய்யும்.

இத்தொகுதியில் மாணிக்கவாசகர் வரலாறும் திருவாசகம் பற்றிய ஆய்வும் திருக்கோவை, மாணிக்கவாசகர் பாடவில்லை என்ற ஆசிரியர் கருத்தும் இடம்பெறவில்லை என்பது வருத்த மான செய்தி. தொடர்ச்சியான எமது தேடுதலில் அவை அகப் படின் இத்தொகுதி நிறைவு பெறும்.

இத்தொகுதியின் ஒரு பகுதியும் இதற்கு அடுத்த தொகுதி யான 9ஆம் நூற்றாண்டின் மூன்றாம் பாகமும் ('கம்பரும், திருத் தக்கதேவரும்' - நம்மாழ்வார் முன்னுரை) கிடைக்கவில்லை என்பது ஆசிரியரின் இவ்வரலாற்றுத் தொகுப்பு எழுத்தாக்க - வெளியீட்டு முயற்சியில் நமக்கு ஏற்பட்ட பெரும் இழப்பாகும்.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செல விட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடு கொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக் குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படை யில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

**வே. கருணாநிதி**

*சென்னை*
*25. 12. 2005.*

# முதல் பதிப்பின் முகவுரை

இது எம்முடைய இலக்கிய வரலாற்றில் 9ஆம் நூற்றாண்டுக்கு உரிய 2ஆம் பகுதி ஆகும். இதில் நம்மாழ்வாருடைய வரலாறும், நூல்கள் பற்றிய ஆராய்ச்சியும், மாணிக்கவாசகர்* பற்றிய வரலாறும், திருவாசகம்* பற்றிய ஆராய்ச்சியும் அடங்கியிருக்கின்றன. இது நம்மாழ்வாருடைய நூல் ஆராய்ச்சியும் அவருக்குப் பின்வந்த மதுரகவி ஆழ்வார் பராங்குசதாசர், நாதமுனிகள் ஆகிய ஆசாரிகள் பரம்பரையைச் சொல்வதாகும்.

மாணிக்கவாசகர் வரலாற்றில் திருவாசகம் பற்றிய ஆய்வும், இதனுள் அடங்கும்.* திருக்கோவை பற்றிய ஆய்வு இதனுள் அடங்காது; இதனுள் மாணிக்கவாசகர் திருக்கோவை பாடவில்லை என்ற கருத்து உறுதி செய்யப்படும்.*

9ஆம் நூற்றாண்டு வரலாறு 3 பகுதிகளாக வெளிவரும்.* இரண்டாம் பகுதியினுள் நம்மாழ்வார் செய்திகளும், மூன்றாம் பகுதியுள் கம்பர், திருத்தக்கதேவர் பற்றிய செய்திகளும்,* முதல் பகுதியுள் இவை தவிர்த்த அனைத்துச் செய்திகளும் அடக்கி ஏற்கெனவே வெளியிடப்பட்டுள்ளன. இதன் 2ஆம் பகுதியுள் ஆழ்வாரும், திருவாசகமும்* 3ஆம் பகுதியுள் கம்பரும், திருத்தக்கதேவரும்* அடக்கி வெளியிடப்பெறுவது சிறப்பு. அதன்படி இதன் 2ஆம் பகுதி பக்தி இலக்கியமும், 3ஆம் பகுதி காப்பியங்களும் அடங்கும்.*

> பார்பாடும் பாதாளர் பாடும்விண் ணோர் தம்பாடும்
> ஆர்பாடுஞ் சாரா வகையருளி யாண்டுகொண்ட
> நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்
> சீர்பாடல் பாடிநாம் தென்னேணங் கொட்டாமோ
>
> – திருத்தெள்ளேணம் 13

மு. அருணாசலம்

திருச்சிற்றம்பலம்.

ஆகஸ்டு, 1990.

---

* இவை பற்றிய மேலதிக விளக்கத்தை எமது பதிப்புரையில் (vii) காண்க.

# பொருளடக்கம்

## அட்டவணைகள்

இந்நூலகத்தும் இறுதியிலும் பல்வேறு அட்டவணைகள் பயன் கருதி அமைத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலைக் கீழே காண்க.



OOO

## இவ்வரலாற்றில் ஆராய்ந்த நூல்கள்



OOO

## முன்னுரை

# 1. வைணவ இலக்கியம்

தேன றாமகிழ்த் தொடையலும் மவுலியும்
திருக்கிளர் குழைக்காதும்
கான றாமலர்த் திருமுகச் சோதியும்
கயிரவத் துவர் வாயும்
மோன மாகிய வடிவமும் மார்பமும்
முத்திரைத் திருக்கையும்
ஞான தேசிகன் சரண தாமரையும் என்
நயனம் விட் டகலாவே.

ஐந்து - ஆறு நூற்றாண்டுகளிலிருந்து தொடர்ச்சியாக வளர்ந்து வந்த வைணவப் பாசுர இலக்கியம் இந்த நூற்றாண்டில் தன் உச்ச நிலையை அடைகிறது. முதலில் முதலாழ்வார் மூவரும் தோன்றி ஒவ்வொருவரும் ஓர் அந்தாதி பாடி நாராயணனைத் தரிசித்தார்கள். ஆழ்வார் பரம்பரை வளர்ந்தது. ஒன்பதாம் நூற்றாண்டில் அவ்வளர்ச்சியின் சிகரமாக நம்மாழ்வார் தோன்றினார். அவர் தோன்றியது முதல் வைணவம் என்றாலே நம்மாழ்வார் என்று பொருளாகி விட்டது. நாலாயிரப் பிரபந்தங்களில் மிகவும் அதிகமான பாடல் பாடியவர் இவரே. தமிழ்நாட்டின் தென் கோடியில் இருந்து கொண்டு அதிகமான தலங்களையும் இவர் பாடியிருப்பது பின்னும் சிறப்பு. 'வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்தவர்' என்று இவர் போற்றப் பெறுகிறார். இவர் பாடல் திராவிட வேதம், சடகோப உபநிஷத் என்றும் சொல்லப் பெறுகிறது.

இவர் பாடிய பெருநூல் திருவாய்மொழி; அதற்குப் பல வியாக்கியானங்கள் எழுந்துள்ளன. இத்திருவாய்மொழி காரணமாகவே; தமிழ்மொழிக்கு வடமொழியிலும் பார்க்க ஏற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று வைணவர் கருதுகின்றனர். சடகோபரந்

தாதிப் பாடல்கள், 'தமிழ் சாதிப்பதைப் போல வடமொழி என்ன சாதிக்கும்?'* என்று அறை கூவிக் கேட்பன. விசிஷ்டாத் வைதம் என்றும், எம்பெருமானார் தரிசனம் என்றும், இராமானுச சித்தாந்தம் என்றும் இன்று கூறுகின்ற தனியான வைணவ மத சித்தாந்தம் ஏற்படுவதற்கு ஆதாரம் நம்மாழ்வார் பாடல்களே. வடநாடு முழுமையும் இராமானுசருடைய கொள்கை பரவியிருக்கிறது. இத்தனைக்கும் மூலம் நம்மாழ்வாருடைய பாடல்களே. இத்தகைய பிரசித்தியும் அருமையும் வாய்ந்த இவ்வாழ்வார் வாழ்ந்தது இந்த ஒன்பதாம் நூற்றாண்டு. பாரத கண்டத்தின் வடகோடியில் புத்தர்பிரான் 2500 ஆண்டுகளுக்கு முன் பிறந்து, இன்று உலக முழுமையும் பரவியுள்ள புத்த சமயத்தைத் தோற்றுவித்தார். நம்மாழ்வார் பரத கண்டத்தின் தென்கோடியில் பிறந்து பரதகண்டம் முழுமையும் திருமால் சமயம் என்கிற பரஞானச் சுடர் வீசும்படி செய்த பேரருளாளர்.

வேளாள குலத்துப் பிறந்த இவ்வாழ்வாருடைய சீடராக வந்து தேவு மற்றறியாது, இவர் பாடலின் இன்னிசை பாடித் திரிந்த மதுரகவி, ஆண்டில் முதியவரான அந்தணர். அவராலேயே நம்மாழ்வார் உலகுக்கு அறிமுகமானார். பின்னர்த் தோன்றிய நாத முனிகள் காலத்தில் ஆழ்வார் அனைவருடைய திவ்வியப் பிரபந்தங்கள் யாவும் வழக்கற்றுப் போயிருக்க, நம்மாழ்வாருடைய அருளாலேயே நாதமுனிகள் அவற்றைக் கண்டு உலகுய்ய வேண்டி வெளிப்படுத்தினார். வெளிப்படுத்திய பின், நம்மாழ்வார் தொடக்கமான புதிய வைணவ ஆசாரிய பரம்பரை பிறந்தது.

நம்மாழ்வார் பாசுரங்களும் வைணவ சமய உணர்வும் இரண்டறக் கலந்து பின்னியுள்ளன. ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக, பெருந்தொகுதியினரான மக்களை இவை ஒரு நெறிப்படுத்தி நல்வழிப்படுத்தியதோடு, எத்தனையோவிதமான வேற்றுச் சமய மோதல்களையும் அரசியல் தாக்குதல்களையும் எதிர்த்துச் சமாளிக்கும் ஆற்றலை மக்களுக்கு நல்கியும் இருக்கின்றன. இன்றும் இவை உயிர்த் தத்துவம் நிரம்பி மக்கள் வாழ்வில் பொருந்தியிருக்கின்றன. இந்தநிலையில் பாசுரங்களில் ஆராய்ச்சி செய்ய முற்படுவது அபசாரம் என்று நினைப்போரும் உளர். எனினும், பின்வரும் கருத்துக்கள் யாவும் சம்பிரதாயத்தைத் தழுவியே சொல்லப் பெறுகின்றன என்றும், புதுமைக்காக எதையும் சொல்லவில்லை, உண்மை காணும் நோக்குடனே

---

* சடகோபர் அந்தாதிப்பாடல்.

யாவும் சொல்லப்படுகின்றன என்றும், இலக்கிய உணர்வுடனும் ஆழ்வார் வாக்கையும் வாழ்வையும் கண்டு அனுபவிக்க முடியும் என்றும் காட்டவே இங்கும் யாம் முயல்கிறோம். இது ஆழ்வாருக்கு அபசாரமாகாது என்பதையும் பக்தி மிக்க அவ் அன்பர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## நம்மாழ்வார் வரலாறு

**மிக்க இறைநிலையும், மெய்யாம் உயிர்நிலையும்**
**தக்க நெறியும், தடையாகித் – தொக்கியலும்**
**ஊழ்வினையும், வாழ்வினையும், ஓதும் குருகையர்கோன்**
**யாழின்இசை வேதத் தியல்.***

---

* இது வைணவ ஆசாரியரான பட்டர் நம்மாழ்வார் நூலைப் புகழ்ந்து பாடிய தனியன். வைணவ சமய தத்துவம் அர்த்த பஞ்சகம் என்ற ஐந்து பொருளைக் கூறுவது: அவையாவன - இறைநிலை, உயிர்நிலை, உபாயநிலை, விரோதி நிலை, புருடார்த்த நிலை என்ற பொருள் ஐந்து. இவ்வைந்தையும் கூறி இப்பாடல், இதுவே குருகூர்ப் பிரானுடைய வேதத்தின் பொருள் என்று உரைக்கிறது. திருவாய்மொழியில் அர்த்த பஞ்சகம் என்று காட்டப்படும் இடங்கள் பின்வருவன,

1. இறைநிலை (பரசொரூபம்) : 4 திருமொழிகள் 1. உயர்வற உயர் நலமுடையவன், 12 திண்ணன் வீடு முதல், 18 அனை வது அரவணை மேல் 40. ஒன்றும் தேவும் உலகும் உயிரும்.

2. உயிர்நிலை (ஆன்ம சொரூபம்) : 4 திருமொழிகள். 27 பயிலும் சுடரொளி மூர்த்தியை 38. ஏறாளும் இறையோனும்; 78. கண்கள் சிவந்து பெரியவாய்; 79 கருமாணிக்கமலைமேல்.

3. தடைஇயல் (விரோதி சொரூபம்) : 4 திருமொழிகள். 2 வீடுமின் முற்றவும் 29. சொன்னால் விரோதம் இது; 31. ஒரு நாயகமாய் ஓட; 81 கொண்ட பெண்டிர் மக்கள்.

4. நெறி இயல் (உபாய சொரூபம்) : 4 திருமொழிகள் 47 நோற்ற நோன்பிலேன்; 48 ஆரா அமுதே அடியேனுடலம். 49 மானேய் நோக்கு நல்லீ. 50 பிறந்தவாறும் வளர்ந்தவாறும்.

5. வீட்டின் இயல் (பல சொரூபம்) : 4 திருமொழிகள் 19. எம்மா வீட்டுத்திறமும்; 23 ஒழிவில் காலமெல்லாம் 80 நெடு மாற்கு அடிமை செய்வேன்; 93. வேய் மருதோளிணை.

இவையன்றி, திருவாய்மொழியின் உள்ளக்கிடக்கையாகப் பின் வரும் கருத்துக்களும் சொல்லப்படும்.

முதற்பத்து - மேலானவன்; இரண்டாம் பத்து காரணன்; மூன்றாம் பத்து - பரந்து தாங்குகிறவன்; நான்காம்பத்து நியமிக்கின்றவன்; ஐந்தாம் பத்து - பேரருளாளன்; ஆறாம் பத்து - புகலிடம்; ஏழாம் பத்து - அளவில் ஆற்றலுடையவன். எட்டாம் பத்து - சத்திய காமன்; ஒன்பதாம் பத்து - ஆபத்தில் துணை செய்பவன்; பத்தாம் பத்து - பிறவித் துன்பத்தை நீக்குபவன்.

ஸ்ரீவைஷ்ணவம் என்றால் அதற்கு முதலும் முடிவுமாயிருப்பவர் நம்மாழ்வார். இவர் ஆழ்வார்களுள் கடைசியும் ஆசாரிய பரம்பரையில் முதலுமாவார். இவருடைய சீடர் முதியவரான மதுரகவியாழ்வார், குலத்தால் பிராமணர், இவரோ வேளாளர்.* இது கொண்டே அக்காலத்திலேயே வைணவர் இவரை எவ்வளவு உயர்வாய்க் கருதினர் என்பதை நன்கறியலாம்.

13ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் நம்பிள்ளையின் சீடராய் வாழ்ந்தபின் பழகிய பெருமாள் ஜீயர் முதலாவதாகச் செய்த குருபரம்பரைப் பிரபாவம் ஆறாயிரப்படி என்ற நூலே, தமிழில் ஆழ்வார் ஆசாரியர் வரலாற்றுக்கு மூலம். இதைப் பின்பற்றிப் பல நூல்கள் பின்னால் எழுந்துள்ளன. இதில் சொல்லியுள்ள ஆழ்வார் வரலாறு மிகவும் கொஞ்சம். இது மணிப்பிரவாள நடையில் வட மொழியும் தென்மொழியும் கலந்து எழுதப்பட்டிருக்கும். இதிலுள்ள வரலாற்றை அப்படியே எடுத்து இங்கு தருகிறோம்; இதிலுள்ள வடமொழி மேற்கோள்களை மட்டும் நீக்கி விட்டு, வடமொழி எழுத்துக்களையும் நீக்கித் தமிழ் எழுத்துக்களாய் அமைத்துக் கீழே தருகிறோம். மூலத்தில் வாக்கியங்கள் முடிவில்லாமல் மிகவும் நீண்டுபோய்க் கொண்டிருக்கும். படிப்பதில் எளிதாயிருக்கும் பொருட்டு வாக்கியங்களை மட்டும் ஆங்காங்கு முடித்து எழுதுகிறோம்; இதன் நோக்கம் முதன் முதலாக எழுதப்பட்ட ஆழ்வார் வரலாற்றை அந்தச் சொற்களாலேயே அறிவதுடன், கற்பவர் அக்கால மணிப்பிரவாள நடையின் தன்மையை உணர்வதுமாகும்.

### குருபரம்பரை வரலாறு❖

ஆழ்வார்களெல்லாரையும் அவயவ பூதராகவுடைய நம்மாழ்வார் திருவவதாரக் கிரமம் எங்ஙனே என்னில்: வண்டலம்பும் சோலை வழுதிவள நாட்டிலே, கங்கா நதி சகல நதிகளிலும் உத்க்ருஷ்டதமமாகச் சொல்லப்பட்டிருப்பதான தாமிரபருணியென்னும் பொருநையாற்றின் கரையிலே ஸ்ரீநகரி

---

* பிற்காலத்தில் சைவ ஆசாரிய பரம்பரையில் இவர்கள் போலவே ஆண்டில் இளையவராய் ஆசாரியராயிருந்த மெய்கண்டார் வேளாளர். இவர் சீடராய் அடுத்த ஆசாரியராய் வந்த அருணந்தி சிவம் ஆண்டில் முதியவர், சிவப்பிராமணர் என்பதையும் கருதுக.

❖ 1878ஆம் வருஷப் பதிப்பு ஆசூரி ராமானுசாசாரியர், கா. ராமசாமி நாயுடு, ரா. ராமகிருஷ்ணபிள்ளை; கார்டியன் அச்சுக்கூடம்.

என்று பிரக்கியாதமான நல்லார் நவில் குருகூர் நகருக்கு நிர்வாஹகரான இவ்வாழ்வார் தாமே, எந்தை தந்தை, தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை என்றருளிச் செய்கையாலே* ஏழாட்காலும் புறந்தொழாமே, குடி குடியாட் செய்யும் தொண்டக் குலத்திலே பிறந்து, ஏழாட்காலும் பழிப்பிலராயிருப்பர். எங்ஙனே என்னில்:

திருவழுதி வளநாடர் என்றொருவர்; அவர் பிள்ளை அறந்தாங்கியார்; அவர் பிள்ளை சக்கரபாணியார்; அவர் பிள்ளை அச்சுதர்; அவர் பிள்ளை செந்தாமரைக் கண்ணர்; அவர் பிள்ளை செங்கண்ணர்; அவர் பிள்ளை பொற்காரியார்; அவர் பிள்ளை காரியார்; அவர் பிள்ளை மாறன்; இவர்கள் தாம் இக்கிராமத்திலே சந்தான பரம்பரையாகக் குடியடியராய்ப் பழவடிமையாய், வழிவழி வந்தாட் செய்யும் தொண்டரான இத்திருவம்சத்திலே, பொற்காரியார் என்கிறவர், உலகெல்லாம் வாழும்படி தம்முடைய புத்திரரான காரியாருக்கு விவாகம் பண்ணுவிப்பதாகத் திருவண் பரிசாரத்திலே காரியாரைக் கொண்டு போய்த் தமக்குச் சமான சம்பந்த யோக்யராய் வைஷ்ணவ சந்தானிகரான திருவாழ்மார்பர் திருமாளிகையிலே எழுந்தருளி அவரைப் பார்த்து, 'உம்முடைய புத்திரியான உடைய நங்கையாரை நம்முடைய புத்திரரான காரியாருக்கு விவாகம் பண்ணித் தரவேணும்' என்று தமரும் பிறரும் அறியப் பிரசங்கித்துக் கேட்டார். திருவாழ்மார்பரும் மிகவும் சந்துஷ்டராய்க் கொண்டு சம்மதித்து, கல்யாணங் கோடித்து, 'மத்தளங் கொட்ட வரிசங்கம் நின்றூத முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தர்க்கீழ்' என்கிறபடியே உபலாலித்துப் பெருப் பெருத்த கல்யாணங்கள் செய்து உதகபூர்வகமாக உடைய நங்கையாரைக் காரியாருக்குச் சமர்ப்பித்தார்.

காரியாரும் வெள்வளைக் கைப்பற்ற என்கிறபடியே, பாணிக்கிரகணம் செய்து கொண்டு மற்றுமுண்டான கிரியா விசேஷங்களையும் செய்து, திருவண் பரிசாரத்தில் திருவாழ் மார்பரான எம்பெருமானையும் திருவடி தொழுது மீண்டு,

---

* இது திருவாய்மொழி - பாடல் 3144. பாடல் எண்கள் எஸ். ராஜம் பதிப்புக்குரியவை. இதுபோலவே வரலாறெங்கும் ஆழ்வார் பாசுரத் தொடர்கள் மலிந்துள்ளன. விரிவஞ்சி எண்ணிடப் பெற வில்லை.

பெரியவண் குருகூரிலே எழுந்தருளா நின்றார். பெருமாள் ஸ்ரீமிதிலையிலே எழுந்தருளித் திக்குநிறை புகழாள் ஆன ஸ்ரீ ஜனகராஜன் திருமகளைத் திருமணம் புணர்ந்து மீண்டெழுந் தருளும் போது, திருவயோத்தியில் பிராமணர் முதலான பௌரஜனங்கள் பட்டணத்தை அலங்கரித்து ஒப்பித்து மங்கள வாத்தியத்துடனே வந்து எதிர்கொண்டாற் போலே, செம்பொன் மாடத் திருக்குருகூரிலுள்ளாரும் பூரணப் பொற்குடம் வைத்துப் புறமெங்கும் தோரணம் நாட்டித் துமுலமெழப் பறைகொட்டி, உபலாலித்து எதிர்கொண்டனர். குன்றம்போல் மணிமாடம் நீடு தீருக் குருகூரதனுள் புகுந்து இல்லறம் என்று சிலாக்கிய மாகச் சொல்லப்பட்டிருப்பதான கிருகஸ்தாசிரமத்திலே நியத ரான காரியார் சில நாளைக்குப் பின்பு தம்முடைய பத்தினியா ரான உடைய நங்கையாரைத் திருக்குருகூரில் நின்றும் பிறந்தக மான திருவண் பரிசாரத்துக்கு அழைத்துக் கொண்டு போய் மீண்டுவாரா நிற்கச் செய்தே, தேன்கொள் சோலைத் திருக்குறுங் குடியிலே சென்று, நம்பியைத் தென்குறுங்குடி நின்ற அச்செம் பொனே திகழும் திருமூர்த்தியையும் சேவித்து, 'அடியோங் களுக்கு ஒரு சந்தானம் தந்தருளவேணும்' என்று பிரார்த்தித்தார். நம்பியும் 'நாமே வந்து பிறக்கிறோம்' என்று அர்ச்சகமுகனே வரப்பிரதானம் பண்ணியருளினார். அவ்வசனம் கேட்டருளிப் பிரீதராய் நிற்கச் செய்தே, நம்பியும் பூத்துணர் மாலைத் தண் துழாயையும் கிருபையுடனே பிரசாதித்தருள, தன் மன்னு நீள்கழல் மேல் தண்துழாய் நமக்கன்றி நல்கான் என்று கொண்டு, துணையோடும் பிரியாதே ஸ்வீகரித்து, மிகவும் உவப்போடே தங்களுக்கு ஆவாச ஸ்தலமான நல்லார் பலர் வாழ் குருகூரிலே வந்து புகுந்து நித்திய வாசம் பண்ணிக் கொண்டு போனார்.

போகிற அளவிலே உடைய நங்கையார் கர்ப்பவதியாக, திருமாலால் அருளப்பட்ட சடகோபன் என்னலாம் படி எம் பெருமான் இவரிடத்திலே பாரெல்லாம் உய்யும்படி, சேனை முதலியாரை நம்மாழ்வாராகக் கலியுகாதியிலே, கலிதினம் நாலாயிரத்து முந்நூற்றிரண்டு நாள்* சென்ற வர்த்தமான பகுதானிய வருஷத்தில் வசந்தருதுவில் வைகாசி மாதம் சுக்கில பக்ஷம் பௌர்ணமி கூடிய திருவைசாக நக்ஷத்திரத்தில் காவ்ய

* இதற்கு நேரானது கலி பிறந்த 12ஆம் ஆண்டு; கி.மு. 3039; இது வரலாற்றுக்கு ஒத்ததன்று என்பது ஆராய்ச்சியாளர் கருத்து.

வாஸர கர்க்கடக லக்னத்திலே திவ்விய யோக கரணங்களிலே ஆதித்திய ராம திவாகராச்சுத பானுக்கள் உதயத்திலே, நீங்காத உள்ளிருள் நீங்கிச் சோஷியாத பிறவிக்கடல் சோஷித்து விகசியாத போதிற் கமல மலரும்படிவகுள பூஷண பாஸ்கரோதயமுண்டாய்த்து. உடைய நங்கையாராகிய பூர்வ சந்தியையிலே, திருவனந்தாழ்வானும் வர்ஷாதப நிவாரணார்த்தமாய் இவருக்கு முன்னே திருப்புளி யாழ்வாராய் வந்து அவதரித்தருளினார்.

இப்படி இவர்கள் முன்னாக அவதரித்தருளின ஆழ்வார் முத்தனைய முறுவல் செய்து மூக்குறிஞ்சி முலையுண்ணாதே மௌனத்தோடே எழுந்தருளி இருக்கச் செய்தேயும் வாட்டமின்றிக்கே பரிபூர்ணராயிருக்கிற இந்த ஆச்சரியத்தைக் காரியாரும் இவரைப் பெற்ற வயிறுடையாளான உடைய நங்கையாரும் கண்டு, உன் மனத்தால் என் நினைந்திருந்தாய் என்கிறபடியே எம்பெருமான் பக்கலிலே நியஸ்தபரராய்க் கொண்டிருந்து, இவ்வாழ்வார் திருஅவதரித்தருளின பத்து நாளும் கடந்த இரண்டாநாள் திருச்சங்கணித்துறையை யுடைத்தான பொருநலாற்றின் தென்கரையிலே, திவ்விய மங்கள விக்கிரக யுக்தனாய், சங்குசக்கரதரனாய், புண்டரீகாக்ஷனாய், வரதாபய ஹஸ்தனாய், ஸ்ரீபூமி நீளா சகிதனாய்க் கொண்டு எழுந்தருளி யிருக்கிற பொலிந்து நின்ற பிரான்* முன்னே கொண்டு போய் அப்படிப்பட்ட விக்கிரகத்தைச் சேவிக்கப் பண்ணி, இவருக்கு மாறன்❖ என்று திருநாமம் சாத்தி, திருப்புளியாழ்வாரடியிலே✞ ஆணிப் பொன்னாற் செய்த வண்ணச் சிறு தொட்டிலிலே வளர்த்தி, இவரைப் புத்திரப் பிரதிபத்தி பண்ணாமல் 'எங்கள் குடிக்கரசே' என்ற விசேஷப் பிரதிபத்தி பண்ணிச் சேவித்துக் கொண்டு நின்றார்கள். இவ்வாழ்வார் தாம் திருப்புளியாழ்வாரடியிலே பதினாறு திருநட்சத்திரமளவாக, 'அவன் முகத்தன்றி விழியேன்' என்று முகுளித நயனருமாய், ஆருக்குச் சொல்லுகேன் என்று மௌனியுமாய் எழுந்தருளா நின்றார். இத்தை உடைய நங்கையாரும் காரியாரும் கண்டு இவர் தம்மைப் போல் அதிகாரிகளைக் காணாமையால் லௌகிகரோடு

---

* திருக்குருகூரில் எம்பெருமான் திருநாமம்; இதை ஆழ்வாரும் குறிப்பிடுகிறார் (3534).

❖ மாறன் - உலகப் போக்குக்கு மாறாயுள்ளவன்.

✞ திருப்புளியாழ்வார் - ஆழ்வார் அவதரித்ததன் பெருமையினாலே அப்புளியும் திருப்புளியாழ்வார் என்ற புனித நாமம் பெற்றது.

வார்த்தை சொல்லாதிருக்கிறார் என்றறியாதே, திருக்குறுங்குடி நம்பிக்கு நாம் செய்ததென்னென்று கலங்கியிருந்தார்கள்.

இப்பிரபாவங்களைத் திருஅயோத்தி சேவிக்க எழுந்தருளின மதுரகவிகளும்* கேட்டருளியிருக்கச் செய்தே, தென் திசையிலே ஒரு பெருந்தெய்வப் பேரொளியைக் கண்டு அதைத் தொடர்ந்து திருக்குருகூர் வந்து, இவருடைய நிலையறிந்து சோதித்தார். இவரும் கண்ணை விழித்துப் பார்க்க, அவர் 'செத்ததின் வயிற்றிற் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' என்று ஒரு கேள்வி கேட்க இவரும் 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்று மறுமொழி கூறி அவரை ஆட்கொண்டார்.

அப்போது சர்வகாரண பூதனுமாய், சர்வ ஸ்வாமியுமாய், சர்வ நியந்தாவுமாய், நிலமேனியும், நான்கு தோளும் உடையனாய், ஸ்ரீ வைகுண்டத்திலே எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந் நாராயணனானவன், ஆழ்வார்க்கு எதிர் விழி கொடுக்க வேணுமென்று திருவுள்ளமான அளவிலே, பெரிய திருவடியும் தம்முடைய பட்சபாதம் தோன்ற முன்னே வந்து நிற்க, நிரபாயினியான பிராட்டி சன்னிகிதனாய்ப் பெரிய திருவடிமேல் கொண்டு வந்து தோன்றித் தன்னுடைய ஸ்வரூப ரூபுகுணவிபூதி சேஷ்டிதங்களையெல்லாம் யுகபதேசவ சாட்சாத்கரித்து அனுபவிக்கலாம்படி ஆழ்வார்க்கு மயர்வற மதிநலம் அருளினான். ஆழ்வாரும் பொன்னிலாமேனி மரகதத்தின் பொங்கிளஞ்சோதி என்கிற படியே எம்பெருமானுடைய திவ்வியாத்ம ஸ்வரூபத்தையும் தத் ஸ்வரூபப் பிரகாசமான திவ்விய மங்கள விக்கிரகத்தையும் ததாதேயமான திவ்விய குணங்களையும் அனுபவித்து அவ்வனுபவ ஜனிதப் பிரீதி உள்ளடங்காமல் வேத சதுஷ்டயத்தையும் இயற்பாவாகத் திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி என்கிற திவ்வியப் பிரபந்தத் திரயத்தாலே ருக் யஜுர் அதர்வணம் என்கிற வேதத்தின் சாரார்தத்தையும் அருளிச் செய்து, 'வேதராணாம் சாம வேதாஸ்மி' என்று கீதோபநிஷதாசாரியன் தானாகச் சொல்லப்பட்ட சாமவேத சாரார்தத்தை சரமப் பிரபந்தமான திருவாய் மொழியாலே அருளிச் செய்து, 'மிக்க வேதியர் வேதத்தினுட் பொருள் நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்' என்கிறபடியே தேவு மற்றறியாத ஸ்ரீமதுரகவி ப்ரப்பிருதிகளாக

* மதுரகவிகள் வரலாறு நூலின் பின்பகுதியில் விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

சஜ் ஜனங்கள் திருவுள்ளத்திலே அறியக் கற்றுவல்லராம்படி பிரதிஷ்டிப்பித்து, ஊரும் நாடும் உலகும் தம்மைப் போலே யாக்கி, புஷ்ய த்யாக போக மண்டபம் தொடக்கமான திவ்விய தேசங்கள் எம்பெருமான்களும் திருப்புளியாழ்வாரடியிலே எழுந்தருளி இவ்வாழ்வார்க்குத் திருமுகப்ரதானம் பண்ணித் தாங்களும் எம்பெருமானுளனாகவே என்கிறபடியே ஸத்தைப் பெற்று நிற்க, நித்திய சூரிகளும் சுவேத த்வீப வாசிகளும், இவ் வாழ்வாரையும் வைபவத்தையும் காண்கைக்காக வந்து நிற்க, அவர்களையும் சேவித்துப் பொலிக பொலிக என்று மங்களா சாசனம் பண்ணி, இப்படியிருந்துள்ள ஸ்ரீவைஷ்ண ஸம்ருத்திக்கு மங்களங்களை ஆசாஸித்து அவர்கள் வைபவத்தை யறிந்து அனுபவித்த தமக்கு மாறுளதோ விம்மண்ணின் மிசையே என்றும், இனியாவர் நிக அகல்வானத்தை என்றும், 'யான் பெரியன், நீ பெரியையென்பதனை யாரறிவார்' என்றும் பெரு மானோடே மார்தட்டியேறி என்றும், இப்படி உபயவிபூதி யிலும் தமக்கு சத்ருசர் இல்லாத பிரபாவத்தை யுடையராய், 'உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' என்றும் பால்யாத் பிரப்ருதி பகுவத்குணைக தாரக ராயிருக்கிற இவ்வாழ்வார் சகலவேத சாஸ்திரங்களிலும் சொல்லப் படுகிற அர்த்த பஞ்சகத்தையும், மந்திர சிரேஷ்டமாகச் சொல்லப் படுகிற சர்வ வேத சாஸ்தர சாபூத சரணாகதி மந்திரார்த்தத்தையும், சரமப் பிரபந்தமான திருவாய் மொழியிலே சுவ்யக்தமாம்படி யருளிச் செய்து, பரபக்தி பரஞ்ஞாந பரம பக்திகளையுடைய ராய்க் கொண்டு தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொல்லி அவாவற்று வீடு பெற்றருளினார்.

பின்னர் மதுரகவி யாழ்வார் நம்மாழ்வாருக்கு உற்சவம் முதலியன செய்து, அவருடைய பாசுரங்களை எங்கும் பரவச் செய்தார் என்பது அவர் வரலாற்றில் சொல்லப்படும். ஆழ்வார் 35 ஆண்டுகள் பூவுலகில் வாழ்ந்தார் என்று சொல்வர்.

'செத்ததின் வயிற்றிலே சிறியது பிறக்கையாவது, செத்தது என்பது அசித்து, அப்ராணிமத்தாய்ச் சடமாயிருக்கையாலே, அதன் வயிற்றிலே சிறியது பிறக்கையாவது, சரீரத்தோடே ஆத்மாவுக்குண்டான சம்பந்தத்தை, சிறியதாவது, அணுபரி மாணமாயிருக்கிற ஆத்மாவைச் சொல்லுகிறது. சரீரத்தோடே ஆத்மாவுக்கு சம்பந்தம் உண்டானால், அதற்குப் போக்கியமும், அசித்கதமாயிருக்கிற சுகதுக்கங்கள், அத்தை தின்று அங்கே

கிடக்கையாவது, சரீரகதமாயிருக்கிற சுகதுக்காதிகளைப் புசித்துக் கொண்டு சரீரத்தையே ஆசியிரத்துக் கொண்டிருக்கை.'*

நம்மாழ்வார் பகவானது அம்சமும் ஸ்ரீகௌஸ்துபத்தினது அம்சமும் சேனை முதலியாரது அம்சமுமாக அவதரித்தார் என்பது வைணவ சம்பிரதாயம். நம்மாழ்வார் என்பது மிகவும் பொருள் பொதிந்த சொல்; என்னாழ்வார் எங்களாழ்வார்❖ என்று சொல்லாதபடி நம்மாழ்வார் என்று சொல்வதில், இவர் உலகனைத்துக்கும் ஞான உபதேசம் செய்கின்ற ஆழ்வார் என்று அனைத்தையும் தழுவிய பொருள் பிறக்கிறது. நம்பெருமாள் என்ற திருமாலின் அருமைத் திருநாமம் போல, நம்மாழ்வார் என்ற பெயரும் அமைந்துள்ள நாமநயத்தை மணவாள மாமுனிகள் ஒரு பாடலில் கூறுகிறார் (உபதேச ரத்தினமாலை 50).

**நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை**
**என்ப தவரவர்தம் ஏற்றத்தால்.**

ஆழ்வார்கள் வரலாற்றில் ஒரு நியதி புலப்படுகிறது. இவர்கள் தொண்டை நாட்டில் நால்வர், சோழ நாட்டில் மூவர், சேரநாட்டில் ஒருவர், பாண்டி நாட்டில் நால்வர் எனத் தோன்றியிருக்கிறார்கள். பின்னுள்ள அட்டவணையைப் பார்த் தால் இது நன்கு விளங்கும். முதலாழ்வார் மூவரும் மழிசை யாரும் தொண்டை நாட்டில் தோன்றினார்கள். முதலாழ்வார் காலத்தில் பாண்டி நாட்டில் களப்பிரர் ஆதிக்கம். இயல்பாக இது அந்நாட்டில் சைவ வைணவப் பெரியார் யாரும் தோன்ற இடங்கொடுக்காத நிலை. தமிழ்நாட்டின் வடஎல்லையில் முத லாழ்வார் தோன்றியமை போலே, தென் கோடியில் நம்மாழ் வார் பொருநைக்கரையில் தோன்றி, வடக்கிலிருந்து தென் கோடி, வரையில் சிறந்த பக்திப் பிரவாகமும் ஞான வெள்ளமும்

---

* செத்தது - உடல்; இது மூலப் பிரகிருதியின் விகாரம்; அறிவற்றது. ஆதலால் செத்தது. சிறியது உயிர்; அணுவடிவுடையது, இது உடல் முழுவதும் தன் ஞானத்தால் வியாபித்து நிகழ்ச்சிகளை அறிகிறது. ஆகவே சிறியது. பிறத்தல் - உயிர் தன் வினைகளுக்கேற்ப உடம்பை அடைதல். இவ்வாறு உடலடைந்த உயிர் எதை அனுபவித்துக் கொண்டு எங்கே இருக்கும் என்பது கேள்வி. உயிரானது தன் வினைப்பயனை அனுபவித்துக் கொண்டு அவ்வுடம்பிலேயே இருக்கும் என்பது விடை. வினைப்பயனை அனுபவித்து முடியும் வரை உயிர் உடம்பிலேயே இருக்கும் என்பது கருத்து.

❖ இராமானுசர் சீடராக எங்களாழ்வான் என்று பெயருடைய ஒரு ஆசாரியர் வாழ்ந்தார் என்று குரு பரம்பரை கூறும்.

பெருக்கெடுத்து அலை மோதிக் கரை புரளுமாறு செய்துள்ள வரலாற்றின் நயம் சிந்தித்து அனுபவிக்கத்தக்கது.

நம்மாழ்வார் தம்முடைய பெருநூலில் எங்கும் தம்மைப் பற்றியோ உடன்காலத்து நிகழ்ச்சிகள் பற்றியோ எந்தக் குறிப்பும் தரவில்லை. இதில் வியப்புக்கு இடமில்லை. இவர் திருப்புளி யின் கீழ் இருந்து தம் பாசுரங்கள் அனைத்தையும் அருளிச் செய்தார் என்பது வரலாறு. ஆதலினாலே இவர் பாடலில் எந்தச் சரிதக் குறிப்பும் அமையவில்லை. அன்றியும் இவர் 'வாய் கொண்டு மானிடம் பாடவந்த கவியேன் அல்லேன்' (3217) என்று கூறுகிறார். எனினும் ஒரே ஒரு குறிப்பு உண்டு. சிரீவரமங்கை, வர குண மங்கை என்ற இரு தலங்களையும் இவர் மங்களா சாசனம் செய்திருக்கிறார். இத்தலங்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்பைப் பின்னே காலம் என்ற தலைப்பில் எடுத்துக் காட்டுவோம்.

ஆழ்வார் ஓதாதுணர்ந்தவர். குழவிப் பருவம் முதலே எம் பெருமானிடத்துக் கரையற்ற அன்பு பூண்டு அந்தப் பக்தி அனுபவம் ஒன்றிலேயே தோய்ந்திருந்தார்; இதை 'அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து - அறியா மாயத்து அடியேனை வைத்தாயால்'(2-3-3) என்று இவரே கூறு வது குறிப்பிடுகிறது என்று பெரியோர் கொள்வார்கள். மற்றும் இவர் தம்மை மாறன் என்று குறிப்பிடுவதாலும் (திருவிருத்தம், 100, திருவாய் மொழி - 2-5-11, 4-5-11, 4-7-11, 4-10-11, 5-2-11, 9-9-11, 10-2-11) சடகோபன், வழுதிநாடன் எனப் பலமுறை கூறியிருப்பதாலும், நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன் (4-10-11) என்று பாடியிருப்பதாலும் இவருடைய வரலாற்றுக்கு ஆதரவு கிடைக்கிறது என்று கருதுவர்.

ஏழாட்காலும் புறந்தொழாமே குடி குடியாட் செய்யும் தொண்டர் குலம் என்பதற் கேற்றவாறு, அடுத்துத் திருவழுதி வள நாடர் தொடங்கிப் பொற்காரியார் வரை ஏழு தலை முறைகளை வரலாறு விரித்துரைப்பது காணத்தக்கது.

### வரலாற்றாராய்ச்சி

நம்மாழ்வார் உறங்காப் புளியின்கீழ் யோகத்தில் எழுந் தருளியிருந்தார். மதுரகவிக்கும் அந்த இடத்திலேயே அருள் செய்தார். திவ்விய தேசத்து எம்பெருமான்கள் அனைவரும் அங்கேயே எழுந்தருளி வந்து இவருக்குத் தரிசனம் தர, இவர் அவர்களை அவ்விடத்திலிருந்தே பாடினார் என்பது சம்பிர

தாயமான வரலாறு. இதை அறிவியல் உலகம் ஏற்றுக் கொள்ளு தல் அரிது. ஆழ்வாருடைய அசாதாரணமான பெருமையை உணர்த்துவதற்காகவே வரலாறு இந்த உருவத்தில் அமைக்கப் பட்டது என்றே நாம் கருதவேண்டும். இவருடைய பாடல்கள் நமக்கு உணர்த்தும் வரலாற்றுக் குறிப்புக்களை நாம் கருதலாம்.

புளியின் கீழ்மட்டும் ஆழ்வார் இருந்தார் என்றால், எத்தனையோ செய்திகளை அவர் சொல்லியிருக்க முடியாது. 'சொன்னால் விரோதம், ஆகிலும் சொல்லுவன்' என்று இவரால் எண்ணிச் சொல்ல இயலாது. அகப்பொருளாக, சிறந்த பிற் காலக் கோவையிலக்கியம் போல, திருவிருத்தம் முழுமையும் பாடியிருக்கிறார்; திருவாய்மொழியில் 28 பதிகங்கள் பாடி யிருக்கிறார். வெளியுலகை வந்து காணாதவர் என்றால் இந்தப் பாட்டுக்கள் இவரிடம் நிச்சயம் உதித்திருக்க முடியாது. பகவான் இவருக்கு உள்ளிருந்து உணர்த்தி அந்த அனுபவ விசேஷத் தால் மட்டும் இவர் பாடினால், அதில் தத்துவப் பொருள்கள் உதிக்குமேயன்றி, காதற் பொருள்கள் உதிக்க நியாயமில்லை என்று நாம் கருதுவோம். 'திருவுடை மன்னரைக் காணில் திரு மாலைக் கண்டேனே என்னும்' என்று பாடுகிறார். இக்கருத்து, உண்மையாக உலக வாழ்க்கையில் திருவுடை மன்னரைக் கண் டமையால் வந்ததாகும். புறக்கண்ணால் காணாமல் அகத்தில் மட்டும் இப்படி மன்னரைக் கண்டு திருமால் என்று சொல்வ தாகிய கருத்து எழாது.

இவர் பாடியுள்ள தலங்களும் ஒரு பொருளை நமக்கு உணர்த்துகின்றன. திருக்குருகூரைச் சூழ்ந்துள்ள ஒன்பது தலங் கள் நவதிருப்பதிகள் என்று பெயர் பெறும். இவர் பாடிய கார ணத்தால் அவை சிறப்படைந்தன; (அவையாவன திருக்குருகூர், துலைவில்லி மங்கலம்(இரட்டைத் திருப்பதி), திருப்புளிங்குடி, தென்திருப்பேரை, சீவைகுண்டம், திருக்குளந்தை, வரகுண மங்கை, திருக்கோளூர் என்பன. இவையாவும் தாமிரபருணிக் கரையில் நெருங்கியுள்ளன. இவையன்றி, திருக்குறுங்குடியையும் சீவரமங்கை என்னும் வானமாமலையையும் இவர் பாடியிருக் கிறார். திருக்கோளூர் மதுர கவியாழ்வார் அவதாரத்தலம், திருக்குறுங்குடி நம்பியின் அருளால் தான் ஆழ்வார் பிறந்தார் இவற்றைப் பார்க்கும் போது அருகிலுள்ள இந்த ஸ்தலங்களுக்கு இவர் சென்றே பாடினார் என்று கருத வேண்டும்.

இவை யொத்தனவே மலைநாட்டுத் திருப்பதிகளும். மலை நாட்டுத் திருப்பதிகள் 12; இவை யாவும் மலையாள நாட்டில் உள்ளன. இவருடைய தாயார் பிறந்த ஊர் திருவண் பரிசாரம். ஆழ்வார் அங்குச் சென்று வழிபட்டுப் பாடினார் என்றும், அச்சமயம் பிற மலைநாட்டுத் திருப்பதிகளையும் வணங்கிப் பாடினார் என்றும் கருத வேண்டும். பாண்டி நாட்டில் இவர் பாடிய வேறு தலங்கள் திருமாலிருஞ்சோலை மலையும் திரு மோகூரும். சோழ நாட்டுத் தலங்கள், எல்லோரும் பாடும் கோயிலாகிய திருவரங்கமும், குடந்தையும் கண்ண புரமும் திரு விண்ணகரும் திருப்பேர் நகரும். தொண்டை நாட்டில் திரு வேங்கடம் இவை பதிகங்களாக உள்ளன. யாவும் அந்தாதி யாக இருத்தலால், ஆழ்வார் இத்தலங்களைத் தரிசித்தபின் தமது திருக்குருகூரில் தங்கிய காலத்து, இத்தலத்துக்கு எம்பெருமான் களை நினைவுகூர்ந்து பதிகங்கள் பாடினார் என்று கருதுவர். வடக்கே திருவேங்கடம் வரை இவர் யாத்திரை சென்று தரிசித் திருக்கக் கூடும் என்பதும் உண்மையாக இருக்கலாம். வட நாட்டுத் தலமான வட மதுரையும் பூவுல்குக்கு அப்பாற்பட்ட பாற்கடல் பரமபதமும் இருந்த இடத்திலிருந்தே பாடியவை.

மேலும், இவர் பாடியதாகக் குறிப்பிட்ட தலங்களுள், திருக்குளந்தை, திருவண்பரிசாரம் (திருப்பதிசாரம் என இப்போது வழங்குவது) வரகுணமங்கை என்ற மூன்றுக்கும் பதிகம் இல்லை, பாடல் மட்டும் உள்ளது.

பரமபதத்திலுள்ள ஆதிசேஷன், ஆழ்வாருக்கு நிழல் தரும் பொருட்டுப் பூவுலகில் வந்து திருப்புளியாழ்வாராக அவதரித்து வளர்ந்து நின்றான். ஏன் புளியாக வரவேண்டும், புளியில் என்ன விசேஷம்? விளக்கமில்லை. வேறெத்தனையோ மரங்கள் உள்ளனவே, மகிழ மாலையை அணிந்ததனால் வகுளாபரணர் என்று ஆழ்வார் பெயர் பெறக் காரணமாயிருந்த வகுளம் (மகிழ்) இருக்கிறது; இன்னும் பல. மேலும் வைணவத்தில் தலத்துக்கு விருட்சம் குறிப்பிடும் சம்பிரதாயமில்லை. ஆதலால் ஏதோ ஒரு மரமாக வந்து நின்றார், அம்மரம் புளி என்றுதான் கொள்ள வேண்டும் போலும். புளி பெரிதும் வெப்பம் தருவது, புளியின் கீழ்த் தங்கலாகாது என்று சொல்வது இன்றும் உலக வழக்கு. ஆழ்வார் உலகியல்பைக் கடந்தவர் என்று காட்டவே புளி வரு விக்கப்பட்டது போலும். திவ்விய தேசத்து எம்பெருமான்கள்

புளியின் இலை பூ காய் கிளை காம்பு ஒவ்வொன்றிலும் வந்து தங்கி ஆழ்வாருடைய பாசுரங்களைக் கேட்டு இன்புற்றமையால் புளியானது திருப்புளியாழ்வார் எனப்பட்டது என்பர்.

காரிப்பிரான் புதல்வர் திருப்புளியினடியில் மதுரகவி வருமளவும் வாய் திறவாமல் கண் திறவாமல் இருந்தார். திருக் குருகூருக்கு அடுத்ததாகிய (இவருடைய மங்களா சாசனம் பெற்ற) சீவைகுண்டத்திலும் பிற்காலத்தில் இப்படியொரு வரலாறு; குமரகுருபர சுவாமிகள் இங்கு பிறந்து ஐந்து வயதளவும் வாய் பேசாதிருந்து பின் முருகனருளால் பேசும் ஆற்றல் பெற்றுத் திருச்செந்தூர்க் கலி வெண்பா பாடினார் என்பது அவருடைய வரலாறு.

நம்மாழ்வாரிடம் வைணவப் பெருமக்களுக்கு வந்த ஈடுபாடு அவர் எழுந்தருளியிருந்த புளிக்கும் சென்றிருக்கிறது. வெறும் புளியமரம் என்று சொல்ல நாவெழவில்லை. அது திருப்புளியாயிற்று. காலம் செல்லச் செல்ல, திருப்புளியாழ் வாரும்* ஆயிற்று. பின்வந்த ஆசிரியரொருவர்❖ இப்புளியினிடத்து ஈடுபட்டுப் பின்னும் சொல்லுகிறார். வைணவ சம்பிரதாயத் தைக் காத்து வரும் யோகிகள் போல இப்புளி இரவும் பகலும் உறங்காதாம்.

– திருமால்

அறங்காக்கும் யோகிகள் போல் அல்லும் பகலும்
உறங்காப் புளிதானும் உண்டு.

### திவ்விய சூரி சரிதம்

சில விவரங்களில் வடமொழித் திவ்விய சூரி சரிதம் பின்பழகியார் குரு பரம்பரையினின்று வேறுபடுகிறது. அது பொருந்துவதன்று என்று கருதித்தான் பின்னர் நூல் செய்த பின்பழகியார் தம் வரலாற்றைச் சிறிதே மாற்றி எழுதியிருக்க வேண்டும். முந்திய நூலில் கண்ட வேறுபாடுகளை மட்டும் இங்கே குறிப்பிடுகிறோம்.

நம்மாழ்வார் முன்னோர் பெயர்களில் தர்மதரன் ரத்ன தரன் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. மதுரகவி கல்லைப்

---

* திருஞான சம்பந்தர் திருவாக்கினால் பெண்பனையாக்கப் பெற்ற ஆண் பனைகள், காலகதியில் சிவமே கூடின என்பது அவருடைய புராணம்.

❖ பலபட்டடைச் சொக்கநாதப் புலவர், அழகர் கிள்ளை விடுதூது.

போட்டுச் செத்ததின் வயிற்றில் என்ற கேள்வி கேட்கவில்லை; அவர் வருவதறிந்து சடகோபர் தாமாகவே வந்து காட்சி தரு கிறார். பெரியாழ்வார் ஆண்டாள் திருமணத்தை நம்மாழ்வார் தலைமையில் திருக்குருகூரில் பெரிய சுயம்வரமாக நடத்துகிறார். அதற்கு 108 திவ்விய தேச எம்பெருமான்களும் வந்து சேரு கிறார்கள். ஆழ்வார்களில் திருப்பாணாழ்வார் திருமங்கை யாழ்வார் தவிர* ஏனையோர் அனைவரும் வருகிறார்கள். திரு மணம் நம்மாழ்வார் திருமாளிகையில் முடிந்து அரங்கநாதன் திருவரங்கம் அடைந்ததும் திருஅத்யயன உற்சவம்; அதற்கு அரங்க நாதனிடமிருந்து திருக்குருகூருக்குத் திருமுகம் வருகிறது.

**சில கதைகள்**

நம்மாழ்வார் தம் காலத்திலிருந்த சங்கத்தாருக்குப் பொருள் காணும்படி ஓர் ஆசிரியப் பாவை எழுதி விடுத்தாரென்றும், அவர்கள் அதைப் பொருள் காணமுடியாது விழித்தார்கள் என்றும் பின்வரும் பாடல்❖ காட்டப்படுவது உண்டு.

அண்ட கோளத் தாரணு வாகிப்
பிண்டம் பூத்த பேரெழி லொருமை
ஈருயிர் மருங்கின் ஆருயிர் தொகுத்து
நித்திலத் தன்ன வெண்மணல் பரப்பி
வேரும் வித்தும் இன்றித் தானே
தன்வலி யறியாத் தொன்மிகு பெருமரம்
மூவழி முப்பழம் முறை முறை தருதலின்
ஒன்றுண் டொண்சுவை தருவது, மற்றது
கல்லி லெழுந்து கடலிலழுந்தி
அறுகாற் குரவன் நீரற விளைக்கும்
நிறைபொழிற் குப்பை தறுகட் பொன்றுவித்து
அறுகோட் டாமா விளைக்கும் நாடன்
அவனே தலையிலி, அவன் மகள் முலையிலி,
தானும் ஈனாள், ஈனவும் படா அள்
எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்
அவள் இவள் உவளென் றறிதல்
துகளறு காட்சிப் புலவரது கடனே.

---

* இதன் காரணம் சிந்திக்கத்தகுந்தது. நம்மாழ்வார் வேளாளர், அவர் சந்நிதியில் கல்யாணம். பாணரும் திருமங்கையும் 'சூத்திரர்கள்' ஆகவே அவர்களுக்கு அழைப்பில்லை போலும்; குலசேகரர் க்ஷத்திரியர், பிறர் அனைவரும் பிராமணர் என்பது கதை.

❖ செந்தமிழ் தொகுதி 3, பக்கம் 405; பெருந்தொகை 1825.

'வேத வேதாந்தங்களின் முடிந்த பொருளை இவ்வரிய பாடல் விளக்குவதென்பது நல்லறிஞர் வாய்க் கேட்டறியத் தக்கது' என்பது மு. இராகவையங்கார் குறிப்பு. பிற்காலத்தில் நம்மாழ்வாரைச் சிறப்பிக்கவென்றெழுந்த கதைகளில் இதுவு மொன்று. கூடற்புராணப் பாயிரமும் இதைக் கூறும்.

நம்மாழ்வார் பாடல்கள் ஆயிரத்தில் ஒரு சொல் கூடப் பெறமாட்டா உலகிலுள்ள கவிகள் என்று ஒரு பழம் பாடல் சொல்லும். இதை மதுரகவியோடு தொடர்புபடுத்தி, அவர் சங்கத்தில் நம்மாழ்வார் பாடல்களைப் பலகை மீது இட்டார், பலகை எல்லோரையும் நீருள் வீழ்த்தி ஆழ்வார் பாடலை மட்டும் தாங்கி மிதந்தது. புலவர்கள் வெட்கி இந்தத் தெய்வப் புலவர் முன்னே நாம் எந்த மூலை என்று எண்ணி மனம் குமைந்து பின்வரும் பாடலைப் பாடினார்கள் என்று ஒரு தனிப்பாடல் சொல்லப் பெறும்:

ஈயா டுவதோ கருடற் கெதிரே,
இரவிக் கெதிர் மின் மினியா டுவதோ,
நாயா டுவதோ உறுவெம் புலிமுன்,
நரிகே சரிமுன் நடையாடுவதோ,
பேயா டுவதோ அழகூர் வசிமுன்,
பெருமான் வகுளா பரணன் அருள்கூர்ந்து
ஓவா துரைஆ யிரம்மா மறையின்
ஒருசொற் பெறுமோ உலகிற் கவியே?

மேலும் அவர்கள் தாங்கள் செய்த அபசாரத்துக்கு வருந்தி நம் மாழ்வாரை ஒவ்வொருவரும் தனியொரு பாடலால் துதித்தார் களாம்: அத்தனைப் புலவர் நாவிலிருந்தும் வெளிப்பட்ட பாடல் பின்வரும் ஒரே பாடலாயிருந்ததாம்.

சேமம் குருகையோ, செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசனோ, நாரணனோ? – தாமம்
துளவோ, வகுளமோ? தோளிரண்டோ, நான்கும்
உளவோ, பெருமான் உனக்கு?

என்று திருமாலுக்கும் ஆழ்வாருக்கும் வேறு காணாத நிலை யாகப் பாட்டு வெளிப்பட்டதென்பர். இவ்வரலாறு உண்மைக்குப் பொருத்தமில்லாது போயினும் பாடல்கள் ஆழ்வார் பாசுரத் தைச் சிறப்பித்துரைப்பது வெளிப்படை. இதே சமயத்தில்

*சங்கத்தார் பாடினார்கள் என்று பின்வரும் பாடலொன்றும் சொல்லப்படும்.*

நீயே அறிவை, நினதகத் தேநிற்கும் நேமியங்கை
யாயே அறியும், மற் றாரறிவார்: அடி யோங்களுக்குத்
தாயே, பொருநைத் திருக்குரு கூர்த் தமிழ்க் காரிபெற்ற
சேயே, நினது திருவாய் மொழியின் செழும்பொருளே.

*பின்வரும் இரு பாடல்களும்* முறையே அவ்வை வாக்கென்றும் இடைக்காடர் வாக்கென்றும் சொல்வர்.*

ஐம்பொருளும் நாற்பொருளும் முப்பொருளும் பெய்தமைத்த
செம்பொருளை எம்மறைக்கும் சேட் பொருளைத் – தண்குருகூர்
சேய்மொழிய தென்பர் சிலர், யான் இவ்வுலகின்
தாய்மொழிய தென்பேன் தகைந்து.

சேய்மொழியோ வாய்மொழியோ செப்பில் இரண்டுமொன்றவ்
வாய்மொழியை யாரும் மறையென்ப – வாய்மொழியால்
ஆய்மொழிகள் சாலஉளவெனினும் அம்மொழியின்
தாய்மொழி என் பேன்யான் தகைந்து.

*ஒரு நாய் முத்தி பெற்ற சரிதமொன்று, திருவாய்மொழி சம்பந்தமாகச் சொல்லப்படும். ஆழ்வார் திருநகரியில் தாமிரபருணியின் வடகரையில் வசித்து வந்த சித்தரொருவர், தம்மால் வளர்க்கப்பட்ட நாய் பகற்போதில் அந்நதியைக் கடந்து அத்திருநகரித் தெருவில் உள்ள உச்சிட்டங்களை உண்டு மாலையில் திரும்பி வந்து கொண்டிருக்க, ஒருநாள் அங்ஙனம் அது திரும்பி வராததை அறிந்து அவர் ஆற்றங்கரை சென்று நோக்கிய போது, வழக்கப்படி அது ஆற்றைக் கடந்து வருமிடையில் பெருவெள்ளம் வந்து அதனை இழுத்துச் செல்வதையும் அந் நாய் கூடியவரை முயன்றும் செயலற்று நீரில் அமிழ்ந்திறக்கும் தருணத்தில் சிரக்கபாலம் வெடித்து அதன் ஆத்மா வெளிப் பட்டு விமானத்தில் ஆரோகணித்துச் செல்வதையும் கண்டு*

---

* *இவ்விரு பாடல்களையும் அவ்வை இடைக்காடர் மேல் ஏற்றிச் சொல்வதற்கு ஒரு காரணம் இருக்கும் போலும். திருக்குறளைச் சிறப்பித்து இடைக்காடர் 'கடுகைத் துளைத்து' என ஒரு பாடல் பாட, அவ்வை அதை அணுவைத் துளைத்து எனத் திருத்தினார் என்று ஒரு கதை உண்டு. அதேபோல, ஒரே மாதிரியான கருத்தும் சொல்லும் அமைந்த இவ்விரு பாடல்களும் அதே இருவர் மேல் ஏற்றப்பட்டனவாகலாம்.*

பெருவியப்பும் உவப்பும் அடைந்து இப்பாடல் கூறினார். தாமிரபருணியின் மத்தியிற் கட்டப்பட்ட மண்டபமொன்றில் மேற்கூறியவாறு நாயொன்று வீடு பெற்ற சரித்திரம் கற்றூணிற் பொறிக்கப்பட்டதென்றும் தெரியவருகிறது.*

**வாய்க்கும் குருகைத் திருவீதி எச்சிலை வாரியுண்ட**
**நாய்க்கும் பரம பதமளித் தாய், அந்த நாயொடிந்தப்**
**பேய்க்கும் இடமளித் தாற் பழுதோ, பெரு மான்மகுடம்**
**சாய்க்கும் படிக்குக் கவிபாடும் ஞானத் தமிழ்க்கடலே?**

எம்பெருமானார் திருக்குருகையை நெருங்கியபோது தம்முடைய ஈடுபாட்டின் மிகுதியால் அதைப் பரமபதமாகவே கண்டு ஒரு பாடல் பாடினார் என்று வரலாறு கூறும்.

**இதுவோ திருநகரி, ஈதோ பொருநல்,**
**இதுவோ பரமபதத்தெல்லை? – இதுவோதான்**
**வேதம் தமிழ்செய்து மெய்ப்பொருட்கும் உட்பொருளாய்**
**ஓதும் சடகோபன் ஊர்?**

பிற்காலத்தில் ஆசாரியராய் வரப்போகிற இராமானுசரின் பிரபாவத்தை முன்கூட்டியே பெரிய பெருமாள் முதலான எம்பிரான்களும் நம்மாழ்வார் நாத முனிகள் ஆளவந்தார் ஆகிய ஆசாரியர்களும் சொல்லியிருக்கிறார்கள் என்று காட்டுவதில் வைணவர்களுக்கு விருப்பம் அதிகம். குரு பரம்பரை முறையாக இக்கூற்றுக்களை எடுத்துக் காட்டுகிறது. இவற்றுள் நம்மாழ்வாரைக் குறித்தவை பின்வருவன. "நம்மாழ்வார் வெளியிட்டபடி எங்ஙனே என்னில், லோகத்தைத் திருத்துவதாக எம்பெருமானோடே மார்தட்டி 'நின்கண் வேட்கை எழுவிப்பனே' (திரு விருத்தம் 96) என்றவர் தாமே, 'ஏ பாவம் பரமே' (3021) என்று க்லேசித்து, 'அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்த லாவதே' (பெரிய திருவந்தாதி 25) என்று ஈசுவரன் அவதரித்துத் திருத்த வொண்ணாத லோகத்தை நாமோ திருத்தக் கடவோம் என்று கை வாங்கி, 'யானும் என் நெஞ்சும் இசைந்தொழிந்தோம்' (பெ.தி.26) என்று தாமும் தம் திருவுள்ளமுமேயாய், த்ரிகால ஞானராகையாலே, 'கலியும் கெடும் கண்டு கொள்மின்' (3352) என்று உடையவர் திருஅவதாரத்தைக் குறித்து அருளிச் செய்கையாலும்" நம்மாழ்வருக்கு இருநூறு ஆண்டுகளுக்கும் அதிக

* குருபரம்பரா ப்ரபாவம் பன்னீராயிரப்படி (1928) பக்கம் 408.

மாகப் பிறப்பட்டுத் தோன்றியவர் இராமானுசர் என்பது நினைவில் இருத்தத்தக்கது.

ஆழ்வார் பாடிய திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழி என்ற நான்கு நூல்களும், முறையே ருக் யஜுஸ் அதர்வம் சாமம் என்ற நான்கு வேதங்களில் சாரமாக அருளிச் செய்யப்பட்டவை என்று பிற்காலத்து ஆன்றோர் கருதினர் என்று குறிப்பிட்டோம். பிற்கால வைணவத்தில் வடமொழி பெரும் ஆட்சி செய்யத் தலைப்பட்டமையால், நம்மாழ்வாரைச் சொல்லும் போது கூட, வைணவர்களுக்கு, வடமொழியோடு தொடர்புபடுத்திச் சொல்லாமல் இருக்க முடிவதில்லை. அவர்கள் கருத்தில் நம்மாழ்வார் தமிழ்ப்பாசுரம் என்று சொல்வதிலும், அது வேதசாரம் என்று சொல்வதே அதிகம் பெருமையுடையது. அவர் பெயரும் இதையொத்ததே. அவர்கள் நம்மாழ்வார் என்று அதிகம் சொல்ல மாட்டார்கள். சடகோபன் என்று சொல்வதிலேதான் மோகம். இந்த நிலையை இந்த நூற்றாண்டின் முற்பாதி வரையில் வந்த எல்லா வைணவ நூல்களிலும் பார்க்கலாம். மகிழ் ஆழ்வாருடைய தார் ஆனமையால், மகிழ்மாறர் வகுளாபரணர் என்றும் அவர் போற்றப் பெறுவர்.

ooo

## 2. நம்மாழ்வார் நூல்கள்

நாலாயிரத்துள் நான்கு பிரபந்தங்கள் நம்மாழ்வார் பாடியவை. அவை முறையே திருவிருத்தம், திருஆசிரியம், பெரிய திருஅந்தாதி, திருவாய்மொழி என்பன. நாலாயிரப் பிரபந்தங்கள் நான்கு ஆயிரமாகப் பிரிக்கப்பட்டிருக்கும். முதலாயிரம் இசைப்பா. இரண்டாவது பெரிய திருமொழி என்னும் திருமங்கை மன்னன் பாசுரங்கள் - திருமடல்கள், எழுகூற்றிருக்கை நீங்கலாக. மூன்றாவது ஆயிரம், திருவந்தாதிகள், நம்மாழ்வாருடைய முதல் மூன்று பிரபந்தங்கள், திருமடல்கள், திருவெழுகூற்றிருக்கை என்பன கொண்டது. இப்பகுதி மட்டும் இயல் தமிழ் என்று கருதப்பட்டமையால் இது இயற்பா என்று பெயரிடப்பட்டது. நான்காவது ஆயிரம், நம்மாழ்வாருடைய திருவாய்மொழி ஒன்றுமே கொண்டது. உடன் வைத்துள்ள அட்டவணை நாலாயிரப் பிரபந்தத் தொகையைக் காட்டும். திவ்வியப் பிரபந்தங்களுள் இவரே அதிகம் பாடல்கள் பாடியவர். இவர் நால்வகைப் பாக்களைப் பாடியுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது; ஆசிரியப்பா-திருஆசிரியம்; வெண்பா-பெரிய திருவந்தாதி; கலிப்பா-கட்டளைக் கலித்துறை; திருவிருத்தம்; விருத்தப்பா-திருவாய் மொழி. பண்டைய பாவாகிய வஞ்சிப்பா சங்க காலத்திலேயே ஆட்சியொழிந்தது. நான்கு பிரபந்தங்களும் அந்தாதி; திருவாசிரியம் மண்டலிக்கவில்லை; மற்றும் மூன்றும் மண்டலித்து வரும்.

### திரு விருத்தம்

கட்டளைக் கலித்துறையாலான 100 பாடல்கள்; அந்தாதித் தொடை. கட்டளைக் கலித்துறை 7-9 நூற்றாண்டுகளில் விருத்தம் எனப்பட்டது என்று அப்பர் திரு விருத்தத்தாலும் அறிகிறோம். இது சீவாத்மா பரமாத்மா தொடர்பினை நன்கு விளக்குவது என்பர். ‘இமையோர் தலைவா, அடியேன் செய்யும் விண்ணப்பம் கேட்டருளாய்’ என்று தொடங்கி, குருகூர் நகரான் மாறன் விண்ணப்பம் செய்த இந்நூறும் வல்லார் பிறப்பாம் வினைச் சேற்று அள்ளல் பொய்ந் நிலத்தே அழுந்தார்’ என்று முடிக்கிறார். விண்ணப்பம் என்று முதலிலும் கடையிலும்

இவ்வாறு சொல்லியிருப்பினும், நூல் இடையிலுள்ள பாட்டு ஒன்றில் கூட விண்ணப்பம் இல்லை. எல்லாப் பாடல்களும் அகத்துறையே, யாவும் தலைவி தலைவன் தோழி முதலியோர் கூற்றுக்களே, எனினும், இதன்கண் உள்ள பல துறைக் குறிப்புக்கள் வலிந்து செய்தவை போலவே தோற்றுகின்றன. எடுத்துக்காட்டாக, வணங்கும் துறைகள் பல பல ஆக்கி (96) என்ற பாடலுக்குத் துறை, தலைவி வெறி விலக்குவிக்க நினைத்தல் என்று காட்டப்பட்டுள்ளது. இப்பாடல் ஆழ்வாரின் முழுச் சமரச உணர்வை வெளிப்படுத்தும் பாடலேயன்றி, அகத் துறைப் பாடலன்று என்பது, பாடலைப் படிக்கும் போது நன்கு விளங்கும்.

**வணங்கும் துறைகள் பலபல ஆக்கி, மதிவிகற்பால்**
**பிணங்கும் சமயம் பலபல ஆக்கி, அவையவைதோறு**
**அணங்கும் பலபல ஆக்கி, நின் மூர்த்தி பரப்பிவைத்தாய்!**
**இணங்குநின் னோரையில் லாய், நின்கண் வேட்கை எழுவிப்பனே.**

எல்லாச் சமயங்களும் ஒருவன் படைத்தனவே என்ற கருத்தை இங்கு சொல்கிறார். திருஆசிரியம் ஆசிரியப் பாவினால் பெயர் பெற்றது போல, திருவிருத்தமும் (விருத்தக்) கலித்துறைப் பாவினால் இப்பெயர் பெற்றது. விருத்தம் என்னும் சொல்லிற்குச் செய்தி என்று பொருள் கொண்டு, ஆழ்வார் தமது அன்பு மிகுதி முதலிய செய்திகளை ஏறிட்டுச் சொன்ன பிரபந்தமாதலின், திருவிருத்தம் என்று பெயராயிற்று என்று கூறுவர். பாடல்கள் எல்லாமே திருக்கோவை போல அகத்துறையமைதி கொண்ட பாடல்கள். (திருவிருத்தம் என்பது தம்மைத் தலைவியாக (பிராட்டியின் நிலையில்) வைத்துப் பாடிய காரணத்தால், திருமகளின் நிகழ்ச்சியைக் கூறும் நூல் என்றும் சிலர் பொருள் சொல்வர்.)

இதனுள் திருவேங்கடம் பலமுறை சொல்லப்பட்டுள்ளது. பிற தலங்கள் திருப்பாற்கடல், திருவெஃகா, திருவரங்கம், வைகுந்தம். அரிய சொற்களும் செய்திகளும் பல. மதன செங்கோல் நடாவிய கூற்றம், இளந்தெய்வமின்றிது வேல நில் நீ, ஞானச் சுடர் விளக்காய் நின்றது, உரைக்கியம் (உரைப்பம்) கனியின்மையால் கருக்காய் கடிப்பவர், மாதாவினைப் பிதுவை (பிதாவை) என்பன காண்க. தெய்வ நன்னோய் கொண்ட தலைவிக்குத் தலைவனுடைய மாலை வேண்டும் என்ற கருத்தைச் சொல்லும் பாடல் மிக்க பொருள் நயமுடையது (53). கட்டுவிச்சி கூறுதல்,

வாரா யினமுலையாள் இவள்; வானோர் தலைமகனும்
சீராயின தெய்வ நன்னோய் இது; தெய்வத் தண்ணந்துழாய்த்
தாராயினும், தழையா யினும், தண் கொம்ப தாயினும், கீழ்
வேரா யினும், நின்ற மண்ணா யினும், கொண்டு வீசுமினே.

*இப்பிரபந்தம் ருக்வேத சாரம் என்று வைணவர் சொல்வர். ஆழ்வார் தமது ஞானக் கண்ணுக்கு இலக்கான எம்பெருமானை நோக்கி, 'தேவரீரை அனுபவிக்கைக்கு விரோதமா யிருக்கிற இத்தேக சம்பந்தத்தைப் போக்கியருள வேண்டும்' என்று உலகத் தொடர்பை விட்டு நீங்குவதை விரும்பிக் கூறும் முகத்தால் இவ்விருள்தரு மாஞாலத்தில் வாழ்வது தமக்குப் பொறுக்க முடியாத துன்பமாயிருக்கிறதென்பதையும், எம்பெருமானுடைய லீலா விபூதிகளைச் சதா அனுபவிப்பதிலேயே தமக்குக் காதல் மீதூர்ந்திருப்பதையும் சொல்லி வேண்டுவதாயிற்று.*

*திருவிருத்தம் 21 ஆம் பாடல், கண்ணனுக்கு விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபம் தரா நிற்கிறார்கள் என்று கூறுகிறது.*

சூட்டுநல் மாலைகள் தூயன ஏந்தி விண்ணோர்கள் நல்நீர்
ஆட்டி அம்தூபம் தராநிற்கவே, அங்கு ஓர் மாயையினால்,
ஈட்டிய வெண்ணெய்தொடு உண்ணப்போந்து, இமில் ஏற்றுவன்கூன்
கோட்டிடை ஆடினைகூத்து – அடல் ஆயர்தம் கொம்பினுக்கே.

*இதுகொண்டு இப்பாசுரத்தைத் திருமஞ்சன காலத்தில் சேவிக்கும் பாசுரமாகக் கொள்ளும் சம்பிரதாயம் எழுந்திருக்கிறது.*

*94ஆம் பாடலில் 'ஊராமிலைக்கக் குருட்டாமிலைக்கும்' என்ற ஒரு பழமொழியைக் குறிப்பிடுகிறார்.*

மைப்படி மேனியும் செந்தாமரைக் கண்ணும் வைதிகரே
மெய்ப்படியால் உன்திருவடி சூடும் தகைமையினார்
எப்படி ஊர் ஆமிலைக்கக் குருட்டுஆ மிலைக்கும் என்னும்
அப்படியானும் சொன்னேன், அடியேன் மற்றுயாது என்பனே.

*இப்பழமொழி திருவாசகத்திலும் அப்படியே வருகிறது.*

தாரா யுடையாய் அடியேற் குன்தா ளிணையன்பு
பேரா வுலகம் புக்கார் அடியார், புறமே போந்தேன்யான்
ஊராமிலைக்கக் குருட்டாமிலைத் தாங்கு உன்தா ளிணையன்புக்
காரா யடியேன் அயலே மயல்கொண் டழுகேனே.

இது குறித்துக் காலம் என்ற தலைப்பில் பின்னே சில சொற்கள் கூறுகிறோம். மற்றொரு பாடல், உடன்போக்கு என்ற துறைக் குரியது (37).

கொடுங்காற் சிலையர் நிரைகோள் உழவர் கொலையில் வெய்ய
கடுங்கால் இளைஞர்; துடிபடும் கௌவைத்து, அருவினையேன்
நெடுங்கா லமும் கண்ணன் நீள்மலர்ப் பாதம் பரவிப்பெற்ற
தொடுங்கால் ஒசியும் இடை, இள மான்சென்ற சூழ்கடமே.

தலைவியின் மென்மையையும் அவள் சென்ற சுரத்தின் கொடுமையையும் நினைந்து தாய் இரங்குவதே இதன்பொருள். இங்கு, தாய் தன் மகளைத் தான்பெற்ற அருமைப் பாட்டைக் கூறுமுகமாக, நம்மாழ்வாருடைய அவதாரச் சிறப்பு குறிப்பாகச் சுட்டப்படுகிறது என்று கூட அறிஞர் கருதியிருக்கிறார்கள். இது பொருந்துவதா என்பது ஆராயத்தக்கது.

இதற்கு வியாக்கியானங்கள் நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, அழகிய மணவாளசீயர் செய்த ஸ்வாபதேசம், அப் பிள்ளை, பெரிய பரகால சுவாமிகள் என்போர் விரிவான வியாக்கியானங்களும் கோளப்ப ஐயங்காருடைய அரும்பத வுரையும் உள்ளன. இதற்குரிய தனியன் பின்வருவது (கிடாம்பி யாச்சான்):

கருவிருத் தக்குழி நீத்தபின் காமக் கடுங்குழிவீழ்ந்து
ஒருவிருத் தம்புக்கு உழலுறு வீர், உயி ரின்பொருள்கட்டு
ஒருவிருத் தம்புகு தாமல் குருகையர் கோன்உரைத்த
திருவிருத் தத்தோர் அடிகற் றீர், திரு நாட்டகத்தே.

**திரு ஆசிரியம்**

ஆசிரியப் பாவிலமைந்த 7 பாடல்கள். 9 அடிச் சிறுமையும் 15 அடிப் பெருமையும் கொண்டவை. இம்முறையில் ஆசிரியப் பாவால் ஆகிய பிரபந்தத்தைச் சங்க நூலாகிய பதிற்றுப்பத்திலும், பிற்காலத்தில் பட்டினத்தாருடைய திருவொற்றியூர் ஒருபா ஒரு பதிலும் காண்கிறோம். இது, 'செக்கர் மாமுகிலுடுத்து' என்று தொடங்கி, 'மாமாயனையல்லது, தெய்வம் மற்றுடையமோ யாம்' என்று முடிகிறது. மண்டலித்து வராமையால், பின்னும் மூன்று பாடல்கள் இருந்தனவா என்ற கருத்து ஆராய்தற்குரியது. நம்மாழ்வாருடைய அருளால் நாதமுனிகள் எல்லாப் பாசுரங் களையுமே பெற்றார் என்பது தான் வரலாறு. இப்பிரபந்தம் ஏழு பாட்டுடனே தான் முடிவதென்று வைணவர் கருதுவர்.

இருப்பினும், இப்படியொரு கருத்தும் சொல்லத்தகும். இதைச் சம்பிரதாய அபசாரம் என்று அவர்கள் கொள்ளலாகாது.

திருவிருத்தத்தை அடுத்துத் திருவாசிரியம் செய்யப்பட்டது என்று அதன் நிலையை விளக்கி ஒரு சம்பிரதாயக் கருத்தும் சொல்லப்படும். முதல் பிரபந்தத்தில் ஆழ்வார் சம்சார பந்த நிவிருத்தியை அபேட்சித்துப் பிரார்த்தித்த போதிலுங் கூட, பெருமான் இவரைக் கொண்டு நாட்டுக்கு நன்மையுண்டாகும் பொருட்டு மேலும் சில பிரபந்தங்களை வெளியிடுவித்து மக்களைத் திருத்திப் பணி கொள்ளத் திருவுளங்கொண்டான். ஆகவே தான், 'பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனி யாம் உறாமையை' ஆழ்வார் கேட்டபோது, அருளவில்லை. 'இவர் இந்தச் சம்சாரத்தை விட்டொழித்து மேல் நாடுபுக விரும்புவது நம்முடைய குணங்களை அனுபவிப்பதற்காகத் தானே, அந்தக் குணானுபவத்தை இவருக்கு இவ்விடத்தில்தானே வாய்க்கச் செய்வோம்; இவ்வனுபவம் தமக்கு உள்ளடங்காமல் புற வெள்ளமிட்டுப் பிரபந்தங்களாகப் பெருகி உலக உபாகரமும் ஆம்' என்று எம்பெருமான் திருவுள்ளத்தில் கொண்டு, தனது திருவுருவையும் கல்யாண குண விபவங்களையும் இவருக்குக் காட்டிக் கொடுத்தான், இவற்றை ஆழ்வார் பரமானந்தம் பொலிய அனுபவிக்கிறார். பரமபதம் போன பின்பு அனுபவிக்கத் தக்கவற்றை இங்கேயே சுருக்கமாக ஏழு பாட்டால் உணர்த்துகிறார் என்பது சம்பிரதாயமான கருத்து. இது யஜுர் வேதசாரம் என்பர்.

உலக வழக்கொன்றை இதன் ஒரு பாட்டில் குறிப்பிடுகிறார். 'ஓஓ உலகினது இயல்வே, ஈன்றோள் இருக்க மணை நீராட்டி ... கொல்வன முதலா அல்லன முயலும் இனைய செய்கை' என்றவிடத்து, உலகத்தில் தாழ்ந்த மக்கள் தாய் இருக்க அவளுக்கு வழிபாடு ஆற்றாமல், ஒரு மணையைத் தெய்வமென்று காட்டி, அதற்கு உயிர்க் கொலை செய்து பலியிடுகிறார்கள்; இதையொத்ததே, திருமால் இருக்க ஏனைய தெய்வங்களை வழிபடுதலும் என்பது இவர் கருத்து. இவ்வுவமை திருமங்கையாழ்வார் பாடலிலும் காணப்படுவது: 'உய்யக்கொண்டான், போயிருக்க மற்றிங்கோர் புதுத்தெய்வம் கொண்டாடும் தொண்டீர், பெற்ற தாயிருக்க மணை வெந்நீராட்டுதிரோ, மாட்டாத தக வற்றீரே' (2007) என்பது காண்க. நம்மாழ்வார் பாடல் அருள் வாக்காதலினாலே, சில இடங்களில் யாப்பிலக்கணத்தையும் கடந்து நிற்கிறது.

பின்வருவது நூலின் சுவைக்கு எடுத்துக் காட்டான ஒரு பாடல்:

உலகு படைத்துண்ட எந்தை, அறைகழல்
சுடர்ப் பூந்தாமரை ஆடுதற்கு அவாவு
ஆர்உயிர் உருகி உக்க நேரிய
காதல் அன்பில் இன்பீன் தேறல்
அமுத வெள்ளத்தான் ஆம்சிறப்பு விட்டு,
ஒரு பொருட்டு அசைவோர் அசைக
திருவொடு மருவிய
இயற்கை மாயாப் பெருவிறல் உலகம்
மூன்றி னொடுநல் வீடு பெறினும்
கொள்வது எண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே.

திவ்வியப் பிரபந்தம் முழுமைக்கும் வியாக்கியானம் செய்த பெரிய வாச்சான் பிள்ளையின் வியாக்கியானமே இதற்கும் உள்ளது. இப்பிரபந்தம் சரணாகதியை வற்புறுத்துவது. பின்வரும் பாடல் இந்நூலுக்கு உரிய தனியன் (அருளாளப் பெருமாள் எம்பெருமானார்).

காசினியோர் தாம்வாழக் கலியுகத்தே வந்துதித்து
ஆசிரியப் பாவதனால் அருமறைநூல் விரித்தானை
தேசிகனைப் பராங்குசனைத் திகழ்வகுளத் தாரானை
மாசடையா மனத்துவைத்து மறவாமல் வாழ்த்துதுமே.

(திருவாசிரியம் முழுமையும் அடி வரையறையில் பிழை உள்ளது; ராஜம் பதிப்பு திருத்தமானது).

## பெரிய திரு அந்தாதி

நேரிசை வெண்பாவாலான 87 பாடல்கள், மண்டலித்து வரும் அந்தாதித் தொடை. திவ்வியப் பிரபந்தத்தில் முன்னமே முதலாழ்வார் அந்தாதிகள் மூன்றும் திருமழிசையார் அந்தாதியும் உள்ளன. இதன் பெயர் பெரிய திருவந்தாதி என்றமையால், இது அவற்றினும் பெருமை மிக்கது என்று ஒப்பிட்டுச் சொல்வது பெரிதும் பிழையாகும். இது மிக்க பெருமையுடையது எனினும், அவற்றினும் பிரித்து ஒரு பெயரிட்டுக் காட்ட இது பெரிய திருவந்தாதி எனப்பட்டது என்று மட்டுமே கொள்ளத்தக்கது. முதல் மூன்று அந்தாதிகளும் நூறு பாடல்கள் உடையன; இது 87 என்ற குறைந்த பாடல்களையுடையது, பெரிய திருவந்தாதி

எனப்பட்டது. 75ஆம் பாடலில் 'யான் பெரியன் நீ பெரியை என்பதனை யாரறிவார்' என்று ஆழ்வார் பாடியிருப்பது கொண்டு இவ்வந்தாதி பெரிய திருவந்தாதி எனப்பட்டது என்று சொல்வாரும் உளர். பரிமேலழகர் திருக்குறள் உரையில் இறைமாட்சி என்னும் அதிகாரத்தின் அவதாரிகையில் 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்று பெரியாரும் பணித்தார்' என்று எழுதியுள்ளார். பெரியார் நம்மாழ்வார்; இவருக்கு இந்தப் பெரியார் அல்லது பெரியன் என்பதை ஒரு பெயராகக் கொண்டு, பெரியன் செய்த திருவந்தாதி பெரிய திருவந்தாதி என்கின்றனர் போலும்.*

திருவிருத்தத்திலும் பதிகந்தோறும் திருவாய்மொழியிலும் இறுதியில் ஆழ்வார் தம்மைக் குறிப்பிட்டுப் பல சுருதியும் சொல்லுகிறார்; திருவாசிரியத்திலும் பெரிய திருவந்தாதியிலும் அவ்வாறு சொல்லப்படவில்லை. இதுகொண்டே இவ்விரு நூல்களும் அபூர்த்தியான நூல்களோ என்று ஐயுறத் தோன்றுகிறது; உள்ளதை வைத்து நாலாயிரம் என்ற கணக்கு செய்யப்பட்டிருக்கிறது. 7 பாடல், 87 பாடல் என்ற பாடல் அளவில் நூல் செய்யப் பெறுதல் இல்லை.

திருவாசிரியம் ஆழ்வார் பகவானுடைய குண விபூதிகளைக் கண்டு ஆனந்தமாக அனுபவித்த நிலையைச் சொல்ல, இந்நூலுள் அனுபவம் கரைபுரண்டு போகும் நிலையைச் சொல்லுகிறார் என்பர் பெரியோர். இது அதர்வண வேதசாரம் என்பர். இங்கு ஆழ்வார் பல பாடல்களில் திருமால் என்று சுட்டாமலே பாடுகிறார் (2607-9). இறையனுபவம் மேலோங்கி, தான் அவன் என்ற பிரிவுணர்ச்சியும், அவர் யார் என்பதும் மறந்து, எல்லாமாய் நிற்கும் ஒரு பெரும் பொருளை இங்ஙனம் கண்டு பாடுதல் அனுபவம் முதிர்ந்த நிலை; அம்முதிர்ச்சியினின்றும் இறங்கி வந்து ஒரு பாடலில் சங்கர நாராயணர் கோலத்தையும் பாடுகிறார் (71):

இனி நின்று, நின்பெருமை யானுரைப்ப தென்னே?
தனி நின்ற சார்விலா மூர்த்தி! – பனிநீர்
அகத்துலவு செஞ்சடையான் ஆகத்தான்; நான்கு
முகத்தான் நின்உந்தி முதல்.

சைவத்தில் போலல்லாமல், வைணவத்தில், நாதமுனிகள் திவ்வியப் பிரபந்தங்களைக் கண்டு வெளிப்படுத்தியது தொடங்கி

* இயற்பா எஸ். ராஜம் பதிப்பு 1956, பதிப்புரை vii.

ஆசாரியர்களிடமும் பாகவதர்களிடமும் பிரபந்தத்தைச் சுவைத்து அனுபவிக்கும் நிகழ்ச்சிகள் மிகவும் அதிகமாயிருந்து வந்திருக்கின்றன. தொட்ட இடமெல்லாம் கதைகளும் வரலாறு களும் சொல்லப்படும். வார்த்தா மாலையும் வியாக்கியானங் களும் குருபரம்பரையும் இவற்றைச் சொல்லும். 8ஆம் பாடல் பற்றி ஒரு வரலாறு சொல்லப்படுவது உண்டு.

அருகும் சுவடும் தெரிவுணரோம்; அன்பே
பெருகும் மிக; இது வென் பேசீர் – பருகலாம்
பண்புடையீர், பாரளந்தீர், பாவியேம் கண் காண்பரிய
நுண்புடையீர், நும்மை நுமக்கு.

பிள்ளைத் திருநிறையூரரையர் என்பவர் ஈடுபாடு மிக்க ஓர் ஆசாரியர். திரு நாராயணபுரம் சேவித்த போது, விரோதிகள் சந்நிதியில் நெருப்பு வைத்தார்களென்றும், இவர் பெருமானைக் கட்டிக் கொண்டு உயிர் விட்டாரென்றும் வரலாறு கூறும். இவரைப் பார்த்து, ‘பாட்டின் முடிவில் நும்மை நுமக்கு என் றிருக்கிறதே அதற்கு எங்கே அன்வயம்? என்று நஞ்சீயர் கேட் டாராம். அவர், ‘நும்மை அருகும் சுவடும் தெரியவுண ரோம்: நுமக்கு அன்பே பெருகும் மிக’ என்று காட்டிப் பொரு ளுரைத்தாராம்.

‘யான் பெரியன் நீ பெரியை’ எனக் குறிப்பிட்ட பாடலை முன்னமே கூறினோம். ஆழ்வார் நயமாக நகைச் சுவைபட ஒரு பொருளைக் கண்ணனுக்கு உணர்த்துகிறார். உலகும் விசும் பும் கண்ணன் உண்டமையால் அவன் அகத்தன. அவனோ என் னுள்ளே புகுந்துள்ளவன். ஆதலால் இருவருள் யார் பெரியவர் என்பதை நீ சிந்திப்பாயாக என்கிறார்.

புவியும், இருவிசும்பும் நின் அகத்த; நீ என்
செவியின் வழிபுகுந்து, என் உள்ளாய் – அவிவு இன்றி 3

யான் பெரியன், நீ பெரியை என்பதனை யார் அறிவார்?
ஊன் பருகு நேமியாய்! உள்ளு. 75

இந்நூலில் ஆங்காங்கு பத்தி வழியும் பிரபத்தி வழியும் சுட்டப் பெறும். இறை அனுபவங்களை அருள் பெற்ற ஞானியர் சொல் லால் உரைக்கும் போது கருத்துக்கள் ஒத்திருப்பதைச் சைவ வைணவ பேதம் இன்றி எங்கும் ஒருபடக் காணலாம். ஆழ்வா ருடைய ‘என்னில் மிகு புகழார் யாவரே’ என்ற பாடற் கருத்து

காரைக்கால் அம்மையாருடைய 'யானே தவம் உடையேன்' என்ற பாடலில் காணப்படுகிறது. இதுபோலப் பல பாடல்கள் அம்மையார் கருத்துக்களை நினைவூட்டுகின்றன.

திருவாசிரியத்தினும் பார்க்க இவ்வந்தாதி சொல்லோட்ட முடை யதாயும், இனிமையாயும், பொருள் எளிதில் விளங்கு வதாயும் உள்ளது. பிதா என்ற சொல்லை இங்கும் 'பிது' என்றே சொல்கிறார்: 'சுடராழியானை மாதா பிதுவாக வைத்தேன்'(70). ஆழ்வாருடைய சொல்லாட்சியொன்று குறிப்பிடத்தக்கது. அயர்ப்பாய்: எதிர்மறையில் அயராய்; இளைப்பாய்-இளை யாய் என்று சொல்வது வழக்கு. இவர் சொல்வது புது வழக்காக உள்ளது: இளைப்பாய் இளையாப்பாய் (23), நல்குவான் நல் காப்பான், நிற்பாய் நில்லாப்பாய் (60), அயர்ப்பாய் அயராப்பாய் (83) என்பன காண்க. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் இப்பிரபந்தத்துக்கு உண்டு; இவர் வியாக்கியானம் இயற்பாவுக்குச் சுருக்கமாகவே உள்ளது; இவ்வந்தாதிக்குப் பின்னும் சுருக்கமா னது என்பர். இரு பாடல்களைக் கீழே காண்க:

இவையன்றே நல்ல, இவையன்றே தீய,
இவையென் றிவையறிவ னேலும் – இவை எல்லாம்
என்னால் அடைப்பு நீக் கொண்ணாது, இறையவனே,
என்னால் செயற்பாலது என்? 3

வாழ்த்தி, அவனடியைப் பூப்புனைந்து, நின்தலையைத்
தாழ்த்து, இருகை கூப்பென்றால் கூப்பாத – பாழ்த்தவிதி,
எங்குற்றாய் என்றவனை ஏத்தாது என் நெஞ்சமே,
தங்கத்தான் ஆமேலும் தங்கு. 84

பார்க்கின்ற பூவெல்லாம் எம்பிரான் திருவுருவமாகவே பார்க் கின்றார்.

பூவையும், காயாவும், நீலமும், பூக்கின்ற
காவிமலர் என்றும் காண்தோறும் – பாவியேன்
மெல் ஆவி மெய்மிகவே பூரிக்கும், அவ்வவை
எல்லாம் பிரான் உருவே என்று. 73

பார்க்கின்ற பொருள் எல்லாம் அவனாகவே காண்கின்றார்.

கொண்டல் தான்மால் வரைதான், மாகடல்தான் கூரிருள்தான்
வண்டறாப் பூவைதான், மற்றுத்தான் – கண்டநாள்
கார் உருவம் காண்தோறும் நெஞ்சு ஓடும், கண்ணனார்
பேர்உருஎன் றெம்மைப் பிரிந்து.

பெரிய திருவந்தாதித் தனியன் இராமானுசரே செய்தா ரென்று வழங்கும்; பாடல் பின்வருவது. இப்பாடல் அந்தாதியை, முதற் சொல்லை வைத்து முயற்றி என்றே குறிப்பிடுகிறது.

முந்துற்ற நெஞ்சே, 'முயற்றி' தரித்துரைத்து
வந்தித்து வாயார வாழ்த்திச் – சந்த
முருகூரும் சோலைசூழ் மொய்பூம் பொருநல்
குருகூரன் மாறன்பேர் கூறு.

பெரிய திருவந்தாதியில் தலக்குறிப்பெதுவும் இல்லை.

## திருவாய்மொழி

இது நம்மாழ்வாருடைய நான்காவது பிரபந்தம், பெருநூல், சரமப்ரபந்தம் என்னவும் படும். வாய்மொழி என்பது வேதம்.

பரிபாடல் இப்பொருளில் இச்சொல்லைக் கூறுவது காணலாம். மூன்றாம் பாடல்:

மாயா வாய்மொழி உரைதர வலந்து
வாய்மொழி யோடை மலர்ந்த

என்ற வரிகளில், 'மாயா வாய்மொழி' என்ற தொடருக்குப் பரி மேலழகர் 'நித்தமாகிய வேதம்' என்று பொருள் எழுதுவது காணத்தக்கது.

இந்த இடத்தில் திரு என்பது இதன் ஒப்புயர்வற்ற சிறப் பினைக் குறிப்பிட வந்தது. 'வேதத்தைச் செந்தமிழால் விரித் துரைத்தான் வாழியே' என்பது நம்மாழ்வார் வாழித் திருநாமத் தொடர்.

மிக்க வேதியர் வேதத்தினுட் பொருள்
நிற்கப் பாடிஎன் நெஞ்சுள் நிறுத்தினான்.

என்று மதுரகவி பாடுவதும் இங்கு நினைவு கூரத்தக்கது. வாய்மை மொழி - வாய்மொழி, திரு என்ற அடைமொழி சார்த்தித் திரு வாய் மொழி என்று வழங்கப் பெறுகிறது. பகவத்கீதையில் கண்ணன் 'வேதா நாம் சாமவேதாஸ்மி' என்கிறான்; வேதங் களுக்குள் நான் சாமவேதம். ஆகவே சாமவேதமாகிய திருவாய் மொழிக்கும் சிறப்பு. திருவாய் மொழியானது, வெவ்வேறு வகை விருத்த யாப்பிலமைந்த 1102 விருத்தப் பாடல்களையுடையது. 11 பாடல்கள் ஒரு பதிகம்; 11ஆம் பாடலில் தவறாமல் ஆழ்வார் பல சுருதி சொல்கிறார். இப்படி 10 பதிகங்கள் சேர்ந்தது ஒரு

பத்து எனப்படும்; பத்துப் பத்துக்கள் கொண்டது முழுநூல். ஆழ்வார் ஒவ்வொரு பதிகம் முடிந்து பல சுருதி சொல்லும் போது தவறாமல் 'ஓராயிரத்துள் இப்பத்தும்' என்று சொல்கிறார். இக்குறிப்பே பிற்காலத்தில் திவ்வியப் பிரபந்தங்கள் வழக்கொழிந்திருந்த போது நாதமுனிகள் கேட்டு, ஆயிரமும் எங்கே என்று தேடும்படி செய்தது. திருவாய் மொழியிறுதிப் பாடலில் இவர் 'சடகோபன் சொன்ன அவாவில் அந்தாதி களாலிவை ஆயிரமும்' என்று இப்பெரு நூல் முழுமையும் அந்தாதி என்ற குறிப்பையும் தருகிறார். நூலகத்தும் அந்தாதி என்ற குறிப்புப் பலமுறை காணப்படுகிறது. ஆயிரம் பாடல் அந்தாதியாயிருப்பது இவர் நூல் ஒன்றுதான்.* நூலின் முதற் பாடலையும் இறுதிப் பாடலையும் இங்குத் தருகிறோம்.

உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே.

அவாவறச்சூழ் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவி லந்தாதிகளால் இவை யாயிரமும் முடிந்த
அவாவி லந்தாதி யிப்பத் தறிந்தார் பிறந்தார் உயர்ந்தே.

பாடல்கள் 1102 இருந்தபோதிலும், பெருந்தொகையாக ஆயிரம் என்று சொல்வதே வழக்கு. திருவரங்கத் தமுதனார் செய்த இராமானுச நூற்றந் தாதி 108 பாடல்களைக் கொண்டிருப்பினும் நூற்றந்தாதி என்றே முழு எண்ணைக் கொண்டு வழங்கும் வழக்கும் இங்கு கருதத்தக்கது. ஆயிரம் பாடல்களும் திருமாலின் ஆயிரம் திருப்பெயரையும், பத்துப் பத்துக்களும் அவனுடைய அவதாரங்கள் பத்தையும் நினைவூட்டுவன என்பர் பெரியோர்.

பதிகம் ஒவ்வொன்றும் 11 பாடல் கொண்டது. 11ஆம் பாடல் பல சுருதி என்று முன்னமே சொல்லப்பட்டது. ஒவ்வொரு பதிகமும் திருவாய்மொழி என்றே சொல்லப்படும். பகவானுடைய துவாதச நாமங்களைச் சொல்லும் ஒரு பாசுரம் மட்டும் மேலும் இரு பாடல்கள் கொண்டது. பன்னிரு நாமத்துக்குப் பன்னிரு பாடலும் பலசுருதி ஒன்றும் ஆக 13. இவ்வாறு பத்தின்

* பிற்காலத்தில் செய்யப்பட்ட இராம சரிதம் (மலையாள நாடு) 1815 பாடல்களை அந்தாதியாகச் சொல்கிறது; நூல் தமிழே; மலையாள மொழி பின்னர்தான் உருவெடுக்கத் தொடங்குகிறது.

மேல் உள்ள பாடல்களை (பல சுருதியும் இந்த அதிகம் இரண் டும்) நீக்கி எண்ணினால், திருவாய் மொழிப் பாடல்கள் கணக் காக ஆயிரமே யாவதும் காணலாம்.

ஒரு கருத்தைச் சொல்லுதல் தகும். ஆழ்வாருடைய திருவாய் மொழிகள் நூறும் தவறாது பதினொரு பாடல்கள் கொண்டவை' ஒன்றிலாவது ஒரு பாடல் குறையவில்லை; தவறாது பதினோ ராம் பாடல் பல சுருதியாகும். இந்த நிலைமை வரலாற்றில் குறிப்பிட்ட ஒரு செய்திக்குச் சான்று பகரும். அனைத்துத் திவ்ய தேசத்து எம்பெருமான்களும் இவருக்குத் திருக்குருகூரிலேயே வந்து சேவை சாதிக்க, இவர் அங்கிருந்தபடியே பாடினார் என்று குறிப்பிட்டோம். அவ்வாறு ஒரே இடத்து இருந்து பாடியமை யால்தான் பதினொன்று என்ற தொகை எல்லாத் திருமொழி களிலும் பிழையாதாயிற்று. எடுத்துக்காட்டாக, திருஞான சம்பந்தர் பதிகங்களைப் பார்ப்போமாயின், பதினொன்றே பாடுகின்ற அவர் பதிகங்களில் பல, பத்துப் பாடல்களே பெற் றிருக்கக் காணலாம். காரணம், இடம் இடமாக மாறும் போது எண்ணிக்கை விடுபடக்கூடும். ஓரிடத்திலிருந்து ஒன்றாகவே பாடும் போது, எண் விடுபடாது.

ஒவ்வொரு திருவாய் மொழியின் இறுதியிலும் தவறாது பாடும் பல சுருதிப் பாடலில் தாம் ஆயிரம் பாடல் பாடிய செய்தி யைக் குறிப்பிடுவதோடன்றி, இடையில் சில இடங்களிலும் தாம் தமிழ்நூல் செய்ததைக் குறிப்பிடுகிறார்: வளர் தமிழ் நூற் றேன் (3284); தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல் மாலைகள் சொன்னேன் (3822); என் நெஞ்சத் துள்ளிருந்து இருந்தமிழ் நூல் இவைமொழிந்து (3949). இங்கு ஓர் ஐயம் எழுதல் கூடும். முதல் பத்திலேயே 'சடகோபன் சொல் ஆயிரத்தில் இவை பத்தும்' என்று கூறுகிறார். பத்துப்பாடல் பாடியவுடனேயே ஆயிரம் என்று கூறுதல் எவ்வாறு சாத்தியம் என்ற கேள்வி எழும், ஆழ் வார் திவ்யதேச எம்பெருமான்களைத் தரிசித்து, திருப்புளியின் கீழே அமர்ந்து தாம் ஆயிரமும் பாடுவதாகச் சங்கற்பித்துக் கொண்டு பாடத் தொடங்கினார் என்றே சொல்ல வேண்டும். இதற்கு மேல் ஆராயவியலாது.

**அந்தாதித் தன்மை**

திருவாய் மொழி ஆயிரமும் அந்தாதி என்று குறிப்பிட் டோம். அந்தாதி பல வகை.

ஈறுமுதலாத் தொடுப்பது அந்தாதி என்று
ஓதினார் மாதோ உணர்ந்திசி னோரே.

என்ற யாப்பருங்கலச் சூத்திரத்தில் விருத்தியுரைகாரர் எல்லாம் உதாரணங் காட்டி விரித்தெழுதுகிறார். அவற்றை இங்கு காட்ட இடமில்லை. பொதுவாக முன்பாட்டின் இறுதி எழுத்து அசை சீர் அடி அடுத்த பாட்டின் முதல் எழுத்து அசை சீர் அடியாக வருவது அந்தாதி என்று நாம் கருதியிருக்கிறோம். நம்மாழ்வார் பாடலில் இவ்வாறு வராத இடமும் உண்டு. முதல் பத்து ஆறாம் திருமொழி முதல் இரண்டு பாடல்களையும் காண்க.

பரிவதில் ஈசனைப் பாடி
விரிவது மேவ லுறுவீர்
பிரிவகை யின்றி நன் னீர்தூய்ப்
புரிவது புவம்புகை பூவே.

மதுவார் தண்ணந் துழாயான்
முதுவேத முதலவனுக்கு
எதுவே தென்பணி யென்னாது
அதுவே ஆட்செய்யு மீடே.

இவை நாம் கருதியபடி அந்தாதி இல்லை என்பது வெளிப் படை. இதை நன்கு சிந்தித்து, நம்மாழ்வார் பெயராலேயே அகப் பொருள், யாப்பு, அலங்காரம் ஆகிய இலக்கணங்களைச் செய்த திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்ற பெரும் புலவர், மாறனலங்காரத்துள் இதற்கு ஓர் அமைதி காட்டுகிறார். அந்தாதி விகற்பமெல்லாம், தொல்காப்பியர் கூறிய இயைபு என்ற இலக்கணத்தின் வகையாய் அமையும். இதை விளக்கிய விடத்துப் பேராசிரியர், பொருட்டொடராகவும் சொற்றொட ராகவும் செய்வது இயைபு எனப்படும் என்று கூறி, சொற்றொடர் என்பது அந்தாதி எனப்படுவது என்று எழுதினார். இதைக் கருதி, ஈட்டின் அரும்பத வுரைகாரர், அந்தாதியைப் பொருளிசை யந்தாதி, இயலிசை யந்தாதி என இரண்டாகப் பிரித்து, இங்குக் காட்டிய பாசுரங்களைப் பொருள்வரும் அந்தாதி, பொருளிசை அந்தாதி என்று கூறினார்.* இதை மாறனலங்கார ஆசிரியர் விளக்கியுரைக்கிறார். 'இன்னுமவ்விலே சானே இறுதி நின்ற

---

* அந்தாதி பற்றிய ஒரு விளக்கமான ஆராய்ச்சியைத் திருநூற்றந் தாதிப் பதிப்புக்கு ரா. இராகவையங்கார் எழுதிய முகவுரையில் காண்க. மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடு.

சொற்பொருள் நோக்கத்தான் ஆகுபெயராற் சொற்றொடர் வருவனவுமுள. இங்குக் காட்டிய பாசுரங்களுள், முதல் பாடலில் வந்த பூ என்ற சொல்லின் பொருள் நோக்கத்தால் சினையைக் கூற, முதலை அறிவிக்கும் ஆகு பெயரால் அந்தாதித்தவாறுணர்க. இவை நாலு வேதத்தையும் ஓதாதுணர்ந்த ஞான பூரண ஞான முத்திரைக் கராம் புயன் வாக்கு' எனக் கூறினார். இதுவே இப் பாடல்கள் அந்தாதித் தன்மைக்கு அமைதியும் பொருளிசை அந்தாதிக்கு விளக்கமுமாகும்.

ஆழ்வாரே பத்திடங்களில் தாம் **அந்தாதி ஆயிரம்** பாடிய தாகக் குறிப்பிடுகிறார். (2942, 3063, 3074, 3373, 3384, 3450, 3593, 3692, 3934, 4000) இங்கெல்லாம் 'முந்தை ஆயிரத்துள் இவை' என்று கூறுகிறார் (6.5.11). முந்தை ஆயிரம் என்று நூல் முடிவில் லாமல் இடையில் வருவது, ஆயிரம் முடிவு பெறாமையால் பொருந்தாது என்றும் சொல்வர். ஆழ்வார் பாடியிருந்தால் இப்படிப் பாடியிருக்கமாட்டார், பின்னால் ஆயிரம் பாசுரங் களும் ஏற்பட்டு வழங்கிய காலத்தில் இவை ஆயிரம் என்ற நினைவாலே பாடலில் இவ்வாறு இத்தொடர் அமைந்தது என்றும் சொல்லக் கேட்கிறோம். ஆனால் இருந்த இடத்தில் இருந்தபடியே அனைத்துத் திவ்விய தேசத்து எம்பெருமான் களையும் மங்களாசாசனம் செய்யும் பக்தியும் அனுபவமும் ஆற்றலும் பெற்ற ஆழ்வார் இவ்வாறு பாடியிருத்தல் கூடும் என்று மரபையொட்டி நம்புவது பிழையாகாது.

நவீன ஆராய்ச்சியாளர் ஒவ்வொரு திருமொழியின் இறுதி யிலுமுள்ள பல சுருதிப் பாடல் நம்மாழ்வார் செய்ததன்று, பிற் காலத்தாருடைய இடைச்செருகல் என்று சொல்லவும் கேட் டிருக்கிறோம். இவை நாதமுனிகள் காலத்திலும் இராமானுசர் காலத்தின் முன்னும் சேர்க்கப்பட்டன என்று கூறுவோரும் உளர். (இவர்கள் 'திருப்பல்லாண்டின் பல சுருதிப் பாடலும் திருப்பள்ளியெழுச்சியின் பல சுருதிப் பாடலும் மட்டும் இந்த நிலைக்கு விலக்கு என்றும், இவை இரண்டும் முறையே பெரி யாழ்வாரும் தொண்டரடிப் பொடியாழ்வாருமே பாடியவை என்றும் கூறுவர்).

இது பற்றி இரு கருத்துக்கள் சொல்லத்தகும். இப்பாடல் களையும் சேர்த்தே 4000 என்று கணக்கிடும் வழக்கம் ஏற்பட் டிருக்கிறது. இப்பாடல்களை நீக்கினால் அவ்வெண் வராது.

மேலும் பாகவதர் இருவர் வீரநாராயணபுரத்தில் ஆரா அமுதே என்ற திருமொழியை அனுசந்தித்தார்கள். அதைக் கேட்ட போதுதான் நாதமுனிகளுக்கு இப்பாடல்களைத் தேட வேண்டும் என்ற ஊக்கம் பிறந்தது. சிறப்பாக, அப்பதிகத்தின் இறுதியில் பல சுருதிப் பாட்டில் 'குருகூர்ச் சடகோபன் குழலின் மலியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும்' என்ற தொடர்தான் திருவாய்மொழி என்ற ஒன்று உண்டு, அதில் 1000 பாடல்கள் இருந்தன என்ற அறிவை நாதமுனிகளுக்குத் தந்தது. நம்மாழ் வாருக்கும் நாதமுனிகளுக்கும் இடையில் கால இடையீடு 50 ஆண்டுகளுக்குக் குறைவாகவே இருக்கலாம். எனவே, அதே காலத்தில் பல சுருதிப் பாடலும் சேர்ந்து வழங்கியிருத்தலால், இது பிற்சேர்க்கை என்று கருதுவது பொருந்தாது. அன்றியும் நம்மாழ்வார் இருந்த இடத்திலேயே திருவாய்மொழி முழுமை யும் பாடினார் என்று காட்டினோம். ஒவ்வொரு திருமொழி யிலும் தவறாமல் ஓராயிரத்துள் இப்பத்தும் என்று அவர் கூறி யிருப்பதும் இங்கு நோக்கத்தக்கது. ஆதலால் இடைச்செருகல் என்ற பேச்சு இங்கு எழ நியாயமில்லை. இன்னும் சொல்வ தானால், இப்பல சுருதிப் பாடல் ஓராயிரம் என்று சொல்லா விட்டால் திருவாய் மொழியே கிடைத்திராது என்று சொல் வதும் பொருந்தும்.

தம் நூல் முழுமையும் ஆழ்வார் அந்தாதியாகப் பாடிய தில்லை என்று சொல்வோர் ஒரு கருத்தைச் சொல்வார்கள். ஆழ்வாருடைய பாடல்களில், திருமொழிதோறுமுள்ள பதினோ ராம் பாடல், பல சுருதி கூறுவது, ஆழ்வார் பாடவில்லை; பத் துப் பாடல்களை அந்தாதியாகப் பாடினார். இவ்வாறு இவர் பாடியவை தனித்தனியான நூறு அந்தாதிகள். பிற்காலத்தில் இடைச் செருகலாகப் பதினோராம் பாடலை, முன் பதிகத்தின் இறுதிச் சீரையும், அடுத்த பதிகத்தின் தொடக்கச் சீரையும் தன் முதலாகவும் அந்தமாகவும் கொண்டு அதே யாப்பில் ஒரு பாடல் பாடிச் சேர்க்கப்பட்டது, இதைச் சேர்த்தமையினால் தான் திருவாய் மொழி முழுமையும் ஒரே அந்தாதியாகத் தோற் றம் கொடுக்கிறது; இல்லையானால் தலங்கள் தோறும் சென்று பாடிய நூறு தனி அந்தாதிப் பதிகங்களாக அவை இருக்கும் என்கிறார்கள். இக்கருத்தை ஆமோதித்தே 1956இல் வெளி யான எஸ். ராஜம் வெளியிட்ட அழகான சந்தி பிரித்த பதிப்பில்

பல சுருதிப் பாடல் மட்டும் சிறிய எழுத்தில் வேறு படுத்திக் காட்டும் முறையில் அச்சிடப்பட்டுள்ளது. இன்றைக்கு நம் ஆராய்ச்சியில் இப்படிக் கருதிச் செய்வது பொருந்தாது. பத்துப் பாடல் கொண்ட பதிகத்தை அந்தாதியாக்கும் வழக்க மில்லை. பண்டை ஆசாரியர் வியாக்கியானக்காரர் ஆகியோர் இப்பாடலும் ஆழ்வார் பாடல் என்று கருதித்தான் பாடல் தொகையை வரையறை செய்தும் வியாக்கியானம் செய்தும் வந்திருக்கிறார்கள்.

கி.பி. பன்னிரண்டாவது நூற்றாண்டில் திருவாய் மொழிக்கு மணிப்பிரவாள நடையில் வியாக்கியானம் செய்தருளிய திருக் குருகைப் பிரான் பிள்ளான் திருவாய் மொழியின் சாற்றுப் பாக்கள் சடகோபரால் இயற்றியவை என்றாவது அல்லவென் றாவது ஒருதலையாக ஒன்றும் கூறினாரில்லை. ஆனால் இப் பாக்களுக்கு இவர் உதவிய வியாக்கியானத்தை உற்று நோக்கு மிடத்து, இவை சடகோபர் அருளியவையல்லவென்று இவர் கொண்டனர் என்று தோன்றுகிறது* என்று ஒருவர் கூறுகிறார்.* இக்கூற்று இவருடைய சொந்த முடிவு. பிள்ளான் இவ்வாறு சொல்லவில்லை என்று இவரே ஒப்புக் கொள்கிறார். பின்வந்த எல்லா வியாக்கியானக்காரரும் இப்பாடல்களும் ஆழ்வார் பாடலென்றே கருதி உரை எழுதுகிறார்கள். ஆழ்வார் காலத் துக்கும் நாதமுனிகள் காலத்துக்கும் இடையீடு மிகவும் சொற்பம். இக்காலத்தில், பாசுரங்களே ஆட்சி குன்றியிருக்க, பல சுருதிப் பாடல் மட்டும் புதிதாய் எழுதிச் சேர்க்கப் பெற்றதோடு அவற்றை தேசாந்திரி பாகவதர் கற்றறிந்து வீரநாராயண புரத்தில் சென்று பாடவும் செய்தார்கள் என்பது நம்பமுடியவில்லை.

15ஆம் நூற்றாண்டில், ஒவ்வொரு திருமொழியின் முத லையும் கடையையும் முதலும் கடையுமாக வைத்து வெண்பா அந்தாதி பாடிய மணவாள மாமுனிகள் இப்பல சுருதிப் பாட லின் இறுதிச் சொல்லையே தம் வெண்பாவின் இறுதிச் சொல் லாக வைத்து, அதாவது இதையும் ஆழ்வார் பாடல் என்று கொண்டே தம்முடைய திருவாய் மொழி நூற்றந்தாதியை அமைத்திருக்கிறார். பதினோராம் பாடலும் ஆழ்வார் பாடல் என்பதே எமது கருத்துமாகும்.

---

* டாம்பியாச்சான்: செந்தமிழ் தொகுதி 21, 1923, பக்கம் 333.

'ஓராயிரத்துள் இப்பத்தும்' என்ற தொடரைக் கேட்ட பிறகே நாதமுனிகள் திருவாய்மொழி ஆயிரம் பாட்டுடையது என்று அறிந்து தேட ஆரம்பித்தார் என்று வரலாறு கூறுகின்ற படியால், அவருக்குப் பின் இப்பாடல் எழுதிச் சேர்க்கப்பட்டது என்பது அவ்வரலாற்றை ஏற்குமிடத்து, பொருந்தாது என்பது தெளிவு.

பலசுருதிப் பாடலைச் சாற்றுப்பா என்று கூறும் ஒரு மரபு உண்டு; பலசுருதி என்று மட்டும் கருதினால் இது சரி; தனியன் போன்றது என்று நினைத்தால் இக்கருத்துப் பிழையாகும்.

அந்தாதி பாடியதில் ஆழ்வாருக்கு ஒரு வசதி ஏற்பட்டது. பொதுவாகப் பதிகம் பாடும் போது, ஈற்றடியில் குறிப்பிட்ட தலத்தை மகுடமாய்க் கொண்டு பாடுவது சம்பிரதாயம். இதைச் சைவ மரபில் தேவாரம் முழுமையிலும் காணலாம். நாலாயிரப் பிரபந்தத்திலும் அந்தாதி அல்லாத பிற திருமொழி அனைத்திலும் இந்த இயல்பைக் காணலாம். பெரியாழ்வார் திருமொழி, திருப்பல்லாண்டு, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, பெரிய திருமொழி முதலான பாசுரங்களில் இந்த இயல்பை விளங்கக் காணலாம். தலத்தை மகுடமாகப் பாட வேண்டும் என்ற ஒரு நியதியினாலே பாடல்களின் திரண்ட கருத்து முழுமையும் ஒரு போக்காகவே ஆகிவிடுகிறது. ஆனால், நம்மாழ்வார் ஆயிரம் பாட்டுக்கு மேலும் அந்தாதியாகப் பாடியிருத்தலினாலே மகுடம் அமைக்கும் நிர்ப்பந்தம் இல்லாமற் போயிற்று: போகவே ஒவ்வொரு பாசுரமும் தனியான போக்கும் தனியான கருத்தோட்டமும் உடையதாக ஆகி இருக்கிறது. ஆகும் போது ஒவ்வொரு பாட்டிலும் அவர்தம் மனம் கொண்டபடி தத்துவக் கருத்துக்களை நிரம்பச் சொல்ல முடிந்திருக்கிறது. பிற ஆழ்வார் அனைவரையும் விட இவரே வைணவ சித்தாந்தத்தை எடுத்துச் சொல்லியிருக்கின்றார் என்றும், இவருடைய நூலே ஐந்தாம் வேதம் என்றும் பிற்காலத்தார் கருதுவதற்கு, இந்த அந்தாதித் தன்மையே ஒரு செயற்கைக் காரணமாகும். தம் பாசுரங்களை இவர் வெறும் தலப்பதிகங்களாகவே பாடியிருந்தால், வைணவ சித்தாந்தத்துக்கு மூல சாத்திரமாக அமையவல்ல ஒரு பெருந் தகுதி இவர் நூலில் பொருந்தியிராது. இதற்கு எடுத்துக்காட்டாகச் சைவ மரபில் திருவாசகத்தையும் தேவாரப் பாசுரங்களையும் ஒப்பு நோக்கிப் பார்க்கும் போது நன்கு விளங்கும்.

மேலும், அந்தாதித் தன்மை இவருடைய கருத்து ஓட்டத்துக்குத் துணை செய்கிறதேயன்றி இடையூறாக உள்ளதன்று. முதல் பாட்டினுடைய இறுதித் தொடர் அடுத்த பாட்டின் தொடக்கமாக இவரிடம் அமையும் போது அது கருத்தின் தொடர்ச்சிக்கே உதவுகிறது.

அந்தாதி பாடும் புலவர்கள் பெரும்பான்மையும் முன் பாட்டின் இறுதிச் சீர் அல்லது சொல் அல்லது அசை அல்லது எழுத்தையே எடுத்து அடுத்த பாட்டின் தொடக்கமாக வைத்துப் பாடுவார்கள். இது இலக்கணப்படி சரியே: நம்மாழ்வாரோ பல சீர்களை அல்லது அடியிற் பாதியை, பல சொற்களை எடுத்து வைத்தே அடுத்த பாடல் தொடங்குகிறார். இத்தன்மையை நூலெங்கும் காணலாம். அபூர்வமாகத்தான் இவர் அசையோ எழுத்தோ எடுத்து வைப்பது.

தமிழிலுள்ள முதல் அந்தாதி நூலாகிய பதிற்றுப்பத்தின் நாலாம் பத்திலும் இத்தன்மையைக் காணலாம். இங்கு ஆசிரியர் காப்பியாற்றுக் காப்பியனார் 5, 6, 7, 9 ஆகிய பாடல்களின் தொடக்க வரியாக, முற்பாட்டின் இறுதியடியை அப்படியே எடுத்து வைத்திருக்கிறார். 2, 3, 4, 8, 10 ஆகிய ஐந்து பாடல்களில், முற்பாடலின் கடைசி அடியில் பிற்பாதியாகிய இரண்டு சீர்களையும் அப்படியே எடுத்து வைத்து அடுத்த பாடலைத் தொடங்குகிறார். அசையையோ எழுத்தையோ மட்டும் எடுத்துக் கொள்வது என்ற சுவை குறைந்த நிலையில் இவர் அந்தாதி பாடவில்லை என்பது கருதத்தக்கது.

இனி, நம்மாழ்வார், ஒரே ஒரு திருமொழியில் தான் பிறருடைய பதிகம் போலப் பத்துப் பாடலிலும் ஒரே மகுடத்தை வைத்து முடிக்கிறார். 4ஆம் பத்து 8ஆம் திருமொழி - குறைவிலமே என்பது மகுடம். அதனால் குறைவிலம் என்ற சொல்லுக்கு முன்னால் வருகின்ற தொடர்களை எடுத்து, அடுத்த பாட்டின் தொடக்கமாக வைத்துப் பாடுகிறார். குறைவிலமே என்ற மகுடத்தை எடுக்கவில்லை. இதனால் அந்தாதித் தன்மையும் குன்றவில்லை, மகுடமும் தொடர்ந்து வருகிறது. (திருவாய்மொழியின் பொருளை ஆராயும் போது உரிய இடத்தில் இதை விளக்கியிருக்கிறோம்).

**வியாக்கியானங்கள்**

திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்கள் பொதுவாக மிகவும் சிறப்புப் பொருந்தியவை. எல்லா நூல்களுக்கும் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் செய்திருக்கிறார். வைணவ தரிசனத்துக்கு இராமானுசரின் குருவான திருக்கோட்டியூர் நம்பி 'எம்பெருமானார் தரிசனம்' என்றே பெயர் வைத்தார். ஆனால் அந்த எம்பெருமானார் வடமொழி நூல்களுக்கு வியாக்கியானம் செய்தாரே ஒழிய, தமிழ் திவ்வியப் பிரபந்தங்களுக்கு எந்த வியாக்கியானமும் செய்யவில்லை. 'ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தை எங்கும் பரவச் செய்த எம்பெருமானார் தாமே இத்திவ்வியப் பிரபந்தங்கட்கு வியாக்கியானம் இட்டால், அதற்குமேல் வேறொருவரும் வியாக்கியானம் செய்யாமல் அவ்வளவோடே நின்று விடும். ஆகையால் அங்ஙனமாகாது மேன்மேலும் கிளைத்துச் செழித்து வளர வேண்டும் என்னும் திருவுள்ளக் கருத்தாலே அவர் வியாக்கியானமிடவில்லை' என்று கூறுவர். எனினும் இதற்கு மிக்க சிறப்புடைய பல வியாக்கியானங்கள்* எழுந்துள்ளன.

இராமானுசரே முதன் முதலாக, தாம் அபிமான புத்திரராகக் கொண்டிருந்த திருக்குருகைப் பிரான் பிள்ளானைக் கொண்டு விஷ்ணு புராணத்தின் கிரந்த அளவாலே ஆறாயிரப்படி என்ற ஒரு வியாக்கியானம் செய்வித்தார். அடுத்து, வேதாந்தியான நஞ்சீயர் ஸ்ரீ பாஷ்யத்தின் அளவாலே ஒன்பதினாயிரப்படி செய்தார். பெரியவாச்சான் பிள்ளை தம் ஆசாரியரான நம்பிள்ளை நியமனத்தின்படி இருபத்து நாலாயிரப்படி செய்தார். இவருக்கு இராமாயணத்தில் ஈடுபாடு மிகுதி; ஆகவே இராமாயணத்தின் கிரந்தத் தொகை அளவான 24 ஆயிரமாகச் செய்தார். நஞ்சீயரின் சீடரான நம்பிள்ளையிடம் கேட்ட வடக்குத் திருவீதிப்பிள்ளை தாம் கேட்டபடியே எழுதி வைத்தது, சுருதப் பிரகாசிகை அளவிலுள்ள 36 ஆயிரப்படி; இது நம்பிள்ளை ஈடு முப்பத்தாறாயிரப்படி என வழங்கும். இவற்றின் பின்னர், பெரிய வாச்சான் பிள்ளையிடமும் அவர் திருக்குமரர் நயினாராச்சான் பிள்ளையிடமும் சீடராயிருந்த வாதிகேசரி அழகிய மணவாள சீயர் என்பவர் பதவுரையாகப் பன்னீராயிரப்படி எழுதினார்.

---

* இது பற்றிய விளக்கமும் அட்டவணையும் எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூலில் தரப்பட்டுள்ளது.

ஒரு கருத்து சொல்லுதற்குரியது. வியாக்கியானக்காரர் சிலர் பாடபேதங்களைக் குறிப்பிட்டு, அவற்றை யொட்டியும் உரை காட்டியிருக்கக் காண்கிறோம். இதனால் பெறுவது, வியாக்கியானம் தோன்று முன்னமேயே, பாடபேதங்களும் தோன்றியிருந்தன, உரைகாரர் அவற்றைப் புறக்கணிக்க இயல வில்லை என்பதாகும்.

இவை திருவாய் மொழிக்குப் பூர்வாசிரியர் செய்த வியாக் கியானங்கள். ஈடு தோன்றிய காலத்திலேயே வேதாந்த தேசிகர் வாழ்ந்தார். அவர், திருவாய் மொழிப் பாசுரர் கருத்துக்களைத் தொகுத்து, சுலோக அமைப்பில் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி என்ற நூலும், சதகங்களின் கருத்தைக் கூறுவதாக த்ரமிடோபநிஷத்சாரம் என்ற இரு வடமொழி நூல்களும் செய்தார். இவற்றுக்குப் பிற்காலத்தில் உரைகளும் எழுந்துள்ளன.

திருவாய் மொழி நூற்றந்தாதியும் சிறப்பாய்க் கூறத்தக்கது. மணவாள மாமுனிகள், ஒவ்வொரு திருமொழியின் தொடக்கச் சொல்லையும் இறுதிப் பாட்டின் இறுதிச் சொல் அல்லது சீரையும் ஒவ்வொரு வெண்பாவின் தொடக்கமும் இறுதியுமாக வைத்து நூறு பாடல் பாடித் திருவாய் மொழி நூற்றந்தாதி என்று பெயரிட்டார். இதற்குப் பிள்ளை லோகஞ்சீயர் வியாக்கி யானம் எழுதியிருக்கிறார். அங்கு மாமுனிகள் இவ்வாறு ஒரு நூல் அமைப்பதிலுள்ள இடர்ப்பாடுகளை விரிவாகக் குறிப் பிட்டிருக்கிறார்.

இவருக்கும் பின்னால், மாமுனிகள் பிரவசனம் முதலிய வற்றால் கிடைத்த அரும்பொருள்கள் அனைத்தையும் விடாமல் அடைய வளைத்துத் திரட்டி ஒருவர் 'அடைய வளைந்தான் அரும்பதம்' என ஒரு நூல் அமைத்தார். இந்த வியாக்கியானங் கள் அனைத்தும் சேர்ந்து 'ஸ்ரீபகவத் விஷயம்' என்று பெயர் பெறும். இவை முதன்முதலில் சே. கிருஷ்ணமாசாரியரால் அச் சிடப்பெற்றன. பின்னர் காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங் கராசாரியர் பதிப்பு வெளிவந்துள்ளது; சில பகுதிகள். இதன் பின் னர் ஸ்ரீரங்கம் பதிப்பொன்று வெளிவந்து கொண்டிருக்கிறது.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் செய்தருளிய ஆசார்ய ஹ்ருதயம் என்ற நூல், உரைநடை மணிப்பிரவாளத் தொடர்களாக 234 சூத்திரங்களையுடையது. அவை நான்கு

பிரகரணமாயுள்ளன. நான்காவது பிரகரணத்தில் 219 முதல் 228 வரையுள்ள பத்துப் பகுதிகளும், ஆழ்வார் ஒவ்வொரு பத்திலும் இன்ன பொருளைக் கூறுகின்றார் என்று விவரிக்கின்றன. நாயனார் கூற்றை எவரும் விளங்கிக் கொள்வது மிகவும் கடினம். இதற்கு மணவாளமாமுனிகள் வியாக்கியானமிட்டிருக்கிறார். (பிரதிபதம் அரும்பதம் முதலியவற்றோடு இது 1909இல் கலா ரத்நாகரம் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டுள்ளது).

நம்மாழ்வார் பல நூல்கள் செய்திருப்பினும், திருவாய் மொழியின் புகழே அவருடைய புகழ். திருவாய் மொழியின் சிறப்பை எடுத்து, திராவிடவேதோபநிஷத் சங்கதி, திராவிடவே தோபநிஷத் தாத்பரிய ரத்னாவளி என்ற இரு நூல்கள் பேசும். இது வடமொழியிலும் தெலுங்கிலும் ஆயிரம் செய்யுட்களாகப் பெயர்க்கப்பட்டு, ஆந்திர கீர்வாண சங்கம் என்ற பெயரோடு உள்ளது. கன்னடத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. திரு வாய் மொழியிடத்துள்ள ஈடுபாட்டாலும் ஆசாரிய பக்தியா லும், நூற்றைம்பது ஆண்டுகளாகத் தெலுங்கர் பலர் திருவாய் மொழியையும் பிற பிரபந்தங்களையும் வியாக்கியானங்களுடன் தெலுங்கு எழுத்தில் அச்சிட்டும் பூசித்தும் வருகிறார்கள்.

திருவாய்மொழி வாசகமாலை* என்ற ஒரு திரட்டும் 13 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது போலும்; ஆசிரியை திருக்கோனேரி தாஸ்யை. இவர் இங்கு, பதிகந்தோறும் முதல் பாட்டு அல்லது முதல் பாட்டும் மற்றொரு பாட்டும், ஆக 164 பாடல் தொகுத்து அவற்றுக்குத் திருவாய் மொழியின் முதல் பாடலான உயர்வற உயர் நலமுடையவன் என்ற பாடலுக்கு இயைபப் பொருள் சொல்லி, திருவாய் மொழிப் பாசுரங்கள் அனைத்திலும் சொல்லப்பட்ட பொருள் முதல் பாசுரத்தின் பொருளான உயர்வற உயர்நலம் உடையவன் என்பதே என்று விவரிக்கிறார். ஏடெழுதினவர் 'ஆரா வமுதே அடியேனுடலம்' என்று தொடங்கும் பதிகம் முடியுமிடத்தில் ஏட்டிலேயே எழுத் தாணியால் க்ஷீராப்தி சயனப்படம் எழுதியிருப்பது அற்புதமாக இருப்பதோடு பாசுரத்தில் அவருக்குள்ள ஈடுபாட்டையும் நன்கு புலப்படுத்துகிறது.

---

* 1952இல் தஞ்சை சரசுவதி மகால் வெளியீடாக அச்சிடப்பட் டுள்ளது. எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூலில் இது குறித்துப் பார்க்க.

வியாக்கியானங்கள் யாவுமே முழு மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டுள்ளன. இராமனுசருடைய சிஷ்ய பரம்பரையில் வந்த ஆசாரியர் அனைவரும் தாங்கள் எப்படிப் பேசினார்களோ அப்படியே எழுதி வைத்தார்கள். சங்கர வாதம் காரணமாக, தமிழில் சொல்வது ஏற்காது என்ற அச்சத்தால் இவர்கள் வாழ்க்கையில் வடமொழியே ஆதிக்கம் பெற்றிருந்தது. ஆகவே இவர்கள் எழுத்திலும் வடமொழியே ஆதிக்கம் பெற்று விட்டது. இதுவே மணிப்பிரவாளத்துக்கு மூலகாரணம். திருக்குருகைப்பிரான் பிள்ளையின் உரையில் வடமொழியில் சில தமிழ் கலந்திருக்கும். கடைசியாக ஈட்டில் தமிழ் அதிகமும் வடமொழி அதனினும் குறைவாகவும் இருக்கும். இது காலப்போக்கில் விளைந்த மாறுதல் அல்லது வளர்ச்சி.

திருவாய்மொழியின் நுட்பங்களையெல்லாம் அனுபவிப்பதற்கு இவ்வுரைகளே பெருந்துணை செய்வன. ஆதலால் இவற்றில் ஒரு பகுதியை இங்கு எடுத்துக்காட்டாகத் தருகிறோம். திருவாய்மொழி முதல் பத்தில் இரண்டாந் திருமொழி இரண்டே சீர்களாலான அடி கொண்ட பாடல்கள். இத்திருமொழியின் அவதாரிகையையும், முதல் பாடலின் உரையையும் அப்படியே இங்கு தமிழெழுத்தில் தருகிறோம். ஏழு உரைகளும் இங்குத் தரப்பட்டுள்ளன.

திருவாய்மொழி வியாக்கியானங்கள்

| எண் | பெயர் | ஆசிரியர் | காலம் நூற்றாண்டு | குறிப்பு |
|---|---|---|---|---|
| 1. | ஆறாயிரப்படி | திருக்குருகைப் பிரான் பிள்ளான் | 12 தொடக்கம் | இராமானுசர் நியமனம் |
| 2. | ஒன்பதினாயிரப்படி | நஞ்சீயர் | 13 | நம்பிள்ளை இதைக் காவேரியில் போக விட்டுப் புதிதாய் எழுதிக் கொடுத்தார். |
| 3. | பன்னீராயிரப்படி | வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர் | 14 தொடக்கம் | பெரியவாச்சான் பிள்ளையின் சீடர் |
| 4. | இருபத்து நாலாயிரப்படி | பெரிய வாச்சான் பிள்ளை | 13 இறுதி | நம்பிள்ளை கட்டளையிட்டதன் மேல் |
| 5. | முப்பத்தாறாயிரப்படி என்னும் ஈடு | வடக்குத் திருவீதிப் பிள்ளை | 13 இறுதி | நம்பிள்ளை அருளிச் செயல் |
| 6. | அடைய வளைந்தான் அரும்பதம் | ஆத்தரன் ஜீயர் | | வியாக்கியானங்களின் சாரம் |
| 7. | ஜீயர் அரும்பதவுரை | குணசரம்பாக்கம் இராமனுச சீயர் | | மேற்படியின் தழுவல் |

அட்டவணையில் காட்டிய ஏழு பேருரைகளுக்கு மேலாக, ஈட்டிற்கு, மணவாள மாமுனிகளுக்கும் பின் பல பெரியோர் அரும்பதவுரை எழுதியிருக்கிறார்கள். ஆத்தான் ஜீயர் என்பவர் வியாக்கியான சாரங்களையெல்லாம் ஒன்று திரட்டி - அடைய வளைத்து - அடைய வளைந்தான் அரும்பத விளக்கம் என்ற ஓர் அரும்பதவுரை செய்தார். பின்னர் அனந்தாழ்வான் மரபிலுதித்த குணகரம் பாக்கம் இராமானுச சீயர் என்பவர் இதையே பெரும் பாலும் தழுவி ஜீயர் அரும்பதவுரை என்ற பெயரில் ஒரு விளக்கம் எழுதினார். இவை மூலவுரைகளை விட மிகவும் கடினமாதலி னாலே இங்கு சேர்க்கப்படவில்லை.

(வியாக்கியானப் பதிப்புகள் : காஞ்சிபுரம் சீனிவாசா சாரியர் பதிப்பு, ஸ்ரீ வைஷ்ணவ கிரந்த முத்ராபக சபர பண்டிதர்களைக் கொண்டு, சீனிவாச அச்சுக்கூடம் 915.1 பகவத் விஷயம். 2. தெலுங்கு லிபி பத்தி வேங்கட கிருஷ்ண சாமி நாயுடு, ஸ்ரீ நிகேதன அச்சுக்கூடம் சென்னை 1901. 3. பகவத் விஷயம்: சே. கிருஷ்ண மாச்சாரியர் பதிப்பு, சென்னை. 4. பகவத் விஷயம்; ஸ்ரீ கிருஷ்ண சுவாமி ஐயங்கார் பதிப்பு, ஸ்ரீநிவாசம் அச்சுக்கூடம் திருச்சி 1975).

**அவதாரிகை**

இரண்டாம் பத்தின் முதல் தசகத்தின் முதல் பாடல்:

**வீடு மின் முற்றவும்**
**வீடு செய் தும்முயிர்**
**வீடுடை யானிடை**
**வீடு செய்ம்மினே.**

**ஆறாயிரப்படி அவதாரிகை**

(வீடு மின் முற்றவும்) இப்படி பரமபுருஷ யாதாதம யாநுப வஜநித நிரவதிக ப்ரீதியானது பகவதேக போகராயிருப்பார் பலரோடே கூட பகவத் ஸ்வரூப குண சேஷ்டித விபவங்களைச் சொல்லியும் கேட்டும் அநுபவம் வேணுமென்னும் அபேக்ஷை யைப் பிறப்பிக்கையாலே, அந்த அபேக்ஷாநு குணமாக அனுப விக்கைக்கு இந்த லோகத்தில் ஆத்மாக்களில் பகவதேக போக ராயிருப்பாரில்லாமையாலே, "இவர்களை பகவதேக போக ராக்கிக் கொண்டாகிலும் அநுபவிக்க வேணும்" என்று இந்த ஆத்மாக்களைக் குறித்து பகவதேக போகத்வோபாயமான பக்தியோகத்தை பகவத் வ்யதிரிக்த விஷய வைராக்கிய பூர்வ மாக உபதேசிக்கிறார்.

### ஒன்பதினாயிரப்படி அவதாரிகை

இரண்டாம் திருவாய் மொழியில் - இப்படி எம்பெருமானுடைய பரத்வத்தை அநுஸத்தித்த ஆழ்வார்; அவ்வநுபவ ஜநித ஹர்ஷப்பரகர்ஷ்தாலே (போதயந்த: பரஸ்பரம்) என்னும் படியாலே சிலரோடே உசாவியல்து தரிக்க மாட்டாத தசை வருகையாலும் அதுக்கு, ஈடானாரைக் காணமையாலும், எல்லாரையும் தமக்குப் பாங்காம்படி திருத்தியாகிலும் அவர்களோடே கூட எம்பெருமானை அநுபவிக்க நினைத்து அவர்களைத் திருத்தம் விரகு எங்ஙனேயென்று பார்த்தருளி, "சேதநராகிறார் - பொல்லாதது கண்டால் கை விடவும், நல்லது கண்டால் கைக் கொள்ளவும் கடவராயிருப்பர்; ஆன பின்பு அவர்கள் பற்றின நிலத்தில் பொல்லாங்குகளைக் காட்டிக் கொடுத்தும் இவர்களைத் திருத்துவோம்" என்று இவர்கள் பற்றின நிலங்களினுடைய அஸ்திரத்வாதி தோஷங்கள் உபதேசித்து அகில ஹேயப்ரத்யநீகனாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய் ஸர்வை: ஸ்ப்ருஹணீயனான எம்பெருமான் படியையும், இவனைப் பற்றுமிடத்துள்ள அந்தராய பரிஹார பூர்வமாக மற்றும் பஜநநத்துக்கு வேண்டு முறுப்புக்களெல்லாம் உபதேசித் தருளி இப்படி அவனை பஜியுங்கோள் என்று பக்தியோகத்தை அருளிச் செய்கிறார்.

### பன்னீராயிரப்படி அவதாரிகை

இரண்டாம் திருவாய்மொழியில் இப்படி ஸர்வஸ்மாத் பரனான பஜநத்துக்கு உபயுக்தமான ததிதர ஸகலத்யாகத்தையும், பஜநப்ரகாரத்தையும், அஸ்தையர்த்தையும் த்யாகத்தையும், த்யாக பூர்வமாக ஆச்ரயனீயனுடைய ஸ்வருப வைக்ஷண்யத்தையும் அதிசயித புருஷார்த்தத்வத்தையும் ஸர்வ ஸமத்வத்தையும் விலக்ஷன ஸ்வரூபமான ஆச்ரயணபர காரத்தையும் தத்பலமான அநிஷ்ட நிவ்ருத்தியையும், ஆச்ரயணரூப பஜநத்தைப் பரோபதேச முகத்தாலே அருளிச் செய்கிறார்.

### இருபத்து நாலாயிரப்படி அவதாரிகை

இரண்டாம் திருவாய் மொழியில் - இப்படி எம்பெருமானுடைய பரத்வத்தை அநுபவித்தவர், அநுபவஜநிதஹர்ஷப்ரகர்ஷத்தாலே போதயந்த பரஸ்பரம் பண்ணியல்லது தரிக்க மாட்டாத தசை வருகையாலும் ஏகஸ்வரது நபுஞ்சீத என்கிற படியே தனியே அனுபவிக்கும் விஷயமல்லாமையாலும், இவர்

தாம் தனியே அநுபவிக்க க்ஷமரல்லாமையாலும் துணை தேடி, அதுக்கு ஈடானாரை ஸம்ஸாரத்தில் காணாமையாலே "எல்லாரையும் திருத்தியாகிலும் அவர்களோடே அநுபவிப்போம்" என்று நினைத்து திருத்தும் விரகு எங்ஙகேயென்று பார்த்தருளி, சேதநாராகிறார் பொல்லாதது கண்டால் கைவிடவும், நல்லது கண்டால் கைக் கொள்ளவும் கடவர்களாயிருப்பார்கள்; ஆன பின்பு ஸம்ஸாரத்தின் தன்மையைக் காட்டியும், பகவத் விஷயத்தின் நன்மையைக் காட்டியும் திருத்துவோம்" என்று பார்த்தருளி இவர்களுக்கு ஸம்ஸாரத்தினுடைய அல்பாஸ்திர த்வாதி தோஷங்களையும், ஸர்வராலும் ஸ்ப்ருஹணீயான எம்பெருமான் படியையும் உபதேசித்தருளி, அவனைப் பஜியுங்கோள் என்று பக்தி யோகத்தை அருளிச் செய்கிறார்.

ஈடுமுப்பதாயிரப்படி அவதாரிகை

(வீடுமின் முற்றவும்) தத்வபரமாயும் உபாசன பரமாயுமிறே மோக்ஷகாஸ்திரந்திரந்தானிருப்பது; அதில் தத்வயகமாகச் சொல்ல வேண்டுவதெல்லாம் சொல்வித்து கீழில் திருவாய்மொழியிலே; உபாஸந பரமாகச் சொல்ல வேண்டுமவற்றுக்கெல்லாம் ஸங்கரஹமாயிருக்கிறது இத்திருவாய்மொழி. இத்திருவாய்மொழி தன்னை, ஆளவந்தார் அருளிச் செய்தாராக திருமலையாண்டான் ப்ரபத்தி விஷயமாக்கி நிர்வஹித்துக் கொண்டு போந்து, எம்பெருமானாரும் அப்படியே அருளிச் செய்து கொண்டு போந்து பாஷ்யம் தலைக்கட்டின பின்பு பக்தி விஷயமாக அருளிச் செய்து கொண்டு போருவர்; பின்பு எம்பாரும் அப்படியே அருளிச் செய்தார். இவருடைய பக்தி ப்ரபத்திகள் தான் விகல்பிக்கலாயிறேயிருப்பது.

"மயர்வறமதிநல மருளினன்" என்று இவர் தாம் பெற்றது பக்தி ரூபாபந்நஞதநஜ்மாயிருந்தது; தாம் பெற்றது ஒன்றும் பிறர்க்கு உபதேசிப்பது ஒன்றுமாக வொண்ணதே அப்பொழுது விப்ரலம்பக கோடியிலேயாவரே. உபயபரிகர் திமஸ்வாதந்தஸ்ய என்கிறபடியே கர்மஞ்ஞாத ஸம்ஸ்க்ரு தாந்த; கரணனுக்குப் பிறக்கு மதிரே பரபக்தி அந்தற்ஞாநகர் மங்களினுடைய ஸ்தாநே பகவத ப்ரஸாதாய், அதடியாக அநந்தரம் விளைந்ததிரே இவருடைய பக்தி தான்.

இதுதான் வேதாந்த விஹிதையான பக்தி தானேயானாயோவென்னில், ஸர்வேச்வர னருள இவர் பெற்றாராகிற ஏற்றம்

போம்; அபசூத்ராதிகரண ந்யாயமும் ப்ரஸஸ்கிக்கும் ஆனபின்பு நாம் பெற்றதையே பிறர்க்கு உபதேசிக்கிறாராக அமையும். கீழில் திருவாய் மொழியிலே அவனுடைய பரத்வத்தை அநுபவித்து ஒரு பெரிய திருநாள் போலேயிறறே போந்தது; இவர் இப்போது நெஞ்சொழிந்திருந்து பிறர்க்கு உபதேசிக்கிறபடி எங்ஙனே தான்? தாம் அநுபவித்த விஷயத்தை எல்லை கண்டோ, அன்றிக்கே தாம் அவ்வியத்தில் விரக்தராயோ? என்னில்; விஷயமோ வென்றால் "தனக்கும் தன் தன்மை அறிவறியான்" என்கிறபடியே அபரிச்சிந்த விஷயம் கொள்ளமாளா இன்ப வெள்ளமிறே. இனி தம் அபிநிவேசமோவென்றால், "காதல் கடலின் மிகப் பெரிதாய்" என்றும் "மண் திணி ஞாலும் ஏழ்கடலும் நீள் விசும்பும் கழியப் பெரிதாய்" என்றும் "சூழ்ந்ததனிற் பெரிய என்னவா" என்னும்படி பெருகியிருந்தது. ஆகிலும் ஒரு கால் ஒன்றியே அபிநிவேசம் பிறந்தால் அப்படிப்பட்ட விஷயந்தானே காலாந்தரத்திலே விரக்கி பிறக்கக் காணா நின்றோம் அப்படியே, சிலகாலம் அநுபவித்துப் பின்பு விரக்தி பிறந்ததோ வென்னில்; அங்ஙனம் சொல்லவொண்ணாது; "எப்பொழுதும் நாள் திங்க ளாண்டூழி யூழி தொறும் அப்பொழுதைக் கப்பொழுதென் ஆராவமுதம்" என்னும்படி நித்யா பூர்வமாயிருக்கும். இனி ஆசார்ய பதம் நிர்வஹிகிக்கைக்காக அன்று; க்யாதிலாப பூஜை களுக்காக அன்று; ப்ரப்ருதாய என்றொரு விதி பரதந்த்ரராயன்று ஆனால் இது பின்னை எத்தாலேயாவது? என்னில்; ஸ்வாநுபவ ப்ரகர்ஷ மிருக்கிறபடி,

தாம் அநுபவித்த விஷயம் தனியே அநுபவிக்கு மதன்றிக்கே இருந்தது: இனி நமக்கு போதயந்த: பரஸ்பரத்துக்கு ஆள்வார்? ஆர்? என்று ஸ்ம்ஸாரிகள் பக்கலிலே கண் வைத்தார்; தாம் பகவத் விஷயத்திலே ப்ரவணராயிருந்தார்கள்; இவர்கள் நர்த்தம் பரிஹரித்தல்லது நிற்க வொண்ணாதாயிருந்தது; "ஒருவனுக்கு வைஷ்ணவத்வம் உண்டு, இல்லை என்னுமிடம் தனக்கே தெரி யுங்காண்" என்று ஜீயர் பலகாலும் அருளிச் செய்வர். பிறர நர்த்தம் கண்டால், "ஐயோ"! என்றிருந்தானாகில் "நமக்கு பகவத் ஸம்பந்தம் உண்டு" என்றிருக்க அடுக்கும்; இத்தனையும் பட்டிடு வானுக்கு என்றிருந்தானாகில் நமக்கு பகவத் ஸம்பந்தமில்லை என்றிருக்க அடுக்கும் என்று.

இவர்களை இவர் மீட்கப் பார்க்கிற வழிதான் என்னென் னில்; இவர்கள் சேதநராயிருந்தார்கள்; சப்தாதி விஷயங்களில்

வாசியறிந்து தீயவை கழித்து, நல்லவை பற்றிப் போருகிறதொன்று உண்டாயிருந்தது. அவற்றினுடைய ஹேயதையையும், ஸர்வேச்வரனுடைய உபாதேயதையையும் இவர்களுக்கு அறிவித்தால் அவற்றை விட்டு இவனைப் பற்ற அடுக்குமென்று பார்த்து, ஸர்வேச்வரனுடைய நன்மையையும், இவர்கள் பற்றின விஷயங்கள் அஸ்பாஸ்தி ரத்வாதி தோஷ துஷ்டங்கள் என்னுமிடத்தையும், பற்றுமிடத்தில் வரும் அந்தராய பரிஹாரத்தையும், பற்றுமிடத்தில் இன்று புதிதாகச் செய்ய வேண்டும் தொன்றில்லை - பழைய ஸம்பந்தத்தை உணர அமையும் என்னுமிடத்தையும், பற்றுவார்க்கு அநுஸந்திக்கப்படும் மந்த்ரம் இன்னதென்னுமிடத்தையும் அவனுடைய பஜு நியதையையும் அருளிச்செய்யா நின்று கொண்டு, இதர விஷய வைராக்ய பூர்வகமாக பகவத் பக்தியைப் பண்ணி ஆச்ரயுங்கோள் என்று பரோபதேச ப்ரவருத்தராகிறார்.

அவதாரிகை முற்றிற்று.

**வியாக்கியானம்**

இனி மேற்காட்டிய வீடுமின் என்ற முதற்பாட்டின் வியாக்கியானம் ஆருயிர்ப்படி பாடலுக்கு வியாக்கியானம் மட்டும் சொல்லுகிறது. மற்ற நான்கும் முதலில் ஓர் அவதாரிகை சொல்லிப் பின் வியாக்கியானம் சொல்லுகின்றது.

**வீடுமின் முற்றவும் வீடுசெய் தும்முயிர்**
**வீடுநடை யானிடை வீடு செய்ம்மினே.**

ஆறாயிரப்படி : வியாக்கியானம் : பகவத் வயதிரிக்த ஸ்ர்வ விஷய ஸங்கத்தையும் விட்டு, இவ்வாத்மாவை சேஷத்வேந ஸமர்ப்பியுங்கோள்; ஸமர்ப்பிக்குமிடத்தில் இத்தையுடையவன் பக்கலிலே ஸமர்ப்பியுங்கோள். ஸமர்ப்பணமாவது இவ்வாத்மா அவனுக்கு சேஷமென்று ஸம்வதிக்கை என்கிறார்.

ஒன்பதினாயிரப்படி அவதாரிகை : முதற்பாட்டில் பகவத் வ்யதிரிக்தமான ஸர்வ விஷயங்களையும் அறவிட்டு, ஸர்வ சேஷியான எம்பெருமான் திருவடிகளிலே ஆத்மாவை ஸமர்ப்பிங்கோள் என்கிறார்.

வியாக்கியானம் : (வீடுமின்) பற்றி நின்ற நிலத்தினுடைய த்யாஜ்யதாசியம் தோற்றுகைக்காக முதலிலே விடுங்கோள் என்கிறார். (முற்றவும்) பண்டு பற்றின விஷயங்களில் சில ஹேயமும்,

சில உபதேயங்களுமாயிருக்கிறனவல்ல; ம்ல த்யாஜ்யமே.(வீடு செய்து) என்று அநுபாஷிக்கிறது. பற்றினவற்றை விடுகையே ப்ரயோஜநம் போந்திருக்கச் செய்தே. அதுக்கு மேலே ஒரு நன்மை உபதேசிக்கைக்காக என்னுமிடம் தெரிகைக்கு. உம்முயிர் என்று தொடங்கி உம்முயிரை விடுமிடத்தில் ஹவில்லா நிலத்திலன் றிக்கே உடையவன் பக்கலிலே விட இசையுங்கோள்.

**பன்னீராயிரப்படி அவதாரிகை** : இதில் முதற்பாட்டில் ஸகலே தர பரித்யாக பூர்வமாக பகவத் விஷயமாக ஆத்ம ஸமர்ப்பணத்தை விதிக்கிறார்.

வியாக்கியானம் : முற்றவும் - பஜந விரோதியான ஸாத்ய ஸாத நங்கள் எல்லாவற்றையும், வீடுமின் - ஸவாஸ நமாக விடுங்கோள்; அவ்வளவில் நில்லாதே, வீடு செய்து - அவற்றை விட்டு, உம்முயிர் - உங்களுடைய ஆத்மாவை, வீடுடையானிடை - மோக்ஷ நிர்வாஹ கனான ஸ்வாமி பக்கலிலே, வீடு செய்ம் மின் - விடுதலைப் பண்ணுங்கோள். "வீடு இசைமினே" என்றும் சொல்லுவர்.

இருபத்து நாலாயிரப்படி அவதாரிகை : முதற்பாட்டில் - பகவத் வ்யதிரிக்தமான ஸர்வ விஷயங்களையும் விட்டு ஸர்வ சேஷியான எம்பெருமான் திருவடிகளிலே ஆத்மாவை ஸமர்ப் பியுங்கோள் என்கிறார்.

வியாக்கியானம் : (வீடுமின்) விடு மின் என்றபடி, இன்னித்தை விடுங்கோளென்னா தொழிவானென்? என்னில் சிறு ப்ரஜை ஸர்ப்பதைப் பிடித்துக் கொண்டிருந்தால், விட்டுக் கொள் ளென்று, பின்னையிறே ஸர்ப்பமென்பது, அது போலே விடுகிற வற்றினுடைய த்யாஜ்யதாதிசயம் தேர்ந்து கைக்காக முதலிலே விடுங்கோள் என்கிறார். உபதேசம் அஷட்கர்ணமாயிருக்க பஹீவசநந்தாலே சொல்லிற்று - சிலர் தாந்தராய் அர்த்திக்கச் சொல்லுகிறாரல்லா மையாலும், அநர்த்தம் ஸர்வ ஸாதாரண மாகையாலும், எல்லாரையும் குறித்துச் சொல்லுகிறார். எத்தை விடுவதென்னும் அபேக்ஷயிலே (முற்றவும்) என்கிறார். அஹம் மமேதி சண்டாள் சண்டாளர் குடியிருப்பை பிராஹ்மணனுக்கு ஆக்கும் போது சண்டாள ஸ்பர்சமுள்ள பதார்த்தமடைய த்யாஜ்ய மானாப் போலே. அஹங்கார காப்பாமாக ஸ்வீகரித்த வற்றில் த்யாஜ்ய மல்லாதன இல்லையென்கை. இனி (உம்முயிர்

வீடுடை யானிடை) என்ன அமைந்திருக்க (வீடுசெய்து) என்று அநுபாஷிக்கிறது. விடுகைதானே ப்ரயோஜநம் போந்திருக்கை, ராஜபுத்ரன் சிறையிலே கிடந்தால் முடி சூடுவதிலும் சிறைவிடுகை தானே ப்ரயோஜநமாயிருக்கு மிறே. (உம்முயிர் வீடுடையானிடை) உங்கள் ஆத்மாவையும் சரீரத்தையும் உடையவன் பக்கலிலே: உங்கள் ஆத்மாவைத் தனக்கு சரீரமாகவுடையவன் பக்கலிலே என்னுதல் உங்கள்; ஆத்மாவை விடுமிடத்தில், உடையவர் பக்கலிலே யென்னுதல்; மோக்ஷப்ரதன் பக்கலிலே என்னுதல் (வீடு) விடுகையை ஸமர்ப்பிக்கையை (இசைமினே) இசையுங் கோள். அவன் நினைவு நித்யமாயிருக்க, நீங்கள் இசையாமை யாலேயிலே இழந்து போந்தது. (யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதி ஸ்தித தேந சேத விவாத ஸ்தேமா கங்காம் மாகுரூந் கம):

**ஈடு முப்பத்தாறாயிரப் படி** அவதாரிகை : முதற்பாட்டு இதர விஷயங்களை விட்டு, உங்களுக்கு வகுத்த விஷயத்தைப் பற்றிப் பாருங்கோள் என்கிறார்.

வியாக்கியானம் : (விடுமின்) "வீடுமின்" என்றொரு சொல் லாய்க் கிடக்கவுமாம்; விடுமின் என்றத்தை நீட்டி "வீடுமின்" என்று கிடக்கிறதாகவுமாம். முதலிலே வீடுமின் என்பானென்? என்னில், சிறு ப்ரஜை, கையிலே ஸர்ப்பத்தை பிடித்துக் கொண்டு கிடந்தால் பொகட்டுக்கொடு நிற்கச் சொல்லி, பின்னை "ஸர்ப்பம்" என்பாரைப் போலேயும், ஒருவன் க்ருஹத்துக்குள்ளே கிடந்து உறங்கா நிற்க, நெருப்புப் பற்றிப் புறம்பே எரியாநின்றால் புறப் பட்டுக் கொள்கிடாய்" என்று, பின்பு "நெருப்பு" என்பாரைப் போலவும், முந்துற "விடுங்கோள்" என்கிறார். ஜந்ம மரணங் களுக்கு நடுவேயிறே இவைதான் நோவு படுகிறது. (த்யக்த்வா புத்ராம்ச்ச தாராம்ச்ச) என்றும், (பரித்யக்தாமயா லங்கா) என் றும், விடுகை முன்னாக விறே முன்பு பற்றினவர்களும் பற்றிற்று.

வீடுமின் என்கிற பன்மையால் சொல்லுகிறது. என்னென் னில், ஒருவன் தாங்கதனாய் வந்து நிற்க, அவனுக்கு உபதேசிக் கிறாரன்றே; ஸம்ஸார வெக்காயம் எல்லார்க்கும் ஒத்திருக்கை யாலே ஒருவரல்லா ஒருவருக்காகிலும் ருசி பிறக்குமோ என்று எல்லார்க்கும் உபதேசிக்கிறார். எத்தை விடுவதென்னில் (முற்ற வும்) சண்டாளர் இருப்பிடத்தை ப்ராஹ்மணர்க்கு ஆக்கும் போது சில கூட்டிச் சில கழித்தன்றே கொள்ளுவது; அப்படியே,

அஹங்கார மமகாரங்களாலே தூஷிதமான வற்றிலே, சில கூட்டிக் கொள்ள வொண்ணாதே; ஆகையாலே கட்டடங்க விடுங்கோள் என்கிறார்.

(வீடு செய்து) "வீடுமின் முற்றவும்" என்றாராகில், திரிய "வீடுசெய்து" என்கிற இதுக்குக் கருத்தென்னென்னில் மேலொரு பேறு பெறுவதிலும் இவற்றை விட்டு, நிற்கும் நிலைதானே பேறாகப் போருகையாலே விடுகையாகிற பேற்றைப் பெற்று என்கிறபடி ராஜபுத்ரன் அழுகு சிறையிலே கிடந்தால், முடிசூடி ராஜ்யம் பண்ணுவதிலும் சிறை விடுகை தானே ப்ரயோஜந மாயிருக்குமிறே.

(உம்முயிர் வீடுடை யானிடை) இதுக்குப் பலப்படியாக அருளிச் செய்வர். (யங்யாத்மா சரீரம் யங்ய ப்ருதிவீசரீரம் என்கிறபடியே, உம் உயிரையும், அதினுடைய வீட்டையும் உடையவன் என்னுதல்; உம் உயிரை வீடாக உடையவன் என்னுதல்; உம் உயிரை விடுமிடத்தில் - ஸமர்ப்பிக்குமிடத்தில் உடையான் பக்கலிலே என்னுதல்.

(உம்முயிர்) அநித்யமான சரீரத்துக்கு நன்மை பார்க்கச் சொல்லுகிறேனோ? நித்யமான ஆத்ம வஸ்துக்கன்றோ நான் நன்மை பார்க்கச் சொல்லுகிறது. அதுதானும் எண்ணுயிர்க்கோ? உம்முயிர்க்கன்றோ. (உடையானிடை) பொதுவிலே உடையவன் என்கிறார். ருசி பிறந்து "அன்வ ஆர்" என்றால் "வண்புகழ் நாராயணன்" என்பாராக, அவன் உடைவனாய் உங்கள் ஸத் தையை நோக்கிக் கொண்டு போரா நிற்க, நீங்களும் "நான் என்னது" என்று அகலப் பாராதே, உங்களை அவன் பக்கலிலே ஸமர்ப்பிக்கப் பாருங்கோள். அவன் உடையவனான பின்பு அவனோடு அவிவாதமே உங்களுக்கு வேண்டுவது.

யம: ப்ராதே சிகமான நியமத்தை உடையவனை அன்று சொல்லுகிறது. (ப்ரபவதி ஸம்யமநே மமாபி விஷ்ணு என்று அவன் தன்னையும் நியமிக்கு மவனாயிற்று இவன் (வைவஸ்வத) விவஸ்வானுடைய குலத்திலே பிறந்தவனென்னுதல்; ஆதித்யாந் தர வஸ்திதனென்னுதல் (ராஜா) அவனைப் போலே "தஹயச" என்கையன்றிக்கே எல்லார்க்கும் இனியனாயிருக்கு மவனா யிற்று இவன் (ய) அந்தர்யாமி ப்ராஹ்மணாதிகளில் ப்ரஸித்தி, (தவைஷ ஹ்ருதி) அவன் எங்குற்றான்? என்ன: கண்டிலையோ? உன்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து ஆட்சியில் தொடர்ச்சி

நன்றென்றிக்கிறான். ஆனால் செய்ப வேண்டுவதென்? என்னில் (தேந சேத விவாதஸ்தே) உடையவனாயிருக்கிறவனோடே உனக்கு அவிவாத முண்டாகில் இத்தால் பேறு என்? என்பாயோ. மா கங்காம் மா குருந் கம) ஒரு தீர்த்தம் தேடிப் போதல் புண்ய க்ஷேத்ரம் தேடிப் போதல் செய்ய வேண்டா; அஹங்காரக மம காரங்கள் கிடக்க ப்ராயச் சித்தம் பண்ணுகையாவது. நிஷித்த த்ரவ்யத்தை உள்ளே வைத்து கூட்டினவோ பாதியிறே.

உடையவனுக்கும் உடைமைக்கும் தக்கப்படியிறே ப்ராய் சித்தமும்: உடையவன் ஸர்வேச்வரன் த்ரவ்யங்களில் ப்ரதாந மான ஆதிமத்ரவ் யத்தையிறே அபஹரீத்ததுப் அபஹரித்த த்ரவயத்தைப் பொகட்டு ப்ராய சித்தம் பண்ணவேணுமே பொகடுகிற த்ரவ்யம் தானாகையாலே, ப்ராயசித்தம் பண்ணு கைக்கு வேறு அதிகாரியுமில்லையே, ஆகையாலே நீங்களும் உடையவன் பக்கலிலே வீடு செய்ம்மினே. வீடு ஸமர்ப்பிக்கை, அதாகுறது - இசைகை.

**1.** நம்மாழ்வார் பெருமானை மயர்வற மதிநலம் அருளின வாகாகச் சுட்டுகிறார். இதில் வரும் 'மயர்வற' என்பதற்கு "ஜ்ஞாநாலைதயம் அந்யாதாஜ்ஞாநம் பிபரீதஜ் ஞாநம் என்கிற இவை வாசரையோடே போம்படியாக 'ஜ்நாநாறுதயமாவது - தேஹாத்மாபிமாரம் அந்யதாஜ் ஞாநமாவது - தேவரந்தரசேஷ மென்றிருக்கை விபரீதஜ் ஞாநமாவது - ஸ்வதந்திரமாகவும் ஸ்வ போக்யமாகவும் நினைத்திருக்கிற கேவலனுடைய ஜ்ஞாநம' என்று நம்பிள்ளை அருளிச் செய்வர். தம் வாயாலே 'மயர்வற' என்று சொல்லலாம்படி காணும் அவன்தான் இவர்க்கு அஜ் ஞாநத்தை வாஸனையோடே போக்கினபடி" என்று ஈடு உரை வகுத்துள்ளது.

**2.** வீடுமின் முற்றவும் வீடுசெய்து உம்முயிர்
வீடுடையானிடை வீடுசெய்ம் மினே.

இதில் பயனிலையாகிய வீடுமின் என்பதனை முதலில் அமைத்துப் பாடியுள்ளதன் கருத்தினையும், அது பன்மையாய் இருப்பதன் காரணத்தையும் கீழ்வருமாறு விளக்கினார் நம்பிள்ளை.

"வீடுமின்" என்று ஒரு சொல்லாய்க் கிடக்கவுமாம்; விடு மினென்றத்தை நீட்டி "வீடுமின், என்று கிடக்கிறதாகவுமாம்.

முதலிலே "வீடுமின்' என்பானென்? என்னில்; - சிறுப்ரஜை கையிலே ஸர்ப்பத்தைப் பிடித்துக் கொண்டு கிடந்தால், போகட்டுக் கொடு நிற்கச் சொல்லி, பிள்ளை 'ஸர்ப்பம்' என்பாரைப் போலேயும், ஒருவன் க்ருஹத்துக்குள்ளே கிடந்து உறங்கா நிற்க, நெருப்புப் பற்றிப் புறம்பே எரியாகின்றால் 'புறப்பட்டுக் கொள்கிடாய்' என்று பின்பு 'நெருப்பு' என்பாரைப் போலேயும் முந்துற விடுங்கோ வென்றிகார். ஜந்ம மரணங்களுக்கு நடுவேயிற இவைதான் நோவு படுகிறது. த்யக்தவா புத்ராம்ச்ச தாராம்ச்ச என்றும் பரித்யக்தா மயாலங்கா என்றும் விடுகை முன்னாகவறே முன்பு பற்றினவர்களும் பற்றிற்று. "வீடுமின்" என்கிற பன்மையாற் சொல்லுகிறதென்? என்னில்; ஒருவன் தாந்தனாய் வந்து நிற்க அவனுக்கு உபதேசிக்கிறாரன்றே: ஸம்ஸார வெக்காயம் எல்லார்க்கு மொத்திருக்கையாலே ஒருவரல்லா வொருவருக்காகிலும் ருசி பிறக்குமோ என்று எல்லார்க்கும் உபதேசிக்கிறார்.

**3.** பராங்குச நாயகி அஞ்சிறைய மட நாரையை நோக்கி, 'என்விடு தூதாய்ச் சென்றக்கால், வன் சிறையில் வன் வைக்கில் வைப்புண்டா லென்செய்யுமோ' என்கிறாள். இதற்கு, (என்விடு தூதாய்) அவன் ஆள் விரவட இருக்கக் கடவ நானன்றோ விடுகிறேன். (விடு) க்ரியதாம் என்கிறபடியே நான் ஏவவன்றோ நீங்கள் போகிறது. பெருமிடுக்கரான பாண்டவர்கள் க்ருஷ்ணனைத் தூது விட்டாற் போலேயோ? அபலையாய் அத்யார்த்தையான நான் ஏவவன்றோ போகிறது. பராத்தமாகத் தூது போகை கிடைப்பதொன்றோ? (சென்றக்கால்) எனக்கு முன்னே உங்களுக்கு உத்தேச்ய மன்றோ ஸித்திக்கப் புகுகிறது? உங்கள் போக்கு அடிக்கழராக பெறாதோ? (வன்சிறையில்) இவள் பாடு நின்றுஞ் சென்றவற்றைச் சிறையிட்டு வைக்கிறானன்றே; இவர்களுக்கு முகங்கொடாதே அந்யபரனாகையிறே இவர்களைச் சிறையிட்டு வைக்கையாவது. ராஜ புத்ரர்களுக்கு ப்ராப்த காலங்களிலே வெள்ளிலை யிடாதபோது மாந்துவர்களிறே (என் விடு தூதாய்ச் சென்றக்கல் வன்சிறையில் அவன் லவக்கில்) நீங்கள் ஏதேனும் அவனுக்குத் தூது போகிறிகளோ? சிறை கட்டுதல், சிங்க விளக்கெரித்தல் செய்யில் செய்வதென்? என்று கூசுகைக்கு; எனக்குத் தூது போனாரை பரிஷ்வங்கோ ஹநூமத: என்னுமா போலே மார்பிலே யணைக்கும் காணுங்கோள். நான் அணைய ஆசைப்படுகிற மார்வன்றோ உங்க பரிசிலாகப் புகுகிறது? (அவன் வைக்கில்) வ்யஸதேஷு மநுஷ்யாணாம் என்றிருக்குமவன்

வைக்குமோ? சிரஸாவஹியானோ? வைப்புண்டா லென் செய் யுமோ?) அது பொல்லாதோ கிடைக்குமாகில்? பரார்த்தமாகச் சிறையிருக்கக் கிடைப்ப தொன்றோ? ராவணன் தேவஸ்திரி களைச் சிறையிட்டு வைக்கத்தான் அவர்கள் காலில் விலங்கைத் தன் காலிலே கோத்துச் சிறை மீட்டவளிறே.

4. பரிவதில்ஈசனைப்பாடி விரிவது மேவலுறுவீர்!
பிரிவகையின்றி நன்னீர்தூய் புரிவதுவும் புகைபூவே.

என்பதன் உரைப்பகுதி:

‘செது கையிட்டுப் புகைக்க அமையும்; கண்ட காரியிடவும் அமையும்’ என்று பட்டர் அருளிச் செய்யும்படி இத்தை பட்ட ரருளிச் செய்தவாறே நகண்ட காரிகா புஷ்பம் தேவாய விறிவே தயேத் என்னா நின்றதே! என்று நஞ்சீயர் கேட்க, “அவனுக்கு ஆகாது என்கிறதல்ல; பறிக்கிற ஆச்ரிதன் கையிலே முன் பாயு மென்றதுக்காகத் தவிர்த்தது காணும்!” என்று அருளிச் செய் தார். “கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார் முளரியு மாம்பலும்” என்று விஸஜா தீயங்களைச் சேர எடுக் கிறது கண்டீரே, த்ரவ்ய தாரதம்யம் பார்ப்பதில்லை யென்கைக் காக; “புள்ளாயோ ரெனமுமாய்ப்புக் கிடந்தான்” - ‘அப்ராக் ருதத்ரவ்யம் வேணும்’ என்று இருந்தானாகில் ஸ்ரீ வைகுண்டத் திலிரானோ? வாராஹ கல்பம் பாரா நிற்கச் செய்தே ஸ்ரீ வராஹ நாயனார்க்கு முத்தக்காசை அமுது செய்விப்பது’ என்று கிடந் தாய், இதென்ன மெய்ப்பாடுதான்!’ என்று நஞ்சீயர் போரவித்த ராயருளினார்.

5. பிரான் பெருநிலங் கீண்டவன் (1:7:6)

என்பதில், ‘பிரான்’ என்னும் சொல்லுக்கு,

“(பிரான்) நிலா தென்றல் சந்த நம் பிறர்க்கேயாயிருக்குமா போலே தன் படிகளையடையப் பிறர்க்காக்கி வைக்குமவன். ஸர்வ விஷயமாகவும் ஆச்ரித விஷயமாகவும் பண்ணும் உபகா ரத்தை நினைத்து “பிரான்” என்கிறது” என்பது ஈட்டில் காணப் படும் அழகிய உரை.

6. மணியை வானவர் கண்ணனைத் தன்னதோ
ரணியை (1.10:11)

இப்பாசுரப் பகுதிக்கு இருபத்து நாலாயிரப்படியில் காணப் படும் உரை வருமாறு:

(மணியை) - தமக்கு முடிந்து ஆளலாம்படி ஸுலபனான படியைச் சொல்லுகிறார் (வானவர் கண்ணனை) நித்யஸூரி களுக்கு நிர்வாஹகனான மேன்மையையுடையவனை (தன்ன தோரணியை) தனக்குத்தானே ஆபரணமான அழகையுடை யவனை. "தென்குறுங்குடி நின்ற" என்கிறவிடம் - ஸௌலப்யம், "உம்பர் வானவ ராதியஞ் சோதியை" என்கிறவிடம் - மேன்மை, 'செம் பொனே திகழும் திருமூர்த்தி" என்கிறவிடம். அழகு. ஸௌலப் யமும் மதிப்பும் அழகுங் கூடின பசுங்கூட்டு -பகவத்தத்வம்.

7. வாயுந் திரையுகளும் கானல் மடநாராய் (2:1:1:24) என்ப தில் உள்ள கானல் என்னும் சொல்லின் விளக்கத்தில் கீழ்வரும் செய்திகள் இருபத்து நாலாயிரப்படியில் இடம் பெற்றுள்ளன.

(கானல்) நெய்தல் நிலம். பிரிந்தார் இறங்குமிடம் நெய்தல் நிலம்; அத்தாலும் தன் ஆற்றாமை அவற்றுக்கு முண்டென்றிருக் கிறாள். நெய்தலுக்கு பூதம் ஜலம். கூடுமிடம் குறிஞ்சி; பூதம் ஆகாசம். பிரியுமிடம் பாலை; பூதம் தேஜஸ்ஸூ. ஊடலுக்கு ஸ்த்தானம் மருதம்; பூதம் வாயு".

8. எனதாவியுள் கலந்த பெருநல்லுதவிக் கைம்மாறு (2:3:4:46)

என்னும் அடிக்கு உரை வரையுங்கால்,

"உதவி, நல்லுதவி, பெருநல்லுதவி. உதவியாவது - உபகரிக்கை. நல்லுதவியாவது - பச்சை கொள்ளாதே, உபகரிக்கை. பெரு நல் லுதவியாவது - தன் பேறாக உபகரிக்கை" என்று எழுதிச் சொல் கிறது ஈடு.

9. நாடி நாடி நரசிங்காவென்று
வாடிவாடும் இவ்வா ணுதலே. (2:4:1:36)

இப்பாசுரப் பகுதியில் நரசிங்கா என்னும் சொல்லுக்கு வரையப் பட்டுள்ள உரை உணர்ச்சி மயமானது; கேள்வி வடிவில் அமைந் தது. "தமப்பன் பகையானாலோ உதவலாவது, நீர் பகையானால் உதவலாகாதோ? ஜ்ஞாந நிஷ்டர்க்கோ உதவலாவது? பக்தி நிஷ் டர்க்கு உதவலாகாதே? ஆண்டுகளுக்கோ உதவலாகாதோ? பெண்களுக்கு உதவலாவார்க்கு உதவலாகாதோ? ஒரு அதிகாரி நியதி, ஒரு கால நியதி, ஒரு அங்கநியதி என்கிற நிர்ப்பந்தம் வேணுமோ இவளுக்கு? இவளுடைய ரக்ஷணத்துக்கும் ஏதேனும் முகம் பண்ண வேணுமோ?" என்பதே அவ்வுரை.

**10.** புலனைந்துமேயும் பொறியைந்து நீங்கி
நலமந்தமில்லாததோர் நாடு புகுவீர். (2:8:4:36)

என்பதில் முதலடிக்கு, "புலனைந்து என்கிறது விஷயம் களையாய், அவற்றிலே ப்ரணமாகக் கடவவான பொறியைந்து உண்டு, ச்ரோத்ராதிகள்; அவற்றுக்கு வக்ய ராகை தவிர்ந்து, சில பதார்த்தங்களை வறை நாற்றத்தைக் காட்டி முடிக்குமா போலே, சப்தாதிகளிலே மூட்டி நசிப்பிக்கையாலே, இந்த்ரியங்களை - 'பொறி' என்கிறது. இத்தால் பரிச்சிந் நவஸ்துக்ராஹகமான இந்த்ரியவச்யராகை தவிர்ந்து." என்பது ஈடு எழுதியுள்ள உரை.

**11.** திருமலை
பண்கள் தலைகொள்ளப் பாடிப்பறந்துங் குணிந்துழலாதார்
மண் கொளுலகிற் பிறப்பார் வல்வினை மோதமலைந்தே. (3:5:2:36)

இதில் பண்கள் தலைக் கொள்ளப்பாடி என்பதற்குக் கீழ்வரும் பல்வேறு விளக்கங்கள் தரப்பட்டுள்ளன.

"பண்கள் தலைக் கொள்ளப்பாடி - திருமலைப் பண்கள் தலைக்கொள்ளப்பாடி. ச்ரிய: பதியைப் பாடா நின்றார்கள்" என்று, பண்கள் தான், 'என்னைக் கொள், என்னைக் கொள்' என்று வந்து தலைக்காட்ட; அதாவது பண் சுமக்கப்பாடியென்றபடி. அன்றிக்கே, பண்கள் தலைமை பெறும்படிபாடி, தலையான பண்ணிலேபாடி. அன்றிக்கே, ப்ரீதியாலே அடையு கெட்டு, ஒரு பண்ணிலே எல்லாப் பண்ணும் வந்து மெய்க் காட்டும்படி எண்ணவுமாம்.

**12.** கோவை வாயாள் பொருட்டு ஏற்றினெருத் தமிறுத்தாய்.

என்பதற்குக் கற்பனை கொண்டு தீட்டப்பட்டுள்ள உரை சுவையானது.

(கோவை வாயாள் பொருட்டு) தன்னைப் பேணாதே அவனுக்கு இவ் வெருதுகளின் மேலே விழ வேண்டும்படியாயிருக்கும் அவயவ சோபையென்கைக்காகச் சொல்லுகிறது. ருஷபங்களை முன்னிட்டு 'இவற்றையாடர்த்தாருக்கு இவளைக் கொடுக்கக்கடவோம்' என்று, இவளை அலங்கரித்து முன்னே கொண்டு வந்து நிறுத்தினார்கள். இவளை யணையலாமாகில் இவற்றை முறித்தாலாகாதோ? என்று தன்னைப் பேணாதே அவற்றின் மேலே விழுந்தான். "நம்பி மூத்தபிரான் முற்பட வந்து கிட்டின விடத்து இவன் தலையிலே வெற்றி கிடந்தால்

*செய்வதென்? என்று வெறுப்பாலே அவாங்முகியாயிருந்தான் க்ருஷ்ணன் வந்து தோன்றினவாறே ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே ஸ்மிதம் பண்ணினாள்; அப்போதை அதரத்தில் பழுப்பு இருந்தபடி. அந்த ஸ்மிதத்திலே தோற்றுத் தன்னை அவளுக்கு ஆக்கினான்."*

**13.** **பூசும்சாந்து என்னெஞ்சமே புனையும் கண்ணிஎனதுடைய வாசகம்செய் மாலையே வான் பட்டாடையும். (4:3:2:36)**

*இதில் வான் பட்டாடையுமஃதே என்பதற்கு ரசோக்தியாகத் தரப்பட்டுள்ள ஈட்டுரை வருமாறு:*

*இவருடைய பா, நல்ல நூலாகையாலே வான் பட்டாடையாயிற்றுக் காணும் 'நல்ல நூலாக வேணும்' என்று அடியிலே நோற்றுநூற்ற வரிறே.'*

**14.** **பேய்ச்சிமுலை சுவைத்தார்க்குஎன் பெண்கொடியேற்றிபித்தே (4:4:6:36)**

*என்னும் தொடருக்குத் தமிழ் இலக்கண வழி நின்று உரை கூறப்பட்டுள்ளது. அவன் முன்பே ஒரு உபகாரத்தைப் பண்ணி வைத்தான்; அதிலே தோற்றவன்று தொடங்கி இவள் பிச்சேறத் தொடங்கினாள். தாயுங்கூட உதவாத ஸமயத்திலே பூதறை வந்து முலை கொடுக்க, அவ்வளவிலே உணர்த்தியுண்டாய் அவளை முடித்துத் தன்னை நோக்கித் தந்தானே; அவ்வுபகாரத் திலே தோற்று அன்று தொடங்கி இவள் பிச்சேறினாள். "பூத்தரு புணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி, களிறுதரு புணர்ச்சி" என்றிவை புணர்ச்சிக்கு ஹேது. அதாவது எட்டாத கொம்பிலே நின்ற தொரு பூவை ஆசைப்பட்டால் இவன் தன்னைப் பேணாதே இவளாசையை முடித்துக் கொடுக்கை பூத்தரு புணர்ச்சி. ஆற் றிலே யழுந்துகிற இவளைத் தான்புக்கு ஏற விட்டதுக்காகத் தன்னைக் கொடுக்கை புனல்தரு புணர்ச்சி. அசிந்தமான ஆனையின் கையிலே அகப்பட்டவளை மீட்டுக் கொடுத்ததுக் காகத் தன்னைக் கொடுக்கை களிறுதரு புணர்ச்சி. இவை யொன்றுமில்லை; அவன் தன்னை நோக்கினதுக்கு இவன் தன்னையெழுதிக் கொடுக்கிறாள்.*

**15.** **ஓர்ப்பால் இவ்வொண்ணுதல் உற்றநல் நோயிதுதேறினோம் (4:91:36)**

*என்பதில் ஓர்ப்பால் என்பதற்கு உரை தருங்கால் கூரைத் தாழ் வானைப் பற்றிய செய்தியைப் புறப்படுத்தி எழுதிச் சொல் கிறது ஈடு.*

(ஓர்ப்பால்) இப்போது ஓர்ந்து பார்த்தவிடத்து, நீங்களும் ஆராய நின்றி கோளிறே; உங்களோ பாதி நானும் ஆராய்ந்த பார்த்த விடத்தில் இங்ஙன தோற்றிற்று. இவள்தான் ஒரு கூரத் தாழ்வானோடு ஒக்குங் காணும்; மநஸ்ஸை ப்ரத்யக் விஷய மாக்கினால் தத்த்வத்ரயத்தையும் அலகலகாகக் காணவல்லவ ளாயிற்று."

**16.** சீலமில்லாச் சிறியனேலும் செய்வினையா பெரிதால்
ஞாலமுண்டாய் ஞானமூர்த்தி! நாராயணா! என்றென்று
காலந்தோறும் யானிருந்து கைதலை பூச விட்டால்
கோலமேனி காணவராய் கூவியும் கொள்ளாயே. (4:7:1)

என்னும் பாட்டில் சமயக் கருத்துக்கள் இடம் பெற்றிருத்தலை இறுதியில் தொகுத்துத் தருகிறது ஈடு.

"நாராயணனென் கையாலே ப்ராப்யம் சொல்லிற்று. சிறியனென் கையாலே ப்ரத்யகாத் மஸ்வ ரூபம் சொல்லிற்று; வாராயென் கையாலே உபாயம் சொல்லிற்று; காணவென் கையாலே பலம் சொல்லிற்று; செய்வினையா பெரிதென் கையாலே விரோதி சொல்லிற்று; ஆக அர்த்த பஞ்சகமும் இதிலே சொல்லிற்று"

"மணிமாயைக் குறைவில்லா மலர் மாதருறை மார்பன் என்பதில் உள்ள 'உறை மார்பன்' என்பதற்குக் கீழ்க்கண்டவாறு உரை ஈட்டில் எழுதப்பட்டுள்ளது.

உறை மார்பன் - அவள் நித்ய வாஸம் பண்ணுகிற திரு மார்பையுடையவன். பூவில் பிறப்பேயாய், நித்ய வாஸம் பண் ணுவது மார்பிலே யாயிருக்கை தான் பிறந்த பூ நெருஞ்சிக் காடாம் படியான மார்பு படைத்தவன்.

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதரடிக்கு நெருஞ்சிப் பழம்" என்றானிறே. முக்தன் பலம்ஸார யாத்வியை ஸ்மரியாதாப் போலே பூவை நினையாதே வர்த்திக்கும் மார்பு படைத்தவன். பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்த பின்பு ஸ்ரீமிதிலையை நினைக்கலாயிற்று. இவள் பூவை நினைப்பது. அவள் "அகல கில்லேன்" என்கிற வடிவை நான் இழப்பதே (4:8:2:36).

**17.** குறியமாணுருவாகியநீள் குடக்கூத்தனுக் காட் செய்வதே.

என்பதில் முன்னிற்கும் குறிய மாணுரு என்பதற்கு அரிய விளக்கம் தரப்பட்டுள்ளது.

குறிய கோடியைக் காணியாக்கிறாப் போலே கண்ணாலே முகக்கலாம்படி வடிவை அமைந்தபடி.

**18.** மாணுருவாகிய... இட்ட போ தோடு
இடாத போதோடு வாசியற முகமலர்ந்து
போம்படியாக இரப்பிலே தழும் பேறினபடி. **(4:10:10:36)**

*நம்மாழ்வார் தம்மை 'வன்கள்வனேன்' என்று தாழ்த்திப் பேசிக் கொள்கிறார். இத்தொடருக்கு இருபத்து நாலாயிரப் படி தரும் விளக்கம் நயமானது.*

*'வன்கள்வனேன் - களவாவது - பரத்ரவ்யாபஹாரம் வலிய களவாவது- "சோரேணாத்மாபஹாரிணா" என்கிறபடியே, பகவத் சேஷமான ஆத்மவஸ்துவை அபஹரிக்கை" (5:1:4:24).*

**19. "தடங்கல் பள்ளிப் பெருமான் தன்னுடைப் பூதங்களே யாய் நடந்தும் பறந்தும் குனித்தும் நாடகம் செய்கின்றனவே"** *என்னும் பாசுரத்தில் "நாடகஞ் செய்கின்றனவே" என்னும் சொற்றொடருக்கு ஆசாரியர்களின் வரலாற்றை இணைத்து, "இவர்கள் வயாபாரம் இவர்க்கு வல்லா ராடினாப் போலே யிருக்கை. எம்பெருமானுடைய ஸ்த்திதி கமநசய நாதிகளை நாம் கொண்டாடுமா போலேயும், ஆளவந்தார் நடையை ராஜா கொண்டாடினாப் போலேயும் இவர் கொண்டாடுகிறபடி" என்று அருளிச் செய்வர்" என்று விளக்கம் தரப்பட்டுள்ளது. (5:2:4:36)*

**20. "மாசறு சோதி"** *முன்னுரையில் (ப்ரவேசம்) தமிழ் இலக்கணக் கருத்துக்களைக் குறிப்பிட்டு விளக்கம் எழுதப் பட்டுள்ளது. அது வருமாறு.*

*"அபிமத விஷயத்தைப் பிரிந்து ஆற்ற மாட்டாதார் மடலெடுக்கக் கடவர்கள்" என்று ஒன்றுண்டு தமிழர் சொல்லிப் போகுவது. அதாவது -'துல்ய சீல வ்யோவ் ருத்தாம்' என்று சீலத்தாலும் வயஸ்ஸாலும் அபிஜநத்தாலும் வடிவழகாலும் ஸம்பத்தாலும் குறைவற்றிருப்பன இரண்டு விஷயமாய், அது தன்னில், "அறிவு, நிறைவு, ஓர்ப்பு, கடைப் பிடி" என்றாப்போலே சொல்லுகிற நாயக லக்ஷணங்கள் நாயகிக்கும் உண்டாய், இப்படி இரண்டு தலையும் குறைவற்று இவர்கள் தாங்கள் ப்ராப்த யௌவநரு மாயிருக்க; இவர்களைப் புறம்பு கூட்டுவாரின்றிக்கே யிருக்க, யாத்ருச்சிகமாக அவனும் வேட்டைக்கு என்று புறப்*

பட்டு இவளும் பூக்கொய்து விளையாட என்று உத்யாநந்திலே புறப்பட அவ்விடத்திலே தைகயோகத்தாலே இருவர்க்கும் கண் கலவியுண்டாய். இவரடியாக வந்த ஸம்ச்லேஷ மல்லாமை யாலே பிரிவோடே வ்யாப்தமாகப் பிரிந்து, குணாதிக விஷய மாகையாலே இரண்டு தலைக்கும் ஆற்றாமை விஞ்சி, ஒரு தலையையொழிய ஒரு தலைக்குச் செல்லாமை பிறந்த இரண்டு தலையையுமழித்தாகிலும் பெறப்பார்க்கை. மடலூருகையாவது தான் - அபிமத விஷயத்தைப் பிரிந்த ஆற்றாமையாலே அவ்விஷ யத்தை ஒரு படத்திலேயெழுதி, வைத்தகண் வாங்காதே அத்தைப் பார்த்துக் கொண்டு, பனை மடலைக் குதிரையாகக் கொண்டு பிரிந்தபோது தொடங்கிக் கண்ட போகோப கரணங்களெல் லாம் அக்நிகல்பமாய்த் தோற்ற, ஊணுமுறக்கமு மின்றிக்கே உடம்பில் துளி நீரேறிட்டுக் கொள்ளாதே, மயிரை விரித்துக் கொண்டு திரிபா நின்றாள், இத்தர்ம ஹாநியைக் கண்ட க்ஷத்ரியர்கள் "கெட்டேன் இவனுக்கு ஒரு விஷயத்திலே இத்தனை பாவபந்த முண்டாகாதே" என்று அவர்கள் அவ்விஷயத்திலே கூட்டுதல் இல்லையாகில்; இதுவே ஹேதுவாக இரண்டு தலையிலுள்ள பந்துக்கும் கைவிட, அலக்குப் போர் போதல் ஒருவர்க்கொருவர் புகலாய் அங்ஙனே கூடுதல், தோழிமார் கூட்டுதல், ஆற்றாமை கூட்டுதல், அந்த விஷயந்தான் குணாதிக விஷயமாயிருக்குமாகிப் பழிக்கு அஞ்சிக் கூடுதல், இவையித் தனையு மில்லையாகில் முடிந்து பிழைத்தல் செய்கையாவ தொரு ஸாஹஸ ப்ரவ்ருத்தி விசேஷமாயிற்று. இது தன்னை "கடலன்ன காமத்தராகிலும் மாதர் மடலூரரார் மற்றையார் மேல்" என்று ஆச்ரயத்தள வல்லாதபடி ஆற்றாமை கரை புரண்டாலும் ஸ்த்ரீகள் மடலூரக் கடவர்களன்று; நாயகன் தன்னாற்றாமையாலே மடலெடுத்து உலகின்மேல் வைத்துச் சொல்லுதல், (உலகின் மேல் வைத்துச் சொல்லுகையாவது - ஸ்வாபிப்ராயத்தை யறிவியாமல் "ஒருவன் மடலூரப் போகிறான்" என்று அந்யாபதேசேறச் சொல்லுகை)" - நான் வரை பாயப் புகா நின்றேன், மடலெடுக்கப்புகா நின்றேன்" என்று தோழிக்கு வந்து அறிவித்தால், அவள் கூட்டிற்றிலளாகில் பின்பு அவன் இது செய்யக்கடவன்; இத்தனையல்லது ஸ்த்ரிகள் மடலெடுக்கக் கடவரல்லர்கள் என்று இங்ஙனே ஒரு மர்யாதை கட்டினார்கள் தமிழர்; இங்கு அங்ஙனன்றிக்கே, பிராட்டி தான் மடலெடுத் தாக இராகின்றது. தமிழர் "ஸ்த்ரீகள் மடலூரக் கடவரல்லர்"

என்று சொன்ன இது பின்னைச் சேரும்படி ஏன்:? என்னில் அவர்கள் ஒரு தலையிலே தான் அத்தை யிசைத்தார்களே, அப் படியிசைக்கு அடி ஆற்றாமையே, இரண்டு தலைக்கு மொத்த பின்பு ஒரு தலையிலொதுக்கு வாரார். வரம்பு அழிய வாகிலும் முகங்காட்டி வைத்துக் கொண்டு தரிக்க வேண்டும்படியா யிருப்பதொரு விஷயம் புறம்பில்லையே; இங்ஙனே யிருப்பார் சிலரைக் கற்பித்துக் கொண்டார்களித்தனையிறே. இதுக்கு ஒரு மரியாதை கட்டுகையாவது. ஆசைக்கு ஒரு வரம்பிட்டார் களாமித்தனையிறே, அப்போது பிள்ளை ராஜாஜ்னருக்கு நிற்க வேணும், இல்லையாகில் வேலியடைத்தால் நிற்க வேணும். ஆகையால் அவர்கள் ப்ரமேஸ்வபாவம் அறிந்தவர்களாமித் தனை". *(5:3:0:36)*

**21.** **'ஏனமாய் நிலங்கீண்ட வெள்ளப்பனே கண்ணா'** என்னும் தொடருக்குச் சிலேடை பொது, "என்னுடைய ரக்ஷ ணத்துக்கு ஏதேனும் முகப்பண்ண வேணுமோ? என்னுடைய ரக்ஷணத்துக்கு ஒரு கோலங்கொள்ள வேணுமோ? கண்ணன் கோளிழை வாண் முகப்பிறே இவர்க்கு ரக்ஷகம்" என்று உரை வரைந்துள்ளது ஈடு *(5:7:6:36)*.

**22.** "அடிகள் கைதொழுது அலர் மேலசையு மன்னங்காள்... கொடிய வல்வினையேன் திறங்கூறுமின் வேறுகொண்டே" *(6:1:9)* இதில் 'அவர் மேலசையு மன்னங்காள்' என்னும் விளிக்கு 'நான் பூக்காண விறாய்க்கும் படியாயிருக்க, உங்களுக்குப் பூவிலே கால் பொருந்துகை போருமோ! நான் தரைக்கிடை கிடக்க, உங்களுக்கிது போகமாய்த் தலைக்கட்டுமோ? என் னையும் மென் மலர்ப்பள்ளி பொறுப்பித்தலன்றோ உங்களுக் கிது போகமாவது" என்று தலைவியின் உள்ளக்கிடை (பாவம்) காட்டி உரை கூறப்பட்டுள்ளது *(6:1:9:36)*.

**23.** எங்கள் சிற்றிலும் யாமடு சிறு சோறுங் கண்டு நின்
முகவொளிதிகழ முறுவல் செய்து நிற்றிலையே. **(6:2:9)**

இப்பகுதிக்கு "எங்கள் லீலைகளைக் கண்டு ப்ரீதனாய் நின்முக வொளி திகழ முறுவல் செய்து நிற்க, நாங்கள் சிற்றலைத் தொட்டுக் கொண்டிருந்து கடைக் கண்ணாலே உன்னைப் பார்த்துக் கொண்டிருக்க வைத்திலையே, முழுக்கப் பார்க்கில் எல்லாரோபாதியுமாமே. ப்ரணயியைப் பார்ப்பது கடைக்

கண்ணாலேயிறே. உன்னுடை லீலை போலே என்றிருந்தாயோ எங்களுடைய லீலையை? கர்பநிபந்த நமாகையாலே த்யாஜ்யமிறே இது "உன்னோடு ஸம்ச்லேஷியேன்" என்று நான் பண்ணின ஸங்கல்பத்தை அழகாலே அழித்தாய், லீலைகளைத் திருவடிகளாலே அழித்தாய் என்று இன்னாதாகிறாள்." என்று இருபத்து நாலாயிரப்படி உரை கூறுகிறது.

> உண்ணுஞ்சோறு பருகுநீர்
> தின்னும் வெற்றிலைப்படி மெல்லாம்
> கண்ணன்.

இத்தொடருக்குச் "சோறு, தண்ணீர், வெற்றிலை" என்ன வகையாதோ? "உண்ணுஞ் சோறு" என்றாப் போலேயிருக்கிற விசேஷணங்களுக்குக் கருத்தென்? என்னில் "வேட்ட பொழுதி லவையவை போலுமே தோட்டார் கதுப்பினா டோள்" என்று அவனும் சொன்னானிறே (அதாவது அபேட்சையுடைய போதில் அந்த வந்த சோறு தண்ணீர் வெற்றிலை போலாகுமிறே தோடு பொருந்தின கதுப்பை யுடையவள் தோளின் சமச்லேஷம்:) அப்படியே இவைதானே அற்பிதமுமாயிருக்கும் ஒரோ அவஸ்தைகளிலே அதுக்காக அபிமதஸமயத்தில் இவைதான் யாதொருபடியிருக்கும் அப்படியேயாயிற்று இவர்க்கு எப்போதும் பகவத் விஷயமென்கைக்காக தாரக போஷக போக்யங்களெல் என்று ஈடு குறளை மேற்கோள் காட்டி உரை வகுத்துள்ளது. 6.7.1.36 இதற்குக் கீழ்வருமாறு உரை வரையப்பட்டுள்ளது. (கற்பார் இத்யாதி) இவ்விஷயத்தை யொழியப் புறம்பு கற்குமது கல்விக்கு உடலல்ல என்றிருக்கிறார். 'ததஜ்ஞாந மஜ்ஞாந மதோந்யதுத்தம்' என்றானிறே. பகவல்லஸத்துக்கு உடலான ஜ்ஞாநம் ஜ்ஞாநமாகிறது; அல்லாதது அஜ்ஞான மென்னக் கடவதிறே. (கற்பார் ஒருவன் ஒன்றைக்கற்பது அப்போதைக்கினிது என்றாதல், பின்பொரு நன்மையை விளைக்கும் என்றாதல் ஆயிற்று (இராம பிரானென்கையாலே) அவையிரண்டும் இவ்விஷயத்தை யொழியவில்லை யென்கை. ராமனென்கிற இத்தால் - புறம்பு போகாமல் காற் கட்டும் படியான அழகைச் சொல்லுகிறது; பிரானென்று கொண்டு அவ்வழகாலே சேதநரை அநந்யார்கமாக்கும்படியும், நிலாத்தென்றல் சந்தநம் தண்ணீர் போலே தன்னுடைய ரமணீயத்வமும், பிறர்க்கேயாயிருக்கும் உபகாரத்வமும் சொல்லுகிறது."

**24. "திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எங்கள் செல் வார்வே"** என்னும் *(8:4:1)* நம்மாழ்வார் பாசுரத் தொடரினை எடுத்துக் காட்டுத் தந்து கீழ்வருமாறு விளக்குவர் நம்பிள்ளை:

*(திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு) புலி நின்ற தூறு போவே ப்ரதி உவர் தங்களுக்கு அஞ்ச வேண்டும். ஊர், (எங்கள்) மஹாராஜர், பெரியாழ்வார், ஸ்ரீ விதுரர், தரம், பிள்ளை புறங் காவல்லிதாசர் இங்ஙனொத்த பரிவர். செல்சார்வே - நிர்ப்பய ஸ்த்தாநமென்று புகும் புகல்."*

**25.** 'உன்மத்தர் போல்'

பித்தேயேறியனுராகம் பொழியும் போது 8:8:8

என்னும் நம்மாழ்வார் பாசுரத் தொடருக்குக் கற்பனைக் கண் கொண்டு விளக்கவுரை தீட்டுகிறது ஈடு, அவ்வுரை வருமாறு;

*(அநுராகம் பொழியும் போது) இளையாளைப் பொன்னை யும் பூட்டிக் கொடு வந்து முன்னே நிறுத்துவார்கள். புத்ராதி கள் பக்கல் ஸ்நேஹியாத நாளைக்கும் போர ஸ்நேஹிக்கத் தொடங்கும். ஜீவிக்கும் நாள் லோபத்தாலே இவற்றுக்கு ஒன்றும் செய்யான். இப்போதாக "புதைத்து வைத்த தநத்தை ஆபரண மாகப் பூட்டிக் காணப் பெற்றிலோம்" என்று மதகு திறந்து ஸ்நேஹிக்கும். (8:8:8:36)*

**26.** நீக்கமில்லா வடியார்தம் அடியாரடியா ரடியாரெங்

கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே.

என்பதில் 'நீக்கமில்லா வடியார்' என்பதற்கு உரை வகுக்குங்கால் அடியார்களை வகைப்படுத்தி இனிய உரை தருகிறார் நம்பிள்ளை.

*(நீக்கமில்லா வடியார்) பிரிய நினைக்கில் "குருஷ்வமடம்" என்ன வேண்டும்படி விச்லேஷம் உதிக்க மாட்டாதவர்களில் சரமாவதியானவர்கள் என் ஸ்வாமிகள். "தமர்கள் தமர்கள் தமர்களாம்" என்று முடித்த வெல்லையை முதலாகத் தொடங்கு கிறார். சயமே யடிமை தலை நின்றாராகிறார் ஸ்ரீ பரதாழ்வான் போல்வார், கோதிலடியாராகிறார். ஸ்ரீ சத்ருக் நாழ்வான் போல்வார்; நீக்கமில்லா வடியாராகிறார். இளைய பெருமாள் போல்வார் - 8:10-10-36.*

**27.** கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர் பிறரும்

கண்டதோடு பட்டதல்லால் காதல் மற்று யாது மில்லை

என்பது நம்மாழ்வார் பாசுரம் (9:1:1) இதில் 'கொண்ட பெண்டிர்' என்பதற்குப் பலவாறு உரை வகுக்கிறது ஈடு.

"கொண்ட பெண்டிர் - தான் தன் ஹ்ருதயத்திலே பந்துக் களாக நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல். நிருபாதிக மாக வந்த தன்றிக்கே த்ரவ்யாத் யுபாதிகளாலே பரிக்ரஹித்த ஸ்த்ரீகள், அன்றிக்கே, மாதா பிதாக்களைச் செங்கற்சீரை கட்ட விட்டு, தான் ஆர்ஜ்ஜித்த தகத்தையடையக் கொடுக்கும்படி தஞ்சமாக நெஞ்சிலே கொண்ட பெண்டிரென்றுமாம். ஆசார் யனும், பரதேவதையும் ஐச்வர்யாதிகளும் எல்லாம் இவளேயாகக் கொண்ட பெண்டிரென்றுமாம். இவளுண்டாகையிறே எல்லா மென்றிருக்கை. அன்றியே, இரு ஸர்வவிசேஷணமாய், பந்துக் களாகத் தான் நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல்' (9:1:136).

**28.** **மையார் கருங்கண்ணி கமல மலர் மேல்**
**செய்யாள் திருமார்வினில் சேர்திருமாலே.**

என்கிறார் நம்மாழ்வார் (9:4:1).

இதில் வரும் 'திருமாலே' என்பதற்குச் சுவை நிறைந்த உரையினை வகுத்துச் சொல்கிறார் நம்பிள்ளை.

திருமாலே - அவனும், இவள் மார்பில் படும் பாட்டை இவளுடைய ஸர்வாவயவங்களிலும் பிச்சேறியிருக்குமாயிற்று. அவனுக்குத் திருக்கண்கள் சிவந்தாயிற்றிருப்பது. அவன் இவளை நிரந்தர கடாக்ஷம் பண்ணுகையாலே, அவன் கண்ணின் சிவப்பு இவள் மேலே யூறி இவள் திருமேனி சிவந்திருக்கும், இவள் அவனை நிரந்தர கடாக்ஷம் பண்ணுகையாலே, இவள் கண்ணிற் கறுப்பு அவன் திருமேனியிலே பரந்து அவன் திருமேனி ச்யாமளமாயிருக்கும். இவளுக்குத் திருக்கண்கள் குளிர்ந்திருக் கும்; அவனுக்கு வாத்ஸல்யம் விஞ்சியிருக்கும். அவனோட்டைச் சேர்த்தியாலேயாயிற்று இவளுக்குத் தண்ணளி விஞ்சியிருப்பது; இவளோட்டைச் சேர்த்தியாலே யாயிற்று அவனுக்கு வாத்ஸல்யம் விஞ்சியிருப்பது. ஆக, இருவர்க்கும் இரண்டும் குறைவற்றிருக்கும், ப்ரணயித் வத்தாலே" (9:4:1-36).

**29.** **செஞ்சொற்கவிகாள் உயிர்காத் தாட் செய்ம்மின்.**

என்பது நம்மாழ்வார் வாக்கு. (107:1)

இதற்குப் பின்வருமாறு உரை வகுக்கிறது ஈடு.

"செஞ்சொல் இத்யாதி - செவ்விய சொல்லையுடைய கவிகாள்! கவிக்கும் செவ்வையாவது அநந்யப்ரயோஜநமாயிருக்கை; ப்ரயோஜநத்தைக் கணிசிச்கை கவிக்குக் குடில மாகையாவது. 'இன்கவிபாடும் பரமகவிகள்' என்றும் 'செந்தமிழ் பாடுவார்' என்றும் சொல்லுகிற முதலாழ்வார்களை யாய்த்து நினைக்கிறது. "பெருந்தமிழனல்லேன்" என்னாவாயவனையல்லது வாழ்த்தாது "என்கிறவர்களிறே அநந்ய ப்ரயோஜநர்."

நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலி வெய்த என்னும் நம்மாழ்வார் பாசுரத் தொடரில், "நண்ணாவசுரர் நலிவெய்த' என்பதற்கு 'நண்ணாவசுரர் நலிவெய்த அவ்யப தேச்யனுக்கு அநந்தரத்திலவன், தமப்பன் செய்ததைக் கேட்டு "இவன் என் செய்தானானான்" என்று கர்ஹித்தான் - "ஒரு மதிலை வாங்குங்காட்டில் அத்தர்சநம் குலைந்ததோ, திருவாய் மொழியென்றும் ஸ்ரீ ராமாயண மென்றும் வலியன இரண்டு மஹாப்ரபந்தங்களுண்டாயிருக்க" என்னானாய்த்து இப்படி உதவாதார் நெஞ்சுளுக்கும் படியான ப்ரபந்த மாய்த்து" (10:7:5:56).

(அவ்யபதேச்யன் - முதற்குலோத்துங்கன்
வெறுப்பால் பெயர் சொல்லத்தகாதவன் என்கின்றனர்)
- அவன் மகன் விக்கிரமன்

**30.** **முதல் தனிவித்தையோ முழு மூவுலகாதிக்கெல்லாம்**
**முதல் தனியுன்னை யுன்னை யெனை நாள் வந்து கூடுவன் நான்**

என்கிறார் நம்மாழ்வார் (10:10:9).

முதல் தனி வித்தையோ - முதல் - நிமித்த காரணம். தனி - ஸஹகாரி காரணம். வித்து - உபாதாந காரணம் என்ற சமய உண்மையை எடுத்துக்காட்டி விளக்கம் தருகிறது. ஈடு (10:10-9-36).

**இசை**

சைவ சமயத்தில் ஞானசம்பந்தர் கையில் தாளம் ஏந்திக் கோயில் தோறும் சென்று தேவாரப் பதிகங்களை இசையோடு பொருந்த அருள் செய்து வந்தார்; திருநீலகண்டர் உடன் யாழ் வாசித்து வந்தார்; 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்' என்று பின்னால் வந்த சுந்தரர் அவரைக் குறிப்பிட்டார். வைணவத்தில், திருவாய் மொழியைச் சாமவேத

சாரம் என வழங்குவர். இதுவும் இசைக்குரியது என்பதே இதன் பொருளாகும். நூறு இடங்களில் பல சுருதிப் பாடலில் தம்மைக் குறிப்பிட்டுக் கொள்ளும் ஆழ்வார் அபூர்வமாய்ச் சில இடங் களிலேயே தம் பாடலை இசை என்று குறிப்பிடுகிறார். பாவேய் தமிழர் இசைகாரர் பத்தர் புகலும் ஆயிரத்தின் (2953); நல்யாழ் பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே (3037), நுடங்கு கேள்வி இசையென்கோ (3159), செயிர்சொல் இசை மாலை (3142, 3318); பண்ணார் தமிழ் ஆயிரம் (3868); பண்ணார் பாடல் இன்கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடித் தென்னா என்னும் என் அம்மான் (3961); ஏழிசையின் சுவை தானே திருப்பேரான் (3975) என்ற இடங்கள் குறிப்பிடத்தக்கன. திருவரங்கத் தமுதனார் 'பண் தரு மாறன் பசுந்தமிழ்' என்று பாராட்டுகின்றார். 'மிக்க இறைநிலை' என்ற தனியன், 'குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்' என்று போற்றுகின்றது. இருப்பினும், அவர் இசை யோடு பாடினார் என்ற வரலாறு இல்லை. சிறிது பிற்காலத்தில் இவர் சந்நிதிக்கு வந்த நாதமுனிகள் நாலாயிரமும் பெற்று வீர நாராயணபுரத்துக்குச் சென்று மன்னனார் சந்நிதியில் பாடிய காலத்து அவர் 'நீர் இவற்றை இயலும் இசையுமாக்கும்' என்று அர்ச்சகமுகேன நியமித்தருளினார். அவரும் அப்படியே தம் மருமக்கள் இருவரையும் கொண்டு* 'ஸ்ரீவேத வியாச பகவான் வேதங்களை உதாத்த அனுதாத்த ஸ்வரிதப்ரசய யுக்தங்களாக உச்சரிக்கும்படி பண்ணினாற் போலே நாதமுனிகளும் இத் திவ்வியப் பிரபந்தங்களைத் திவ்விய கானத்திலே அடைத்து இயலும் இசையுமாகப் பாடுவித்தருள, இது லோகத்திலே பிரசித்தமாயிற்று;' இந்த முறையை இன்றும் பெருமாள் கோயில் களிலே கேட்கலாம். இதுவே வேத அத்தியயனம் போல், வட மொழிக்குத் தமிழ் மொழி தாழ்வில்லை என்று சொல்லிக் காட்டுவது போல் இருக்கும். வேதகானம் பண்ணுகிறவர்கள் ஒருகால் கேட்டுக் கொண்டிருக்க முடியும் போலும்; தமிழறிந்த காது கேட்டுக் கொண்டிருக்கவே இருக்காது. இதனால் தான் போலும், பிற்காலத்தில் ஏட்டுச் சுவடிகளில் திவ்வியப் பிரபந்தங் களில் 'பண்ணும் தாளமும்' குறிப்பிடப்பட்டுள்ளன; இவை தமிழ்ப் பண்ணும் தாளமும்; வேதவியாச பகவான் வகுத்த உதாத்த அனுதாத்தங்கள் அல்ல. இப்பண் குறிப்பு, தேவாரத் துக்கு உள்ளது போன்றது. இப்பண்ணும் தாளமும் பண்டைய பதிப்புக்களிலும் அச்சிடப்பட்டிருந்தன. ஆனால், பிற்காலத்தில்

* குரு பரம்பரை ப்ரபாவம் ஆறாயிரப்படி 1878, பக்கம் 94.

பண் விளங்காமையால், புதுமுறையான இராக தாளமே அமைக்கப்பட்டன. பார்த்தசாரதி ஐயங்கார் பதிப்பு முதலான பதிப்புக்களில் இவ்விராக தாளங்களே காணப்படும். ஆனால் கிருஷ்ணமாசாரியர் பதிப்பில் பண்ணும் தாளவொத்தும், இராக தாளமும் ஆகிய இரண்டுமே காணப்படும். மர்ரே கம்பெனிப் பதிப்பில் பண்ணும் தாளவொத்தும் மட்டுமே தரப்பட்டுள்ளன. இதுகாறும் கூறியவற்றின் திரண்ட பொருள், தேவாரப் பண் நெடுகிலும் பாடப்பட்டு வந்திருக்கிறது, பிரபந்தங்களைப் பண்ணில் பாடும் மரபு போய்விட்டது என்பதே.

இங்குத் திருவாய் மொழிக்கு அமைக்கப்பட்டுள்ள பண்கள் பின்வருவன; நட்டபாடை, இந்தளம், தக்கராகம், புறநீர்மை, கொல்லி, சீகாமரம், பழந்தக்கராகம், தக்கேசி, பஞ்சமம், குறிஞ்சி, காந்தாரம் என்பன தேவாரத்துள்ளும் காண்பன. முதிர்ந்த குறிஞ்சி, செருந்தி, வியந்தம், நாட்டம், கைசிகம், பழஞ்சுரம், பாலையாழ் என்பன தேவாரத்துள் காணப்படாதன.

மேலும் 9ஆம் பத்து 9ஆம் திருமொழி முதல்பாட்டின் 'வளர் குறிஞ்சி இசைதவருமாலோ' என்றும், அடுத்த பாட்டில் 'பஞ்சமம் முல்லை தன் வாடையாலோ' என்றும் பாடுவதோடு 7, 8 பாடல்களில் பஞ்சமம் என்றே பண் குறிப்பிடுகிறார். இத் திருமொழி பஞ்சமப்பண் என்ற குறிப்பும் உள்ளது. (தேவாரப் பதிகங்களில் இத்தகைய குறிப்புக்கள் அதிகம்).

**தலங்கள்**

திவ்வியப் பிரபந்தங்களுள் அதிகமான தலங்களைக் குறிப் பிட்டவர் திருமங்கை மன்னன் - 86 தலங்கள். இவர் தம் ஊரைச் சுற்றியுள்ள தலங்களனைத்தும் பாடியிருந்தும், சிறப்பான ஏனைய பதிகளையும் குறைவறப் பாடியிருக்கிறார். நம்மாழ்வார் அதிகமான பாடல் பாடியிருந்தும், பாடிய தலங்கள் எண்ணிக்கையில் அடுத்தபடிதான் - 36. திருவெஃகா ஒன்று தவிர, ஏனைய யாவும் திருவாய்மொழியில் வருபவை. வடக்கே நெடுந்தொலைவில் உள்ள தலங்களையும் இவர் பாடியிருத்த லால், திருப்புளியாழ்வாரின் கீழேயே இவர் இருந்தார் என்ற பரம்பரை வரலாற்றைச் சிறிது மாற்றி, இவர் தலயாத்திரை செய்தார் என்றும் சொல்வதுண்டு. இவர் பாடிய தலங்களை நாடுகளையொட்டிப் பின்னே விளக்கிக் கூறுகிறோம்.

பாண்டி நாடு : இவர் அவதரித்த திருக்குருகூரை நெருங்கிச் சூழ்ந்துள்ளவை - திருக்குருகூர். தொலைவில்லி மங்கலம் (இரட்டைத் திருப்பதி எனப்படும்). திருப்புளிங்குடி, திருப்பே ரெயில் (தென் திருப்பேரை), ஸ்ரீ வைகுண்டம், வரகுணமங்கை, திருக்குளந்தை, திருக்கோளூர் இவை நவதிருப்பதிகள் எனப் படும்; சிரீவரமங்கை(வானமாமலை), திருக்குறுங்குடி, திருமா லிருஞ் சோலைமலை, திருமோகூர். கூடலை இவர் பாட வில்லை; இது வியப்பாயுள்ளது.

மலை நாடு : இவர் தாயார் ஊர் சேர நாட்டில் உள்ள திருவண் பரிசாரம் என்பது. அதை ஒட்டியுள்ள பன்னிரண்டு தலங்களை இவர் பாடியிருக்கிறார் - திருவனந்தபுரம், திருவண் பரிசாரம், திருக்காட்கரை, திருமூழிக்களம், குட்ட நாட்டுத் திருப்புலியூர், திருச்செங்குன்றூர், திருநாவாய், திருவல்லவாழ், திருவண்வண்டூர், திருவாட்டாறு, திருக்கடித்தானம், திருவாறன் விளை.

சோழநாடு : திருவரங்கம், திருப்பேர் நகர், திருக்குடந்தை, திருவிண்ணகர், திருக்கண்ணபுரம். (திருமால் தலங்களில் மிக அதிகமானவற்றையும் மங்களாசாசனம் பெற்ற 40 தலங்களை யும் கொண்ட சோழ நாட்டில் இவர் பாடியவை இவ்வைந்தே).

தொண்டைநாடு : திருவெஃகா, திருவேங்கடம். பிரசித்த மான கச்சியின் பிற பதிகளை இவர் சொல்லவில்லை.

வடநாடு : திருவயோத்தி, துவாரகை, வடமதுரை, திருப் பாற்கடல், பரமபதம். இவற்றுள் இறுதி இரண்டும் பூவுலகத் துக்கு அப்பால் உள்ளவை.

திருவேங்கடத்துக்கும் திருமாலிருஞ்சோலை மலைக்கும் மட்டும் இரண்டு திருமொழிகள் வீதம் பாடியிருக்கிறார். திருக் குளந்தை, திருவண்பரிசாரம், வரகுணமங்கை, அயோத்தி, துவாரகை, திருப்பாற்கடல், பரமபதம் ஆகிய பதிகள் தனிப் பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளனவே யன்றி, அவற்றுக்குத் திருமொழி இல்லை. திருமொழி பெற்ற தலங்கள் 28. பிற் காலத்தில், சில பதிகளுக்குச் சில திருமொழிகளை அல்லது பாடல்களைச் சார்த்திச் சொல்லும் மரபு ஏற்பட்டிருக்கிறது. பாசுரங்களில் அதற்கு ஆதாரம் இல்லை. திருமாலிருஞ் சோலை மாலை-3.2 முந்நீர் ஞாலம், 3.1 முடிச்சோதியாய் உனது என்ற

இரண்டு திருமொழிகள்; 7.4 ஆழியெழச் சங்கும் வில்லும் எழ என்பது திருவேங்கடத்துக்குரியது என்று சொல்லப் பெறும்.

இவையன்றி, பிற்காலம் ஆசாரியர் வரலாறுகளில் சிறப்புப் பெற்ற சில தலங்களுக்கு அபிமானத்தால் நம்மாழ்வார் பாசுரங்களைச் சார்த்திக் கொள்ளும் மரபு ஏற்பட்டிருக்கிறது. பெருமாள் கோயில் - உயர்வற உயர் நலம் உடையவன் என்ற திருவாய்மொழியின் முதற்பாட்டு. திருநாராயணபுரம் - ஒரு நாயகமாய் ஓட என்ற நான்காம் பத்தின் முதல்பாட்டு. ராஜ மன்னார் கோயில் உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள் என்ற பாடல் (3295).

பத்தாம் பத்தின் ஒன்பதாம் திருமொழி அர்ச்சிராதி மார்க்கத்தைச் சொல்வது; இது பரமபதத்துக்கு உரியது என்பது சம்பிரதாயம்.

நம்மாழ்வார் பல பாசுரங்களில் அவ்வத்தலத்து எம்பெருமான் திருநாமத்தையும், எம்பெருமானுடைய கோலத்தையும் குறிப்பிட்டுப் பாடியிருப்பதும் காணத்தக்கது. சில தலங்களைத் தென் திசைத்திலதம் என்கிறார்; தென் திசைத்திலதம் அனைய திருக்கோளூர் (3515); திலதம் உலகுக்காய் நின்ற திருவேங்கடம் (3550); தென்திசை திலதம் புரைகுட்ட நாட்டுத் திருப்புலியூர் (3768); தென் கொள்திசைக்கே திலதமாய் நின்ற திருமாலிருஞ் சோலை மலை (3960).

தலங்கள் பற்றி இவர் கூறும் சிறப்புச் செய்திகளைக் கீழே தருகிறோம். அரவில் பள்ளி விரும்பினான் அனந்தபுர நகர்; நிமிர்ந்த திருக்குறளப்பன்; நின்ற திருவாறன் விளை (பெயர் திருக்குறளப்பன், நின்ற திருக்கோலம்); நாராயணன் நிற்பது திருக்கடித்தானமே (அற்புத நாராயணன்); நிற்கும் பிரான் காட்கரை என் அப்பன் (காட்கரை அப்பன்); ஆரா அமுதே குடந்தைக் கிடந்தாய் (ஆரா அமுதன்); குருகூர் அதனுள் நின்ற ஆதிப்பிரான், பொலிந்து நின்ற பிரான்; தென் குளந்தைக் குடபால் நின்ற மாயக் கூத்தன் (மாயக் கூத்தன்); திருக்குறுங்குடி நம்பி நின்று தோன்றி; கிடந்த திருக்கோளூர் வைத்த மாநிதி (வைத்த மாநிதி); சிரீவர மங்கை வீற்றிருந்தாய் வானமாமலையே (வானமாமலைப் பெருமாள்); இமையவரம்பன் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரை பால் நின்ற எம் பெருமான் (இமைய வரம்பன்); நிற்கும் நான்மறை வாணர் வாழ் தொலை

வில்லி மங்கலம் தேவ தேவபிரான், நின்று இருந்து உறையும் தொலைவில்லி மங்கலம், அரவிந்த லோசனன் (தேவபிரான், அரவிந்த லோசனன்); கோகனகத்தாள் கேள்வன், திருநாரணன் சேர்திருநாவாய் (மலர் மங்கைநாச்சியார், நாராயணன்); குட்ட நாட்டுத் திருப்புலியூர் நின்ற மாயப்பிரான் (மாயப் பிரான்); அழகர் தம் கோயில், நின்ற திருமாலிருஞ் சோலைமலை (அழகர்); தாமரை மங்கையும் நீயும் திருப்புளிங் குடிக் கிடந்தானே, காய் சினவேந்தே (மலர் மகள், காய் சினவேந்து); திருமோகூர் நின்று அசுரரைத் தகர்க்கும் காளமேகம் (காளமேகம்); வண்பரிசாரத்து இருந்த என் திருவாழ்மார்வர் (திருவாழ் மார்பன்; திருவாழ் மார்பன் என்பது ஸ்ரீ-நிவாசன் என்ற சொல்லுக்கு நேரான தமிழ்; இப்பெயர் பற்றி இவ்வூர் திருப்பதியை ஒத்தது என்ற கருத்தும் சொல்லப்படும். இத்தலம் ஆழ்வாரின் திருத்தாயார் உடைய நங்கையார் பிறந்த இடம்) பம்பை வடபாலைத் திருவண் வண்டூர்; திருவல்ல வாழ் நின்ற பிரான் கோலப் பிரான் (கோலப் பிரான்); கேசவன் அரவணைமேல் வாட்டாற்றான் (ஆதிகேசவன்), நின்ற திருவேங்கடத்து எம்பெருமான்; திருப்பேரெயில் வீற் றிருந்த பிரான். (நகவளைவுக் குறியுள் உள்ளவை வழங்கும் திரு நாமங்கள்) திருநாமங்களைப் பார்க்கும் போது, அவை ஆழ் வார் பாசுரங்களிலிருந்தே பிற்காலத்தில் அமைக்கப்பட்டன என்று தோன்றுகிறது.

## ஆழ்வாரும் தல தரிசனமும்

மலை நாட்டில் நம்மாழ்வார் 13 தலங்களைக் குறிப்பிடுகிறார். அவற்றை வேறெந்த ஆழ்வாரும் சொல்லவில்லை. பண்டைக் காலத்தில் அத்தலங்களுக்குப் போவதற்குச் சில கணவாய் வழி களே இருந்தனவன்றி வேறு வழிகளில்லை. பிற ஆழ்வார்கள் மேற்கு மலைத் தொடருக்குச் சமீபமாக வந்துங்கூட இத்தலங் களை அவர்கள் தரிசிக்காமைக்குக் காரணம் அவற்றை அணுக முடியாத இயற்கைச் சூழ்நிலையேயாகும். உதாரணமாக ஆரல் வாய்மொழி அல்லது கடுக்கரைக் கணவாய் வழியாகச் சென்றால் தான் திருவண் பரிசாரம், திருவாட்டாறு, திருவனந்தபுரம் ஆகிய திருப்பதிகளை அடைய முடியும். அச்சன் கோவில் வழியாகச் சென்றால் தான் திருச்சிற்றாறு, திருச்செங்குன்றூர், திருப்புலியூர், திருவண்டூர், திருக்கடித்தானம், திருவல்லவாழ், திருவாறன் விளை என்ற தலங்களைத் தரிசிக்க முடியும். போடி நாயக்கனூர் கணவாய் வழியாகச் சென்றால் திருக்காட்கரை, திருமூழிக்களம் என்ற

தலங்களை அடையலாம். கடைசியாக பாலக்காட்டுக் கணவாய் வழியாகச் சென்றால் தான் திருநாவாய், திருவித்துவக்கோடு என்ற தலங்களைத் தரிசிக்கலாம். போக்குவரத்து வசதிகள் பெருகியுள்ள இக்காலத்திலேயே காடடர்ந்த இப்பிரதேசங்களை அணுகுவது அரிதென்றால் நம்மாழ்வார் காலத்தில் இவற்றைச் சென்று தரிசிப்பது எவ்வளவு கடினம் என்பதை யூகித்துக் கொள்ளலாம். பிறர் இங்கெல்லாம் வராமைக்கு இதுவே காரணம்.

இவற்றைத் தரிசிப்பது நம்மாழ்வாருக்கு எளிதாயிருந்தது. இவற்றுள் ஒன்றாகிய திருவண் பரிசாரம் என்பது இவரது தாயாருக்குரிய ஊர். ஆதலால் இவர் திருக்குருகூரில் பிறந்திருந்தும் கூட தாயாரின் ஊரையும் சுற்றியுள்ள பிற ஊர்களையும் நன்கு தெரிந்திருக்க வாய்ப்புண்டு. அன்றியும் இவருடைய தந்தை மாறங்காரி அரசில் உத்தர மந்திரி என்ற பதவியை வகித்து இருந்தார். இந்த மாறங்காரியைப் பற்றி ஆனை மலைச்சாசனங்கள் இரண்டு, சில செய்திகளைத் தருகின்றன. இவற்றுள் ஒன்று வடமொழி, மற்றொன்று தமிழ். வடமொழிச் சாசனம் கலி 3871ல் எழுந்தது. (கி.பி. 770) காலம் பராந்தக பாண்டியன் காலம். மாறருடைய புதல்வர் கரவந்தபுரத்தைச் சேர்ந்தவர். வைத்திய குலத்தைச் சேர்ந்தவர். அரசனிடத்து உத்தர மந்திரியாக இருந்தார். அவர் திருமாலுக்கு ஒரு கோயில் கட்டி அங்கு ஒரு திருவுருவத்தைப் பிரதிட்டை செய்தார். தமிழ்ச் சாசனம் இதைத் தொடர்ந்து மாறங்காரி காலத்தில் கோயில் கட்டி முடியாமையினாலே அவருக்குப் பின்வந்த அவரது தம்பியாகிய மாறன் எயினன் வேலையைத் தொடர்ந்து பூர்த்தி செய்தார் என்று சொல்கிறது. இச்சாசனம் மாறன் சடையர் என்ற பாண்டி மன்னன் காலத்தில் எழுந்தது. பராந்தகன் காலத்தில் உத்தர மந்திரியாக இருந்த மாறங்காரி 770க்குச் சில ஆண்டுகள் பிற்பட்டு இறந்திருக்க வேண்டும். சடையன் பட்டத்துக்கு வந்தது 765 என்று தெரிகிறது. இவனுடைய தந்தை அரிகேசரி பராங்குசன் என்பவன். மாறங்காரி என்ற மந்திரியின் புதல்வரே காரிமாறப் பிரான் என்கிற நம்மாழ்வார். அவர் தம் அரசனுடைய தந்தையாகிய பராங்குசன் பெயரைத் தம் புதல்வனுக்கு இட்டிருக்கிறார். இவ்வாறு மன்னர் பெயரைப் பிறர் தரித்துக் கொள்வது சோழ நாட்டிலும் பாண்டி நாட்டிலும் பெரு வழக்காக இருந்திருக்கிறது. நம்மாழ்வாருக்குப் பராங்குசன் என்ற பெயர் இருப்பதையும் நாம் அறிவோம். கரவந்த புரம் என்ற ஊருக்கு களக்காடு என்ற பெயரும் உண்டு. மாறங்காரி கரவந்த புரத்திற்குரியவர்.

இவ்வூர் நம்மாழ்வாரின் தாய் பிறந்த திருவண் பரிசாரத்திற்கு அருகேயுள்ளது. பாண்டி நாட்டின் அப்பகுதியில் அரச பதவி வகித்திருந்த மாறங்காரி பின்னால் திருக்குருகூருக்கு வந்து குடியேறிய பிறகு நம்மாழ்வார் பிறந்திருக்கிறார். மாறங்காரி என்பது அவர் அம்மாறனுடைய புதல்வர் என்பது பொருளாகும். நம்மாழ்வார் பெயர் காரிமாறன் என்றும் குறிப்பிட்டோம். காரியின் புதல்வரான மாறன் ஆனமையால் காரிமாறன் இவருடைய தந்தை மாறனுடைய புதல்வரான காரி, மாறங்காரி. இந்தக் காரி தம் புதல்வனுக்குத் தம் தந்தை பெயரான மாறன் என்பதை இட்டார்.

எனவே இவ்வாறு ஒரு பெரிய பதவியிலிருந்தவருடைய பிள்ளையாக இருந்தமையால் அணுகுதற்கரிய பல தலங்களையும் சென்று தரிசிக்கும் வாய்ப்பு நம்மாழ்வாருக்கு அமைந்திருந்தது என்று கோபிநாதராயர் விரிவாக எழுதுகிறார்.

## சொல்லும் பொருளும்

பெருங்கவிஞரிடத்திலே மொழியும் சொற்களும் தாமே வந்து ஏவல் செய்யும்; அவர்களே புதிய சொற்களையும் ஆட்சிகளையும் படைத்துக் கொள்கிறார்கள். நம்மாழ்வாரிடம் இத்தகைய புதிய படைப்புக்கள் மிக்க அதிகம். பாடிக் கொண்டே வரும் போது தம் கருத்திலக்கணத்துக்காகப் புதிது புதிதாகச் சொற்களையும் தொடர்களையும் அடுக்குகளையும் படைத்துக் கொள்கிறார். உள்ளத்தின் வேகத்துக்கு ஒப்ப, மொழியும் விரைந்து ஏவல் செய்கிறது. இவர் படைத்துள்ள சொற்களும் வடிவங்களும் பொருளும் தனி ஆராய்ச்சிக்குரியவை. சில மட்டும் இங்குக் காட்டுகிறோம். உகவை-உகப்பு, காவு-பலி, கள்வம்-கள்ளம், கிதயுகம்-கிருதயுகம், குதிரி-அடங்காதவள், கூழ்ப்பு-குழப்பம், கொல்லை-கொல்லாமை, வரம்பு கடந்த ஒழுக்கம், கோணை-உபத்திரவம், கோகு-அடைவுகேடு, நமுக-குழைய, துவர்ந்து-உவர்ந்து, நாழ்மை-கருவம், நேர்ப்பம்-சாமர்த்தியம், தெப்பம்-அற்பர், விசாதி-வியாதி, கூழைமை-அடிமைத்திறம், கூழேன்மின்-சந்தேகியாதீர், சவிப்பார்-சலிப்பர், சுண்டாயம்-விளையாட்டு, நொக்கென-உடனே, செம்மாய்-செம்மையாய், பின்னும் சில ஆட்சிகள்; ஆகள் (ஆக்கள்), இடராட்டியேன், உலோகம், அலோகம், உலோகர் (உலகர்), சங்கிப்பன், போகு (போ), கண்ணாளன், மயக்கா (மயக்கந் தருபவனே) சிவபிரான், தக்கிலம், பிராக்கள் (பிரான்கள்), பாகு (பாகன் தொழில்),

மனிசர் வைட்டணவர் என்றே பெரும்பாலும் சொல்லுவார். வட சொற்களும் தொடர்களும் அப்படியே வரக் காணலாம். காமரூபம், சசிபதி அரவிந்த லோசனன், பரமேட்டி, பற்பு (பற்பம், பத்மம்) அரசரணம். பின்வரும் அடுக்குத் தொடர்கள் காணத்தக்கன. தகவிலை தகவிலையே நீ கண்ணா; என்னப் பன்... பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்னப்பனுமாய்... திருவிண்ணகர் அப்பன் தன்னொப்பாரில் அப்பன்; பெரிய அப்பனை, பிரமன் அப்பனை, உருத்திரன் அப்பனை முனிவர்க்கு உரிய அப்பனை, உலகுக்கு ஓர் தனி அப்பன் தன்னை; நேர்பட்ட தொண்டர் தொண்டன் சடகோபன்; நீக்கமில்லா அடியார் தம் அடியார் அடியார் தம் அடியார் அடியார் அடியார் தமக்கு அடியார். வருமை: வரும் பிறப்பு வருமை; அம்மை இம்மை மறுமை என்ற சொற்களில் வரும் மை என்ற விகுதியை எடுத்து இவ்வாறு வைத்து ஒரு புதுச்சொல் உண்டாக்கியிருக்கிறார். செக்கம் செக-செக்கச் சேவேர் என்று இன்று சொல்வது போல; கோபம் மிகுப்பதன் வெளிப்பாடு. கூழேன்மின்-ஐயுற வேண்டா. சிற்ற-சஞ்சலப்பட.

புலன் நுகர்ச்சியைப் பலமுறை குறிப்பிடுகிறார். பண்பு எண்ணில் பலபல கண்டு உண்டு கேட்டு உற்று மோந்து இன்பம் (3058, 3328); பெயர்ச் சொல்லாகவும் இதைச் சொல்லுகிறார். நாற்றம் தோற்றம் சுவை ஒலி ஊறல் (3181).

உடையவள் என்று பொருள்படுகின்ற பல தொடர்களைப் படைத்துக் கூறுகிறார்; இடராட்டியேன், கற்புடையாட்டியேன், துயராட்டியேன், வினையாட்டியேன். வாமன மூர்த்தியைத் திருக்குறள் என்றும் திருக்குறளன் என்றும் கூறுவார்.

நீர்கள் என்ற அபூர்வமான பிரயோகமும் காணப்படும். கில் என்ற சொல்லைத் தனி வினையாகவே உபயோகிக்கிறார். யான் கிலேன் (3215), கிற்பன், கிலேன். அல்குல் என்ற சொல்லை ஆடவருக்கும் பொருந்தும் சொல்லாக உபயோகிக்கிறார் (3392).

ஆழ்வாருடைய சொல்வளத்தைக் கூர்ந்து ஆராயும்போது, அவர் உலகப்பிரவர்த்தி இன்றித் திருப்புளியின் அடியிலேயே என்றும் தங்கியிருந்தார் என்ற கதையை ஒப்புக் கொள்ளத் தோன்றும். அவருடைய சொற்கோவையும் சொல்லாக்கமும் வேறெங்கும் காணப்படாத தனித்த இயல்புடையனவாயுள்ளன.

*காரணம் அவர் தனித்துப் போனமையே. எனவே அவருடைய நூல்களை ஆராயும் போது, அவருக்கென்று தனியான ஒரு சொல்லகராதி அமைத்துக் கொள்வது பெரிதும் பயனுடையது. எழுந்துள்ள எல்லா வியாக்கியானங்களும் இதற்குப் பெரிதும் துணை செய்யும்.*

*பழமொழிகளும் இவர் பாடலில் உள்ளன. அட்டை போல் சுவைப்பர். இரும்புண்ட நீர், ஊரா மிலைக்கக் குட்டா மிலைக்கும், கழுதை உதடு ஆட்டம் கண்டு என் பயன், நாய் கூழை வாலால் குழைக்கின்றது போல, கனியின்மையால் கருக்காய் கடிப்பர், நீலவரை இரண்டு பிறை கவ்வி நிமிர்ந்தது ஒப்ப என்பன குறிப்பிடத்தக்கன. இவற்றுள் இறுதியான கருத்தை நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருளதிகாரம் 488 உரையில் பிசி என்பதற்கு உதாரணமாக, 'பிறை கவ்வி மலை நடக்கும்' என்று எடுத்து வைத்திருப்பது அறியத்தக்கது.*

ஊரவர் கவ்வை எருவாக அன்னைசொல்
நீராக நீளும் இந்நோய். 1147

*என்ற குறளை, 'ஊரவர் கவ்வை எரு இட்டு அன்னை சொல் நீர் படுத்து - ஈரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ் செய்' என்று இவர் விரித்திருக்கிறார் (5.3.4) திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும் (4.4.8) என்பதும் ஒரு பழமொழி போன்றதே.*

*ஆழ்வாருக்குக் கிருஷ்ணாவதாரத்திலேதான் மிக்க ஈடுபாடு; பெரியாழ்வார் முதலான பிற ஆழ்வார் சிலரும் இவ்வாறு பெரிதும் ஈடுபட்டிருக்கக் காண்கிறோம். கண்ணனுடைய குண விசேடங்களையும் அருள் விசேடங்களையும் இவர் பாடிப் பாடி முடியவில்லை. பிற அவதாரங்களையும் குறிப்பிடுகிறார்.*

கற்பார் இராம பிரானை அல்லால், மற்றும் கற்பரோ
புல்பா முதலா, புல்எறும்பு ஆதி ஒன்று இன்றியே
நல்–பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நல்–பாலுக்கு உய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே?

*(3605) என்று இவர் பாடத் தொடங்கியும் கூட மூன்றாம் பாடலில் சிசுபாலன் வதை என்று கண்ணனையே குறிப்பிடத் தொடங்குகிறார். நரசிங்கமூர்த்தியைப் பலமுறை சிறப்பித்துப் பாடுகிறார் (3096).*

எங்கும் உளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து
இங்கும் இல்லையால் என்று இரணியன் தூண்புடைப்ப
அங்கு அப்பொழுதே அவன்வீயத் தோன்றிய என்
சிங்கப் பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே.

அன்றியும், பூரண மனித அவதாரத்துக்குக் கீழ்ப்பட்ட அவதாரங்களையெல்லாம் ஒரு பாடலில் குறிப்பிடுகிறார் (3350).

மீனாய் ஆமையும் ஆய்நர சிங்கமுமாய்க் குறளாய்க்
கானார் ஏனமுமாய்க் கற்கிஆம் கார்வண்ணனே.

இருப்பினும் பிரபந்தத்தை எந்த இடத்தில் தொட்டாலும் ஆழ்வாருக்குக் கண்ணன் இடத்தில் உள்ள ஈடுபாடு தேக்கிட்டுத் ததும்புவது நன்கு புலப்படும்.

சில இடங்களில் இராமாவதாரத்தைப் பாடுகிறார்; கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்த செய்தி (2947) முதலியன காணத்தக்கன.

### இராமன் கூனிமீது உண்டைவில் தொடுத்தது

கூனியாகிய மந்தரை இராமன் மீது கோபம் கொண்டு பட்டாபிஷேகத்தையே நிறுத்தி, இராமனைக் காடு புகுமாறும் தசரதன் இறக்குமாறும் செய்த காரியங்களுக்கு அடிப்படையாக வால்மீகி எந்தக் காரணமும் காட்டவில்லை. ஆனால் அதே செய்திகளைச் சொல்லுகின்ற கம்பர், இராமன் முடிபுனைவதற்காக நகர் அலங்காரம் செய்வதைக் கண்ணுற்ற கூனி, கைகேயி மூலம் அதை நிறுத்த எண்ணிப் போகும்போது "பண்டை நாள் இராகவன் தன் மீது உண்டை வில்லால் அடித்ததை நினைவு கூர்ந்தாள்" என்று கூனியின் கோபத்திற்கு ஒரு காரணம் கற்பிக்கிறார்.

தொண்டைவாய்க் கேகயன் தோகை கோயில்மேல்
மண்டினாள், வெகுளியின் மடித்த வாயினாள்,
பண்டை நாள் இராகவன் பாணி வில்லுமிழ்
உண்டை உண்டதனைத்தன் உள்ளத்து உள்ளுவாள்.

(அயோத்தியா காண்டம், மந்தரை சூழ்ச்சிப்படலம், 49) கம்பர் இப்படியொரு செய்தியைக் குறிப்பிடுவதற்கு ஆதாரமாயிருந்தது, நம்மாழ்வாருடைய பாசுரம் என்று தெரிகிறது; (திருவாய் மொழி 1-5-5).

மானேய் நோக்கி மடவரலை
 மார்பில் கொண்டாய், மாதவா,
கூனே சிதைய உண்டை வில்
 நிறத்தில் தெறித்தாய், கோவிந்தா!
வானார் சோதி மணி வண்ணா!
 மதுசூதா! நீ அருளாய் உன்
தேனே மலரும் திருப்பாதம்
 சேருமாறு வினையேனே.

## இயற்கை வருணனை

நம்மாழ்வார் பாடல்களில் பொதுவாய்க் கற்பனையான இயற்கை வருணனை என்பது மிகவும் குறைவு. எல்லாவற்றையும் திருமாலாகவும், அவனுடைய லீலா விபூதியாகவும் காண்கின்ற கண்களுக்கு எதுவும் இயற்கையாக ஒருபோதும் தோற்றிய தில்லை. ஆயினும், அபூர்வமாய்ச் சில இடங்களில் இயற்கை வருணனை காணப்படுகிறது. திருப்புலியூர்த் திருமொழியில் சில பாடல்களில் இயற்கையை வருணிக்கிறார். (பாடல்: 3762, 3763, 3766, 3767) மல்லைச் செல்வ - வடமொழி மறைவாணர் வேள்வியுள் நெய்யழல் வான்புகை போய்த் திடவிசும்பில் பார் நாட்டை மறைக்கும் தண் திருப்புலியூர். ஒரு பாடல் முழுமை யும் இங்கு குறிப்பிடத்தக்கது.

மெல் இலைச் செல்வ வண் கொடிப் புல்க,
 வீங்கு இளம்தாள் கமுகின்
மல் இலைமடல் வாழை ஈன்கனி சூழ்ந்து
 மணம் கமழ்ந்து,
புல் இலைத் தெங்கினூடு கால் உலவும்
 தண் திருப்புலியூர்
மல்லல் அம் செல்வக் கண்ணன் தாள் அடைந்தாள்—
 இம் மடவரலே. 3765

## அடுக்குத் தொடர்

சொற்களை மூன்று முறை அடுக்கி அடுக்கிச் சொல்வது. இவருடைய சிறந்த இயல்பு. இவை அவை உவை என்ற சுட் டுக்களை அனேக இடங்களில் சொல்லுகிறார். எந்தை தந்தை தந்தை என்று பல இடங்களில் அடுக்குகிறார். எந்தை தந்தை தந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை என்ற பாடலைக் காணலாம். வையம் வானம் மனிசர் தெய்வம் என்று சொன்னபின் மற்றும் மற்றும் மற்றும் முந்தையாய் (3176, 3180)

என்கிறார். தம் அடிமையைப் புலப்படுத்துகின்ற ஓர் இடத்தில் அடியாரை 8 முறை கூறுகிறார்.

அடி ஆர்ந்த வையம்உண்டு, ஆல்இலை அன்னவசம் செய்யும்
படி யாதும் இல் குழவிப்படி எந்தைபிரான் தனக்கு
அடியார் அடியார் தம் அடியார் அடியார் தமக்கு
அடியார் அடியார் தம் அடியார் அடியோங்களே. 3196

ஏக மூர்த்தி, இரு மூர்த்தி, மூன்று மூர்த்தி பல மூர்த்தி என்று மூர்த்தி என்ற சொல்லை அடுக்கிப் பேசுகிறார். அடியார் திருக் கூட்டத்தைக் கண்டு வாழ்த்தும் போது, 'பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்' என்றும், 'கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக் கினியன கண்டோம்' என்றும் பாடுகிறார். 'மூவுலகுக்கும் நாயகன் தன் அடிமை நேர்பட்ட தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்' என்று தம்மைப் பல முறை கூறுகிறார். 'எய்த்தார் எய்த்தார் எய்த்தார்' என்று மொய்த்து அலறி முயங்குகிறார்கள். 'கோதில் அடியார்தம் தமர்கள் தமர்கள் தமர்களாம் சதிர்'; 'நீக்கமில்லா அடியார் தம் அடியார் அடியார் தம் தோட்கள்'; தோள்கள் ஆயிரத்தாய் முடிகள் ஆயிரத்தாய், துணைமலர்க் கண்கள் ஆயிரத்தாய் தார்கள் ஆயிரத்தாய், பேர்கள் ஆயிரத்தாய்.

### அகப்பொருட் சுவை

ஆழ்வார் பாடல்களிலேயே மிகச் சிறந்தவை அகத்துறைப் பாடல்கள். நூறு பத்துக்களில் (2831) பதிகங்கள் அகத்துறை யாக அமைந்துள்ளன. பறவைகளையும், பிற இயற்கைப் பொருள் களையும் விளித்துத் தூது சொல்லியும் பிறவாற்றால் இரங்கியும் ஆழ்வாரைப் போல் இவ்வளவு அதிகமாகப் பாடியவர் இல்லை. இவர் விளிக்கின்ற பறவைகள் - அன்றில், அன்னம், கிளி, குயில், குருகு, கொக்கு, கோழி, தும்பி, நாரை, புதா, பூவை, மகன்றில், மயில், வண்டு என்பன. பிற இயற்கைப் பொருள்கள் இருள், ஊழி, கடல், கழி, மதி, முகில், வாடை, வானம், விளக்கம் என்பன. இத்தனை பொருள்களையும் ஒருவருடைய பாடலிலேயே வேறு எங்கும் பார்க்க முடியாது. பறவைகளை விளித்துச் சொல்லும் போது விளிக்கின்ற சொற்கள் அடைபெற்று, உண்மையிலேயே தன் கருத்துக் கைகூட வேண்டும் என்ற தலைவியின் பேரார் வத்தை எடுத்துரைப்பனவாய் உள்ளன. அஞ்சிறைய மடநாராய், இனங்குயில்காள்; விதியினால் பெடை மணக்கும் மென்னடைய

அன்னங்காள், நன்னீல மகன்றில் காள், மல்குநீர்ப் புனற்படப்பை இறை தேர்வண் சிறு குருகே, ஆழி வரிவண்டே, இளங்கிளியே, சிறு பூவாய், காதல் மென்பெடையோடு உடன்மேயும் கருநாராய், இடரில் போகம் மூழ்கி இணைந்தாடும் மட அன்னங்காள், யான் வளர்த்த கிளிகாள், நீர்த்திரைமேல் உலவி இரை தேரும் புதா இனங்காள், நன்கு எண்ணி நான் வளர்த்த சிறுகிளிப் பைதலே - என்றெல்லாம் சுவைபட விளித்துப் பேசுகிறார். ஓர் இடத்தில் இவ்வாறு தாம் உரைத்த இப்பாடலுக்கு 'மூவுலகும் உருகுமே' என்கிறார் (3835).

இவ்வாறு உருக்கமாகப் பல இடங்களில் சொல்லுகிறார். வண்டுகளை விளித்துக் 'கண்ணன் சூடிய தண் துளவம் உண்ட தூமது வாய்கள் கொண்டு என்மேல் ஊதுங்கள்' என்று சொல் லுகிறார்.

**ஓடிவந்து, என்குழல்மேல் ஒளிமாமலர் ஊதீரோ**
**கூடிய வண்டினங்காள்! குருநாடு உடை ஐவர்கட்குஆய்**
**ஆடிய மாநெடும் தேர்ப்படை நீறு எழச் சென்ற பிரான்**
**சூடிய தண் துளவம் உண்ட தூமது வாய்கள் கொண்டே.**

"இந்த நாயகி நாயக பாவத்தை இன்று காதல் என்று சொல்லுவார்கள், முதல் நிலை பொருட் காதல் (விஷயகாமம்) அடுத்து உயிர்க்காதல் (ஆன்மக் காமம்) இறுதியாக இது சிற்று யிரானது பரம்பொருளோடு ஒத்து எண்ணுகின்ற இறைக் காதல் (தெய்வக் காமம்) என்பர்.

**அகத்துறைப் பதிகங்கள்**

திருவாய்மொழி 100 பதிகங்களில் 28 பதிகங்கள் அகத்துறை யாக உள்ளன. இவற்றுள் தோழி கூற்றாக உள்ளன 3, தலைவி கூற்று 18, தாய் கூற்று 7.

தோழி கூற்று : தீர்ப்பாரையாம் இனி (4.6, வெறிவிலக்கு), துவளில் மாமணிமாடம் (6.5), கருமாணிக்கமலை மேல் (8.9).

தலைவி கூற்று : அஞ்சிறைய மட நாராய் (1.4), வாயுந் திரையுகளும் (2.1), ஏறாளும் இறையோனும் (4.8), மாசறு சோதி (5.3), ஊரெல்லாம் துஞ்சி (5.4), எங்ஙனேயோ அன்னைமீர்கள் (5.5), மானேய் நோக்குநல்லீர் (5.9), வைகல் பூங்கழிவாய் வந்து மேயும் (6.1, தூது), மின் இடை மடவார்கள் (6.2), பொன்னுலகு ஆளீரோ (6.8, தூது), நீராய் நிலனாய் (6.9) இது அகப்பாட்டல்ல என்றும் கருதுவர்; வெள்ளைச் சுரிசங்கொடு (7.3), ஏழையர் ஆவி

உண்ணும் (7.7), நங்கள் வரிவளை ஆயங்காளோ (8.2), இன்னுயிர்ச் சேவலும் நீரும் (9.5), எங்கானல் அகங்கழிவாய் (9.7, தூது) மல்லிகை கமழ் தென்றல் (9.9), வேய்மரு தோளிணை (10.3).

தாய் கூற்று : ஆடி ஆடி அகங்கரைந்து (2.4), பாலனாய் ஏழுலகுண்டு (4.2), மண்ணை இருந்து துழாவி (4.4), கடல் ஞாலம் செய்தேனும் (5.6), மாலுக்கு வையம் அளந்த (6.6), உண்ணும் சோறு பருகும் நீர் (6.7), கங்குலும் பகலும் கண் துயில் (7.2).

**கவிச்சுவை**

முதல் திருமொழி நாலாம் பத்தில் உள்ள ஒரு பாடலின் கருத்துப் படிக்குந்தொறும் சுவை பயக்க வல்லது. அஞ்சிறைய மட நாராய் என்று தொடங்கும் பத்தில் 8ஆம் பாசுரம். நாரை, குயில், அன்னம், மகன்றில், குருகு, வண்டு, இளங்கிளி முதலியவற்றைத் தூது விட்ட தலைவி இப்பாடலில் பூவையைத் தூது அனுப்பிய செய்தியைக் கூறுகிறாள். இப்பூவை இதுவரை இவளால் இன்னடிசில் ஊட்டி வளர்க்கப்பட்டது. (அக்காலத்தில் கிளி, பூவை முதலிய பறவைகளை வளர்ப்பதுண்டு) அப்பூவையை நெடுமாலிடத்துத் தன் தூதாய்ச் சென்றுவர வேண்டுமென்று இவள் பலகால் குறையிறந்திருக்கிறாள். 'எனது காதல் நோயை அவனிடத்து நவில்' என்று வேண்டியும் அப்பூவை அவனிடத்து நவிலாமலே இருந்தொழிந்தது. இவ்வாறு காலம் பல கழிந்தது. கழியவும் இவளுடைய அழகிய சாயலும் அழகும் தவிர்ந்தன. காதல் நோய் ஆற்றாமல் இவளும் உயிர் பிரிய வேண்டிய நிலையையும் அடைந்தாள். இந்த நிலைக்கு அவள் வந்தும், தன்னால் இன்னடிசில் ஊட்டப் பெற்று, தன்னிடத்துள்ள நோயைச் சென்று நெடுமாலிடத்தில் தெரிவிக்காது, தன்னிடத்து நன்றியுணர்வு இல்லாது, இன்னும் தன்னிடத்தே வாழும் பூவை மீது இவளுக்குக் கோபம் உண்டாகவில்லை. திருமாலே தனக்கு அருள் செய்யாத போது, தன் பூவை தூது செல்லாததற்குத் தான் சினந்து என்ன பயன் என்ற எண்ணம் போலும். அப்பூவையினிடத்து இவளுக்கு இப்போது புதிய ஒரு பரிவே பிறக்கிறது. காதலால் பெரிதும் தளர்ந்துள்ள தான், இனி பிழைக்கப் போவதில்லை; தான் இறக்கும் வரை பூவைக்கு உணவுக்குக் கவலை இல்லை; ஆனால் தான் இறந்த பிறகு அது உணவுக்காகப் பிறரை நாடிச் சென்று இடர்ப்பட நேரும். யார் தான் தன்னைப் போலப் பரிவோடு அதன் வாயில் இன்னடிசில் ஊட்டுவார்? ஆகவே, தனக்குப் பின் உணவு தேடிச் சிரமப்படு

வதை இப்போதே படலாம். இப்போதே வேறு நல்முறையில் அடிசில் ஊட்டுவாரைத் தேடிக் கொண்டதானால், அது உணவுக் கவலையின்றி வாழ்கிறது என்ற மகிழ்ச்சியாவது தனக்குக் கிடைக்கும். இந்த பாவத்தில் தலைவி பாடுகின்றாள்.

**நீயலையே, சிறுபூவாய்! நெடுமாலார்க் கென்தூதாய்**
**நோயெனது நுவலென்ன நுவலாதே இருந்தொழிந்தாய்!**
**சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான்: இனி உனது**
**வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே! 2939**

*'நீயலையே, சிறு பூவாய்'* என்ற சொற்களில் அவளது உள்ளத்தின் குழைவு மிக நன்றாக வெளிப்படுகிறது. வாயலகில் இன்னடிசில் வைப்பாரை என்றதனால் அவள் எவ்வளவு அன்போடு இது காறும் பூவைக்கு உணவளித்து வந்திருக்கிறாள் என்பதையும் உணர்கிறோம். நீ வேறு நாடிக்கொள் என்ற குறிப்பால் இவளுடைய இன்றைய நிலையையும் நாம் உணர்ந்து பெரிதும் இரக்கம் கொள்ளுகிறோம். இத்தலைவி பூவையை மிகவும் விரும்பி வளர்த்தாள் போலும். அப்பூவை இவளுடைய காதலைத் தலைவனிடத்து உரைக்கவில்லை; தீவினையேன் வளர்த்த சிறு பூவைகளே என்று மற்றொரு பாடலில் கூறுகிறாள்.

இக்கூற்றுக்களை நாம் பார்க்கும் போது உண்மையாகவே நம் மனத்தில் ஒரு மயக்கம் ஏற்படுகிறது. இவ்வாறு சொல்பவள் பெண் என்றே நாம் உறுதியாக நம்புகின்றோம். இதை ஆழ்வார் பாடினார் என்ற எண்ணமே நமக்கு உண்டாவதில்லை. அகத் துறைப் பாடலில் உள்ள கவிதைச் சுவை நம்மை அவ்வளவு தூரம் ஆட்கொண்டு விடுகிறது. மயக்கம் தெளிந்தால் தான் இதை ஆழ்வார் பாடினார் என்று நாம் நம்பமுடிகிறது. ஆழ்வாரின் பக்தி உணர்வுக்கும் கவிதைச் சிறப்புக்கும் இதை விட வேறு சிறப்பு என்ன இருக்கிறது? திருப்புளியின் கீழ் இருந்த ஆழ்வார் எவ்வாறு இப்படிப் பாடமுடிந்தது?

சில சமயம் சாமானியப் பேச்சாகவே இவர் உரைப்பது கூட, பொருளை நோக்கும் போது மிகவும் பாவத்தொடு பொருந்திச் சிறப்பாகவே காணப்படும்: "இளங்கிளியே, யான் வளர்த்த நீ அலையே, என் பிழையே நினைந்தருளி அருளாத திருமாலார்க்கு, 'என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு?' என்று ஒருவாய்ச் சொல், என் பிழைக்கும்?" என்று கேட்பது நாடகமாகவே உள்ளது (2938).

மற்றும் ஒரு பாடல் தலைவனது பிரிவு ஆற்றாது, கண்ட பொருளையெல்லாம் தலைவன் என்றே மயங்கி அரற்றுகின்ற தலைவியின் நிலை கண்டு வருந்தித் தாய் அரற்றுகின்ற பாடல்; தலைவியின் மெய்ப்பாடுகளை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது.

அயர்க்கும்; சுற்றும் பற்றி நோக்கி,
அகலவே நீள்நோக்குக் கொள்ளும்;
வியர்க்கும்; மழைக் கண் துளும்ப
வெவ்வுயிர் கொள்ளும்; மெய் சோரும்;
பெயர்த்தும் கண்ணா! என்று பேசும்;
பெருமானே, வா! என்று கூவும்;
மயல் பெருங் காதல் என்பேதைக்கு
என்செய் கேன், வல்வினை யேனே? 3273

சில சமயம் ஆழ்வாருடைய கருத்து வேகத்துக்குச் சொற்கள் விரைந்து துணை புரியவில்லை. 'விரும்பியதையெல்லாம் தர வல்ல எம்பெருமான் சீலத்தில் ஈடுபட்டுப் பாடியது' என்பது ஒன்பதாம் பத்தின் மூன்றாம் திருமொழியின் பொருள். இதன் இரண்டாம் பாடலில் ஆழ்வார் எம்பெருமானுடைய சீலங் களைச் சொல்லத் தொடங்குகிறார். அவனே ஞாலமெல்லாம் படைத்தான், உண்டான் உமிழ்ந்தான் அளந்தான் என்று சொல்லிக் கொண்டே போகிறார். உள்ளத்தில் உள்ள வேகத் துக்குச் சொற்கள் இசைந்து வரவில்லை. செயல்களையோ வடிவங்களையோ சொல்ல முடியாமல் அவன் அவன் என்றே சொல்லி முடிக்கிறார்.

அவனே அகல்ஞாலம் படைத்திடந்தான்
அவனே அஃதுண்டுமிழ்ந்தான், அளந்தான்
அவனே அவனும் அவனும் அவனும்;
அவனே மற்றெல் லாமும் அறிந்தனமே.

அவனே அவனும் அவனும் அவனும் அவனே என்ற இடத்துச் சொற்கள் பயன்பட இயலாத நிலை வெளிப்படுகிறது.

அடியார் திருக்கூட்டத்தைக் கண்டு வாழ்த்தல் என்று தலைப்பிட்ட திருமொழி (5, 2), 'துன்ப மெல்லாம் நீங்கின. நரகமும் நைந்தது. நமனுக்கு இங்கு வேலையில்லை. அசுரர் பிறந்தீர் உள்ளீரேல் உய்யும் வகையில்லை; எல்லோரும் சேர்ந்து தொழுதால் கலியுகமும் கெடும். பேரின்ப வெள்ளமாகிய கிருத

*யுகம் பிறந்து பரவும். அமரர் குழாங்கள் பரந்து தொழுகின்றன. வாருங்கள் தொழுவோம்' என்று உலகத்தையே அழைப்பதாகும்.*

பொலிக! பொலிக! பொலிக!
போயிற்று வல்உயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த
நமனுக்கு இங்குயாது ஒன்றும் இல்லை
கலியும் கெடும், கண்டுகொண்மின்;
கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து, இசை பாடி,
ஆடி, உழிதரக் கண்டோம். 3352

கண்டோம், கண்டோம், கண்டோம்
கண்ணுக்கு இனியன கண்டோம்
தொண்டீர்! எல்லீரும் வாரீர்
தொழுது தொழுது நின்று ஆர்த்தும்
வண்டு ஆர் தண் அம் துழாயான்
மாதவன் பூதங்கள் மண்மேல்
பண்தான் பாடி நின்று ஆடிப்
பரந்து திரிகின் றனவே. 3353

*சில ஒப்புமைப் பகுதிகளை மட்டும் குறிப்பிடுவோம் என்று மோரியல் வினர் என நினைவரியவர் (2904) என்று மோரியல் பினர் என நினைவரி யவர் (சம்பந்தர்-3789); உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கெனவே (3064) சிக்கெனப் பிடித்தேன் (திருவாசகம் பிடித்த பத்து); புணைவன் பிறவிக்கடல் நீந்து வார்க்கே (3088) - பிறவிப் பெருங்கடல் நீந்துவர் (குறள் 10); திரு வேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே (3150) - ஒற்றியூர் தொழ நம்வினை ஓயுமே (அப்பர் 5463).*

கோலமே, தாமரைக் கண்ணது ஓர் அஞ்சன
நீலமே, நின்று எனது ஆவியை ஈர்கின்ற
சீலமே, சென்று செல்லாதன முன்நிலாம்
காலமே, உன்னை எந்நாள் கண்டு கொள்வனே? 3205

*இதனோடு திருவாசகம் - திருச்சதகம் 43ஆம் பாடலை ஒப்பிடுக:*

மேலை வானவ ரும்அறி யாததோர்
கோலமே, எனைஆட்கொண்ட கூத்தனே
ஞாலமே விசும்பே இவை வந்துபோம்
காலமே, உன்னை என்று கொல் காண்பதே.

## 3. நம்மாழ்வாரின் சமய தத்துவம்

சமயப் பெருநூலாகிய நம்மாழ்வார் பாடல்களின் தத்துவத்தை இவ்விலக்கிய ஆராய்ச்சி நூலில் குறிப்பிட முயல்வது அவசியமில்லாதது; முடியச் சொல்லவும் முடியாதது. எனினும், நூல் நிறைவு பெறுதல் கருதி இங்கு சில சொற்கள் கூறுகிறோம். வைணவத்தில் அர்த்த பஞ்சகம் என்பார்கள். அர்த்த பஞ்சகமாவது ஐந்து பொருள்கள். அவை ஸ்வரூபம் (உயிர் இயல்பு), பரஸ்வ ரூபம் (இறைவனது இயல்பு), புருஷார்த்த ஸ்வரூபம் (புருஷனால் வேண்டப்படும் பேற்றின் இயல்பு), உபாய ஸ்வரூபம் (இறைவனை அடையும் உபாயம்), விரோதி ஸ்வரூபம் (அதற்குத் தடையான வினை) என்பன. அர்த்த பஞ்சக ஞானமே முத்திதர வல்லது.

இறைநிலையில் வேதாந்த முடிவாக எடுத்துரைக்கப்பட்ட பழம்பொருள் திருமாலே என்பது ஆழ்வார் துணிபு. பரம் பொருள் தன் போல் நித்தியமாயுள்ள சித்து அசித்து என்ற இரண்டையும் தன் அவயவங்களாகக் கொண்டு, எல்லாக் கரணங்களும் தானேயாகி படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலையும் செய்கிறது. அப்பொருளே மூவுருவாக நின்று மூன்றையும் செய்கிறது; செயல்கள் நித்தியமான விளையாட்டே. யார் எத்தெய்வத்தை வழிபட்டாலும் அவ்வழிபாடு, அப்பொருளுக்கே சேர்கிறது. பிரபத்தி மார்க்கமே உயிர்கள் உய்யும் நெறியாகும். எல்லாப் பற்றுக்களையும் விட்டு அவனையே சரணடைதல் பிரபத்தி. இதுவே கண்ணன் காட்டிய நெறி, யாவர்க்கும் உரிய எளிய நெறி; எளியோருக்கும் உரியது. பரம்பொருளை அடைவதென்பது, நம் முயற்சியால் கைகூடுவதன்று. அவனருளால் மட்டுமே கைகூடுவது.

உலகத்து வாழும் ஆன்ம கோடிகள் ஈசனது மாயத்தால் சமய பேதங்களில் சிக்கி உழல்கிறார்கள். இவர்களை அவன் கடுஞ் சோதனைக்கு உள்ளாக்குகிறான். இவை சோதனைகளே என்று உணர்ந்து உயிர்கள் அவனையே விரைந்து பற்றினால் விடுதலை உடனே கிடைக்கும். 'தொண்டீர், ஒக்கத் தொழகிற்றி

ராகில் ஒன்றும் கலியுகம் இல்லையே' என்பது ஆழ்வார் கூற்று. பரம்பொருளையே தலைவனாகவும் சிற்றுயிரைத் தலைவியாக வும் கொண்டு இவர் பாடியுள்ள பாடல்கள் இலக்கிய நயம் கொண்டு பொலிவது ஒரு புறமிருக்க, பிரபத்தி மார்க்கத்துக்கு இந்த நாயகிபாவம் மிக்க எளிதாய்ப் பொருந்துகிறது. அகப் பொருள் துறையில் இலக்கியம் செய்வது தாழ்வானது என்று களப்பிரர் அடக்கு முறையால் விளைந்த ஒரு தவறான நிலையை மாற்றி, அத்துறையையே பேரின்பமெய்தும் முயற்சிக்கு ஒரு பெருநெறியாக வகுத்துக் கொண்ட ஆழ்வார் நாயன்மார் பல ராவர்; அவர்களில் நம்மாழ்வார் பெருஞ்சிறப்பான ஒருவர்.

## திருவாய்மொழியின் பொருள்

வைணவ சமய தத்துவத்தின் கருவூலமாயும் தமிழ் வேத மாயும் வைணவருக்கு அமைந்தது திருவாய்மொழி. அப்பெரு நூலைச் சமய ஆசாரியனிடத்து உபதேசமாகப் பெறுவதே முறை. எனினும் அதன் போக்கை ஒருவாறு இங்கு சுருக்கி உரைக்கா விட்டால் வரலாற்றறிவு நிறைவு பெறாது. ஆகவே சில சொற் களால் அதிலடங்கிய பத்துப் பத்துக்களின் கருத்தையும் எழுதிக் காட்ட முற்படுகிறோம்.

திருவாய்மொழிக்கு எத்தனையோ வியாக்கியானங்கள் எழுந்துள்ளன. அவற்றிலெல்லாம் திருவாய் மொழியின் பார மார்த்திகப் பொருள் சொல்லப்பட்டிருக்கும். பிறவிக் கடலைக் கடப்பதற்கு இது ஒரு புணை, எம்பெருமான் திருவடியைப் பற்றிப் பரமபதம் அடைவதற்கு இதுவே பெருநெறி என்ற பொருளே பேசப்பட்டிருக்கும். ஆனால் யாம் இங்கு பார்ப்பது, இலக்கிய வரலாறு என்ற கண்கொண்டு. இந்தப் பார்வையில் பல் செய்திகள் புலப்படுகின்றன. இருபது நூற்றாண்டுகளின் வரலாறுகளையும் ஒரு சேரத் தொகுத்துப் பரிசீலிக்கும் போது நம்மாழ்வார் பாசுரங்களில் கண்ட சில உண்மைகளை எடுத்துச் சொல்லுகிறோம். இதைச் சம்பிரதாயத்துக்கு மாறு என்று எவ் விடத்திலும் யாரும் கருத வேண்டியதில்லை. யாமும் பொரு ளிடத்துப் பக்தியோடு தான் இவ்விஷயங்களை எடுத்துச் சொல் கிறோம். பெரிய பொருளுக்கு இத்தகைய விமரிசனத்தால் ஒரு போதும் குறை ஏற்படாது.

வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைக்கின்ற நம்மாழ்வார் பாடல்கள் ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பின், தமிழ்நாட்டில்

மட்டுமன்றி, இந்திய நாடு முழுமையிலுமே முன்னென்றும் கண்டிராத ஒரு புதிய பக்தி வெள்ளமும், சமய தத்துவப் பிரவாகமும் தோன்றி வளர்வதற்கு மூலமாயிருந்தன. இது தமிழருடைய ஒரு பெரும் சாதனை. இதனைச் சிறிதளவாவது வாசகர் உணர வேண்டும் என்பதற்காகவே இங்கு திருவாய் மொழியிலும் பிறவற்றிலும் மிக அதிகமான மேற்கோட் பாடல் களைத் தந்திருக்கிறோம். இவை ஆழ்வாருடைய மனநிலை யையும் பகவதனுபவத்தையும் சரணாகதி தத்துவத்தையும் எல்லாம் கடவுள் என்ற விரிந்த உணர்வையும் காண்பதற்குச் சிறிதளவேனும் துணை புரியும் என்பது எமது கருத்து.

இந்து மதத்தின் ஆதார சாத்திரங்கள் வடமொழியில் பிரஸ்தானத் திரயம் எனப்படும். இவை பிரம்ம சூத்திரம், உபநிடதம், கீதை என்பவை. இந்த மூன்றுக்கும் வியாக்கியானம் செய்த ஆசிரியர் கருத்தின்படி இந்து மதம் பல பிரிவாகப் பிரிந்தது. சங்கரர் வழி அத்வைத வேதாந்தம், இராமானுசர் வழி விசிஷ்டாத்வைதம், மத்துவர் வழி துவைதம். இம்மூவரும் தென்னாட்டினர்; முதல் இருவர் தமிழ் நாட்டார்.

பிரம்ம சூத்திரம் சொல்வது ஒரு தர்க்க மார்க்கம்: பரம் பொருள் இங்கு ஆத்மா என்றே சொல்லப்படுகிறது. உபநிடதம் கூறும் வழி ஞான மார்க்கம்; பரம் பொருள் இங்கு ஆத்மா என்றும், பிரமம் என்றும் சொல்லப்படும். பிற்காலத்தில் எல்லாச் சமயங்களைப் பற்றியும் புது உபநிடதங்கள் எழுதப்பெற்றன. இங்கு சிவன் விஷ்ணு முதலான பெயர்கள் பரம்பொருளுக்குச் சொல்லப்பட்டமையால் இவை சைவ உபநிடதம் வைணவ உபநிடதம் என்றும் கூடப் பெயர் பெற்றிருந்தன. பகவத் கீதை யில் சொல்லப்பட்டது கர்ம மார்க்கம். அதாவது இறைவனே அனைத்தையும் செய்விக்கின்றான் என்ற அடிப்படையில், செய்யுள் செயலின் பலனில் மனம் வைக்காமல் தன் பணியை இறைவனுடைய கட்டளை என்று கருதிச் செய்தல். பலன் தன் னைச் சேராது போகவே கர்ம பந்தம் நீங்குகிறது. விடு தலைக்கு இதுவே வழி.

ஆழ்வார் பாசுரங்களில் பொதுவாய்ச் சொல்லப்படும் நெறி பக்தி நெறி. இறைவனிடத்தில் உள்ளம் கரைந்து தன்னை ஈடுபடுத்தினால் இதுவே விடுதலையளித்துப் பரம பதம் அடை விக்கும் என்பது கருத்து. இதுவே சரணாகதி என்பது; வேறு ஒரு

புகலும் இல்லாமல் முழுமையும் பகவானிடத்திலேயே சரண் புகுவது. இந்தச் சரணாகதி நிலையையே பிரபந்தங்கள் அழ கொழுகும் பல கவிதையால் பல கோணங்களிலிருந்து உள்ளம் உருகும் தமிழால் சொல்லுகின்றன. தர்க்கமும் ஞானமும் கர்ம நெறியும் பாமர மக்கள் உணர்ந்து கொள்வதைவிட, பக்தி நெறியை உணர்வதும் அவ்வழியில் நிற்பது எளிது.

பின்னே திருவாய் மொழியை ஒவ்வொரு பத்தாக எடுத்துச் சில சொற்கள் சொல்லுகிறோம். இங்குச் சமய தத்துவத்தோடு இலக்கியச் சுவையும் சிறிதளவு சுட்டப்பெறும்.

நாலாயிரம் முழுமையும் திருமந்திரத்தின் பொருள் என்பது வைணவ சம்பிரதாயம். அதன்படி திருப்பல்லாண்டு தொடங்கி அமலனாதிபிரான் வரையில் (முதலாயிரத்தில் கண்ணி நுண் சிறுத்தாம்பு நீக்கி) பிரணவார்த்தம். கண்ணி நுண் சிறுத்தாம்பு பிரணவ சப்தார்த்தம். பெரிய திருமொழி முதல் பெரிய திருமடல் ஈறாக (பெரிய திருமொழியும் இயற்பாவும்) நாராயணாய என்ற மந்திரப் பகுதியின் பொருள். திருவாய் மொழி, த்வயார்த்த மாய்த் தீர்க்க சரணாகதியைப் போதிக்கும் சரம ப்ரபந்தம். பல்லாண்டில் தொடங்கித் திருவாய்மொழியில் முடிக்கும் முறை யையே நம்மாழ்வார் நாதமுனிகளுக்குக் கற்பித்தார், அவரும் அம்முறையிலேயே வகுத்தார் என்று ஆன்றோர் கூறுவர். சிலர் நான்கு வேதமும் ருக், யஜுஸ், சாமம், அதர்வணம் என்ற வரிசை யிலேயே வழங்குகின்றன, அதன்படி தமிழ் வேதமாகிய நாலா யிரமும் முதலாயிரம், (ருக்), பெரிய திருமொழி (யஜுஸ்), திருவாய் மொழி (சாமம்), இயற்பா (அதர்வம்) என்ற வரிசையிலே தான் அச்சிட வேண்டும் என்று குறிப்பிட்டு, அப்படியே அச்சிட்டும் இருக்கிறார்கள்.* முன்காட்டிய ஆன்றோர் கருத்தின்படி இது பொருந்தாது என்பது தெளிவு. சரமப் பிரபந்தமாகிய திருவாய் மொழி இறுதியில் அமைவதே முறையாகும்.

திருவாய் மொழியின் முதல் இருபது பாசுரங்களில், நம்மாழ்வாரின் தத்துவம் அடக்கம், இவையே இராமானுசர் ஸ்ரீபாஷ்யம் எழுதுவதற்கு ஆதாரமாய் இருந்தன என்ற ஒரு கருத்தும் வைணவரால் சொல்லப்படுவதுண்டு. அன்றி கோனேரி தாஸ்யை என்ற அம்மையார் 'உயர்வற உயர் நலம்' என்ற திருவாய் மொழியின் முதற் பாடலின் விளக்கமே ஏனைய

* வி. பூதூர் வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு 1973 பார்க்க.

பாடல்கள் யாவும் என்று விரிவாகச் சொல்லி, 164 பாடல்களுக்கு வியாக்கியானமாக, திருவாய் மொழி விவரண சதகம் அல்லது திருவாய்மொழி வாசகமாலை* என்ற பெயரில் ஒரு விரிவான நூல் எழுதியிருக்கிறார்.

ஒரு கருத்து நன்கு நினைவில் இருத்தத்தக்கது. ஆழ்வார் நாயன்மார் ஆகிய அருளாளர் வாக்கில் ஒத்த கருத்துக்கள் மட்டும் அன்றித் தொடர்களும் காணப்படுகின்றன. அது கொண்டு ஒருவர் நூலைப் பார்த்து அல்லது படித்து அல்லது கேட்டு மற்றவர் நூல் செய்தார் அல்லது பாசுரம் பாடினார் என்று கருதுவது பொருந்தாது. அருள் வாக்காக அமைந்த தொடர்கள், அவ்வச் சமய அடியார்களால் எங்கும் பாடப் பெற்று வந்தன. வந்தவை சமூகத்தின் பொதுச் சொத்தாக ஆகி விட்டன. பின் வந்தோருக்கும் அவை சொந்தமாக ஆகி, அவர்களால் சொல்லப் பெறுகின்றன. இதுகொண்டு பின்வந்தோர் முன் நூல்களைப் படித்துத்தான் இத்தொடர்களைச் சொல்கிறார்கள் என்று கருதுவது சரியன்று.

முதற் பத்து

திருவாய் மொழி முதற் பத்தில் எம்பெருமானுடைய பரத்துவம் கூறுகின்றார் என்று பெரியோர் அருளிச் செய்வர்; ஆகவே கைங்கரியமே புருஷார்த்தம் என்று அறுதியிடுகின்றார் எனவுமாம். முதலில் எம்பெருமான் திருவடிகளுக்கு நித்திய கைங்கரியம் செய்யும்படி தம் திருவுள்ளத்துக்கு உபதேசம் பண்ணி, அடுத்து உலகுக்கு உபதேசம் செய்து, அவன் அடியார்க்கு எளியவன் என்பதைச் சொல்கிறார். அவன் தம்மைச் சீல குணத்தால் ஆட்கொண்டான், ஆராதனைக்கு எளியவன், வழிபடும் அடியாருக்கு மிக்க இனியன், அவன் வாசியில்லாது அனைவருக்கும் ஒத்து அருள் செய்பவன் என்று கூறி, அவன் தம்மோடு கலந்த கலவையையும் சொல்லி, அவனது அருள் காரணமின்றியும் வருவது என்று காட்டுகிறார். 'அடியேன் சிறிய ஞானத்தன் அறிதல் ஆர்க்கும் அரியானை... அடியேன் காண்பான் அரற்றுவன், இதனின் மிக்கோர் அயர்வு உண்டோ' (2949) என்று கேட்கிறார். உலகுக்கு உபதேசம் என்ற இரண்டாம் திருவாய் மொழி இருசீரடிப் பாடல்கள், உபதேசமும் சுருக்கம்.

---

* இந்நூல் தஞ்சாவூர் சரசுவதி மகால் நூல் நிலையத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது, 1962.

மின்னின் நிலை இல
மன்னுயிர் ஆக்கைகள்
என்னும் இடத்து இறை
உன்னுமின் நீரே

உள்ளம் உரை செயல்
உள்ள இம்மூன்றையும்
உள்ளிக் கெடுத்து இறை
உள்ளில் ஒடுங்கே.

*பாடல்கள் 1, 5 நன்கு பிரசித்தமானவை.*

வீடுமின் முற்றவும்
வீடுசெய்து, உம்முயிர்
அற்றது பற்றெனில்
உற்றது வீடு உயிர்

வீடு உடையாளிடை
விடு செய்ம்மினே
செற்று அது மன் உறில்
அற்று இறை பற்றே.

*இப்பகுதியில் மூன்றாம் திருமொழியில் பல பாடல்கள் சமரசம் கூறுவன. நாலாம் திருவாய் மொழி, நாரை முதலிய புட்களையும் பிறவற்றையும் விளித்துத் தலைவி தூது விடுவதாக அமைந்துள்ளது (2932).*

அஞ்சிறைய மடநாராய், அளியத்தாய், நீயும் நின்
அஞ்சிறைய சேவலுமாய் ஆவாஎன் றெனக்கருளி,
வெஞ்சிறைப்புள் ளுயர்த்தார்க்கென் விடுதூதாய்ச் சென்றக்கால்
வன்சிறையில் அவன்வைக்கில் வைப்புண்டால் என்செயுமோ.

*இப்பாடலில், என்னிடம் கருணை கூர்ந்து நீ அவன் பால் சென்று என் காதல் நோயை உரைத்தக்கால் அவன் உன்னை வன் சிறையில் இட்டால் என்ன ஆவது என்று நாரையை நோக்கி இரங்குகிறார். இத்திருமொழியின் எட்டாம் பாடலை முன் விளக்கிக் கூறினோம் - நீயலையே சிறுபூவாய் என்ற பாட்டு முதற்பத்தில் இந்நாலாம் திருமொழியொன்றே அகப்பாட்டு.*

### இரண்டாம் பத்து

*இதனால் எம்பெருமானது காரணத்துவம் சொல்லுகின்றார் என்றும், பகவத் கைங்கரியத்தில் நேர்ந்த களையை அறுத்தல் பொருள் என்றும் பெரியோர் சொல்வர். இதனுள் இரு பதிகங்கள் (1, 4) தலைவியின் பிரிவாற்றாமையைச் சொல்வதும், அவளது ஆற்றாமையைத் தாய் எடுத்துத் தலைவனிடம் சொல்வதுமாக உள்ளன. ஒன்று (2) எம்பெருமானுடைய பரத்துவத்தைக் கண்ணன் அவதாரத்தைக் காட்டி நிறுவுவது. பிறவற்றுள், 'பெருமானைக் கலந்தும் அடியார் குழாத்துள் கூடுவது என்று' என இரங்கல், இறைவன் ஆபரணாதிகளுடன் தம்மை வந்து கலந்ததனால் பெற்ற இன்பத்தைக் கூறுதல், அவனைச்*

சிக்கெனப் பிடித்தல், பிறவிக் கடல் நீந்துவார்க்கு அவன் புணை போன்றவன் என்று கூறுதல், நின் கழல் ஏத்த எனக்கு எய்யாது அருள் செய் என்று இரத்தல், அருள் பெறும் பொருட்டுத் திருமாலிருஞ்சோலை மலை வழிபடுக எனல் ஆகிய பொருள்கள் பேசப்பட்டுள்ளன. சில பாடல்கள் குறிப்பிடத்தக்கன. மகளின் நிலையைத் தாய் கூறுதல்:

ஆடி ஆடி அகம்கரைந்து, இசை
பாடிப் பாடிக் கண்ணீர் மல்கி, எங்கும்
நாடி நாடி, நரசிங்கா என்று
வாடி வாடும் இவ்வாற் நுதலே. 3042

ஓரிடத்தில் திருமால் பரம் என்று இவர் பாடுகிற பாட்டு:

தீர்த்தன் உலகளந்த சேவடிமேல் பூந்தாமம்
சேர்த்தி அவையே சிவன்முடிமேல் தான்கண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை
பேர்த்தும் ஒருவரால் பேசக் கிடந்ததே. 3093

இவர் கூறும் இதே கருத்தை, சற்று முந்திய காலத்தில் வாழ்ந்திருந்த முத்தொள்ளாயிர ஆசிரியர் வேற்றுமையுணர்வு இன்றிச் சமரசமாகவே பாடுதலும் நோக்கத்தக்கது.

செங்கண் நெடியான்மேல் தேர்விசயன் ஏற்றிய பூ
பைங்கண் வெள்ளேற்றான்பால் கண்டற்றால்.

என்பது காண்க. நேதி நேதி என்று வேதங்கள் சொல்லுகின்ற நிலையை இவரும் ஒரு பாடலில் நகைச்சுவையோடு கூறுகிறார்.

ஆணல்லன், பெண்ணல்லன், அல்லா அலியும் அல்லன்;
காணலும் ஆகான்; உளன் அல்லன், இல்லை அல்லன்;
பேணுங்கால் பேணும் உருஆகும், அல்லனும் ஆம்
கோணை பெரிதுடைத்து எம் பெம்மானைக் கூறுதலே. 3062

முதல் திருமொழியில் நாரை அன்றில் ஒத்த பறவைகளையும், கடல் மதி இருள் போன்ற இயற்கைப் பொருள்களையும் விளித்து, ‘நீவிரும் என் போல் திருமாலைக் காமுற்று நைகின்றீர்களோ? என்று கேட்கிறார்.

இராமானுசரின் சிறிய தாயார் பிள்ளையான கோவிந்த பட்டர் கையில் வரப்பெற்ற சிவலிங்கத்தோடு, உள்ளங்கை கொணர்ந்த நாயனார் என்ற பெயருடையவராய்த் திருக்

காளத்தியில் சிவ பூசை செய்து கொண்டிருந்த காலத்து, மரத்தின் மேல் ஏறிப் பூசைக்குப் பூக் கொய்தவர். 'தேவன் எம்பெருமானுக் கல்லால் பூசையும் பூசனையும் தகுமே' (இரண்டாந் திருமொழி 4) என்ற பாடலை அப்பெரிய நம்பி பாடக் கேட்டு, பூக்குடலையை எறிந்துவிட்டுத் திருமாலடியவரானார் என்று குரு பரம்பரை கூறும்.

**தேவன் எப்பொருளும் படைக்கப்**
**பூவில் நான் முகனைப் படைத்த**
**தேவன் எம்பெருமானுக் கல்லால்**
**பூவும் பூசனையும் தகுமே? 3023**

திருமால் தம்மோடு கலந்த நிலையை ஆழ்வார் சொல்லும் ஐந்தாந் திருமொழி முழுமையும் அவனுடைய திருவுருவ வருணனை: செங்கனிவாய் செங்கமலம், கண் பாதம் கை கமலம் என்ற தொடர்களைப் பலமுறை பெய்து பாடுகிறார். ஆறாம் திருமொழியில், 'உன்னைச் சிந்தை செய்து செய்து, உன் நெடு மாமொழி இசை பாடிப் பாடி என் முன்னைத் தீவினைகள்: முழுவேர் அரிந்தனன் யான்' என்று பிறருக்கும் வழிகாட்டுகிறார். 'உன்னை எங்ஙனம் விடுகேன் உள்ள நோய்கள் எல்லாம் துரந்து உய்ந்து போந்திருந்தே' என்கிறார்.

1, 4, 5 திருமொழிகள் அகப்பாட்டாகும்.

ஏழாம் பதிகம் பன்னிரு திருநாமப் பாட்டு. இப்பெயரை ஆழ்வாரே இறுதிப் பாடலில் கூறுகிறார். கேசவன் நாராயணன், மாதவன், கோவிந்தன், விட்டு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பன இவர் கூறும் திருமாலின் பெயர்கள் 12; அத்தனையும் வடமொழியே. ஒரு பெயரை வைத்துப் பாடல் தொடங்கி அடுத்த பெயரைக் கொண்டு பாடல் முடிகிறது. அந்தாதியானமையால், முடிவில் உள்ள அந்தப் பெயரே அடுத்த பாடலில் தொடக்கமாகவும் வருகிறது.

**மூன்றாம் பத்து**

எம்பெருமானது வியாபகத்துவம் கூறுவதென்றும் கைங்கரிய சொரூபம் பாகவத சேஷத்துவ பரியந்தமான பகவத் கைங்கரியம் எனல் என்றும் சொல்வர். அதிகமாக அகத்துறைப் பாடல்களைப் பாடியுள்ள ஆழ்வார் இப்பத்தில் அகத்துறையே

*பாடவில்லை. இரண்டாம் பத்தின் பத்தாந் திருமொழி திருமாலிருஞ் சோலை அழகரை வணங்கும்படி கூறுவது; அது பற்றி, மூன்றாம் பத்தின் முதல் திருமொழி இவ்வழகர் வடிவழகில் ஈடுபடுவது என்று சொல்வதுண்டு. ஆனால் இத்திருமொழியில் திருமாலிருஞ் சோலை குறிப்பிடப்பெறவில்லை. முதல் பாசுரம் வடிவழகில் ஈடுபட்ட அனுபவமும் கவிதைச் சுவையும் ஓங்கி நிற்பது.*

**முடிச்சோதி யாய்உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?**
**அடிச்சோதி நீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?**
**படிச்சோதி ஆடையொடும் பல்கலனாய், நின்பைம்பொன்**
**கடிச்சோதி கலந்ததுவோ, திருமாலே, கட்டுரையே.**

*ஒருபதிகம் திருவேங்கடமுடையானிடத்தில் நிரந்தர கைங்கரியம் செய்ய வேண்டுமென்று கூறும். எல்லாம் அவனே என்று சொல்லும் பதிகம் மிக்க அழகுடையது (3158).*

**அச்சுதன் அமலன் என்கோ, அடியவர் வினை கெடுக்கும்**
**நச்சுமா மருந்தம் என்கோ, நலங்கெடல் அமுதம் என்கோ,**
**அச்சுவைக் கட்டி என்கோ, அறுசுவை அடிசில் என்கோ,**
**நெய்ச்சுவைத் தேறல்என்கோ, கனிஎன்கோ பாலென்கேனோ?**

*இத்திருமொழியுள் திருமாலைப் பின்னும் சாதி மாணிக்கம் என்கோ, சாதி நல்வயிரம் என்கோ என்கிறார்.*

*அழகரது வடிவழகில் ஈடுபடுதல், அவனிடத்து அன்பில்லாரை நிந்தித்தல், தஞ்சமாகப் பற்றுவதற்கு* **அச்சாவதாரமே** *எளிது எனல், தாம் அடியார்களின் அடியார்களுக்கு அடியார் எனல், கரணங்களும் தாமும் பெரு விடாப்பட்டுப் பேசுதல், மானிடரைப் பாடாது மாதவனைப் பாடுதலே தவம் எனல், அவன் சீர் பரவப் பெற்ற நான் ஓர் குறைவு இலன் எனல் - இவையே பிற பதிகங்களின் கருத்து. எவ்வளவுதான் தாழ்ந்தவர்களாயினும், மணிவண்ணற்கு ஆளானார் வணங்கத் தக்கார் என்று கூறும் பாடல், கற்றோர் நன்கறிந்தது.*

**குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து எத்தனை**
**நலந்தான் இலாத சண்டாள சண்டாளர்கள் ஆகிலும்**
**வலந்தாங்கு சக்கரத்து அண்ணல்மணிவண்ணற்காள் என்றுள்**
**கலந்தார் அடியார்தம் அடியார் எம் அடிகளே.** 3195

இத்திருமொழி சைவத் திருமுறைகளில் சுந்தரமூர்த்தி பாடிய திருத்தொண்டத் தொகையை நினைவூட்டுகிறது. மானிடம் பாடலாகாது என்று சொல்லும் பதிகம் முழுமையுமே மிக்க சிறப்புடையது.

**சொன்னால் விரோதம், ஆகிலும் சொல்லுவன், கேண்மினோ;**
**என்நாவில் இன்கவி யான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்;**
**தென்னா தெனா என்று வண்டு முரல் திருவேங்கடத்து**
**என்னானை என்னப்பன் எம்பெருமான் உளனாகவே.**

மேலும், 'மன்னா மானிடரைப் பாடிப் படைக்கும் பொருள் என்னாவது, எத்தனை நாளைக்குப் போதும்?' என்று கேட்கிறார். ஆகவே, 'புலவர்களே, திருமாலுக்கு மெய்வருத்திப் பணி செய்யுங்கள்' என்கிறார்.

**வம்மின் புலவீர், நும்மெய் வருத்திக் கைசெய் துய்ம்மினோ,**
**இம்மன் உலகினில் செல்வர் இப்போதில்லை நோக்கினோம்**
**நும்இன் கவி கொண்டு நும் இட்டா தெய்வம் ஏத்தினால்,**
**செம்மின் சுடர் முடிஎன் திருமாலுக்குச் சேருமே.**

பின்னால் 'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வருவர்' என்ற சிவஞான சித்திப் பாடல், இத்திருப்பாசுரத்தை நினைவூட்டுகிறது. அன்றியும் இத் திருமொழி முழுமையும் 'தம்மையே புகழ்ந்திச்சை பேசினும் சார்வினும் தொண்டர்த் தருகிலாப் பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்' என்று சுந்தரருடைய திருப்புகலூர்ப் பதிகத்தையும் நினைவூட்டுகிறது.

'வாய் கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லேன்' என்கிறார் ஆழ்வார். ஏன் இவ்வாறு சொல்கிறார் என்பது சிந்திக்கத்தக்கது. காரணங்களைச் செ ால்லுமிடத்து, நெஞ்சம், வாசகம், கை, கண், செவி, ஆவி என்று முறையாகச் சொல்லுகிறார்.

இப்பத்தின் ஏழாம் திருமொழியும் எட்டாம் பத்தின் பத்தாம் திருமொழியும் அடியார்க்கு அடிமை செய்யும் திறத்தைப் போற்றிப் பேசுவன. அக்காலத்தில் பகவானை விட ஆசாரியரை உயர்ந்த நிலையில் வைத்தும் அவரை விடப் பாகவதரை உயர்ந்த நிலையில் வைத்தும் நூல்கள் பேசும். மாறனேர் நம்பி தம் அந்திமதசையில் பெரிய நம்பிக்கு உணர்த்திய சொற்கள் இதற்குச் சிறந்த சான்று. இங்கு இவ்விரு திருமொழிகளிலும் ஆழ்வார் அடியார்களின் அடியார்களுக்குத் தாம் அடிமை

யாயிருக்கும் தன்மை இனியது என்றும் பேசுகிறார். இவ்விரு திருமொழிகளிலும் வைணவம் முழுவதுமே அடங்கும் என்றும் சொல்வதுண்டு. இந்த இருபது பாசுரங்களின் அடிப்படையிலே இராமானுசர் தமது ஸ்ரீ பாஷ்யத்தை எழுதினார் என்றும் சொல்வர்.

வைணவத்தில் பாகவதர்களோடு கலந்து வாழ்தல் என்ற கருத்துச் சிறப்பாய்ச் சொல்லப்படும். அக்கருத்தையே இவ் விரு திருமொழிகளும் போற்றி உரைப்பன "திரு நாராயணன் தொண்டர் தொண்டர் கண்டீர் இடையர் பிறப்பிடைதோறும் எமக்கு எம்பெரு மக்கள்" என்றும், அவர் எம்மைச் சன்ம சன் மாந்தரங்காப்பார் என்றும், அவன் அடியார் நனிமாக் கலவி இன்பமே நாளும் வாய்க்க நங்கட்கே என்றும், கோதில் அடியார் தம் தமர்கள் தமர்கள் தமர்களாம் சதிரே வாய்க்க தமியேற்கே என்றும் ஆழ்வார் பாடும் பாடல்களை இங்கு நினைவு கூர்க.

**நான்காம் பத்து**

இதன் கருத்து நியந்திருத்துவம் என்பதும், பகவத் கைங் கரியத்துக்கு விரோதி ஐசுவரியத்தையே பற்றுதல் என்று கூறு வதும் என்று பெரியோர் சொல்வர். இங்கு நான்கு பதிகங்கள் அகத்துறையில் உள்ளன. காதல் கை கூடாது இரங்கும் மகள் நிலை கண்டு தாய் வருந்துதல் என்ற பொருளில் உள்ள ஒரு பாடல் மிக்க நயமுடையது.

> நங்கைமீர், நீருமோர் பெண் பெற்று நல்கினீர்,
> எங்ஙனே சொல்லுகேன் யான் பெற்ற ஏழையை?
> சங்கென்னும், சக்கர மென்னும், துழாய்என்னும்;
> இங்ஙனே சொல்லும் இராப்பகல், என்செய்கேன். 3250

பிரிவாற்றாது அரற்றுகின்ற தலைவியின் நிலையைத் தாய் உரைக் குந் துறையில் மற்றொரு பதிகம் உள்ளது. அதன் பாடல்கள் யாவும் சிறப்புடையன (4.4.4)

> ஒன்றிய திங்களைக் காட்டி,
> ஒளிமணி வண்ணனே என்னும்
> நின்ற குன்றத் தினை நோக்கி,
> நெடுமாலே வாவென்று கூவும்
> நன்று பெயும் மழை காணில்
> நாரணன் வந்தான் என்று ஆலும்;
> என்று இன மையல்கள் செய்தார்
> என்னுடைக் கோமளத் தையே. 3267

'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்' என்ற பாடல் இப்பதிகத்துக்குரியது. ஒரு பதிகம் வெறிவிலக்கு என்னும் துறைக்கு உரியது. இவள் நோய் இளந்தெய்வம் அன்று, மிக்க பெருந்தெய்வம், கட்டுவிச்சி சொற்கேட்டு, களன் இழைத்து கள்ளும் இறைச்சியும் தூவிக் கருஞ்சோறும் செஞ்சோறும் அளித்து என் பயன் என்று பாடல் தோறும் சுவைபடக் கூறுவது. ஒரு பதிகம், எம்பெருமான் விரும்பாதவைகளால் தமக்குப் பயனில்லை என்று தலைவி கூற்றாகக் கூறுவது. பாடல் ஒவ்வொன்றும் 'குறைவு இலமே' என்ற சொற்களால் முடிவது. எனினும் அந்தாதித் தன்மை கெடாதபடி, இவற்றுக்கு முன்னுள்ள சொல்லையும் சேர்த்து மூன்று சொற்கள் கொண்ட தொடரால் அடுத்த பாடல் அந்தாதித்துத் தொடங்குவது அழகாயுள்ளது (4.8) கவராத மணிமாமை குறைவிலமே, கவராத மட நெஞ்சால் குறைவிலமே - என்பன பாடல் அந்தம். அடுத்த பாடலின் தொடக்கம் மணிமாமை குறைவிலா, மட நெஞ்சால் குறைவில்லா - என்பன போல அமைக்கப் பெற்றுள்ளது.

> **விரைகொள் பூவும்நீரும்கொண்டு ஏத்தமாட்டேனேலும் உன்**
> **உரைகொள் சோதித் திருவுருவம் என்னதாவி மேலதே.** 3259

என்கிறார். புனைந்த கண்ணி நீர் சாந்தம் புகையோடு ஏந்தி வணங்கினால் (2944); சுமந்து மாமலர் நீர் சுடர் தீபங்கொண்டு (3149); ஞானவிதி பிழையாமே பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து மேவித் தொழும் அடியார் (3360); பின்னும் பல இடங்கள். திருமாலுக்குப் பொதுவாக அபிடேகம் இல்லை; பூவிட்டு வழிபடுவதொன்றே செய்யத்தக்கது. இந்நிலையில் 'பூவும் நீரும் கொண்டு ஏத்தமாட்டேனேலும்' என்பதன் கருத்து சிந்திக்கற்பாலது.

இவை போக, இப்பத்தின் முதல் பதிகம் நிலையாமையை விரித்துக் கூறுவது. நிலையாமையைச் சைனரே விரித்துக் கூறுவர் என்ற ஒரு கருத்து உண்டு. ஆனால் இங்கு ஆழ்வார் அவர்களிலும் சிறப்புக் குறைவின்றியே கூறியிருக்கிறார் (3237):

> **ஆமின் சுவையை ஆறோடு அடிசில் உண்டார்ந்தபின்**
> **தூமென் மொழிமடவார் இரக்கப் பின்னும் துற்றுவார்,**
> **ஈமின் எனக்கொரு துற்றென்று இடறுவர்; ஆதலின்,**
> **கோமின் துழாய் முடி ஆதி அம் சோதி குணங்களே.**

*இப்பாடல் 'அறுசுவை உண்டி' என்ற நாலடியாரை நினைவூட்டுகின்றது. பிற பதிகங்கள், எம்பெருமான் சேர்க்கையால் பெற்ற இன்பத்தையும் அவனது கண்ணியத்தின் பெருமையையும், காணும்படி வருமாறு அவனை அழைப்பதையும், அவனே பரம் என்பதையும் கூறுவன. (ஆதிப்பிரான் என்று திருக்குருகூர்ப் பொலிந்து நின்ற பிரானை இவர் பாடுவதற்கு ஒற்றுமையாக ஒரு பெரியவர், ஆதிநாத தீர்த்தங்கரர் என்ற சமண சமய வரலாற்றையும் எடுத்துக் காட்டியுள்ளார்.* சிறிதும் பொருந்தாத வார்த்தை). ஒரு பதிகத்தில், உலக இயற்கையைக் காட்டி அதில் வெறுப்புற்று அருளவேண்டுமென்று பிரார்த்திப்பது சிறப்பாயுள்ளது (3319):*

நண்ணாதார் முறுவலிப்ப, நல்லுற்றார் கரைந்தேங்க
எண்ணாராத் துயர்விளைக்கும் இவை என்ன உலகியற்கை,
கண்ணாளா, கடல் கடைந்தாய், உனகழற்கே வரும்பரிசு
தண்ணாவாது அடியேனைப் பணிகண்டாய் சாமாறே.

*இவை என்ன உலகியற்கை என்ற தொடர் பல பாடல்களில் இப்படியே வருகிறது. மூன்றாம் பாடலில்,*

கொண்டாட்டும் குலம்புனைவும் தமருற்றால் விழுநிதியும்
வண்டார்பூங் குழலாளும் மனையொழிய உயிர்மாய்தல்
கண்டாற்றேன் உலகியற்கை, கடல்வண்ணா, அடியேனைப்
பண்டேபோல் கருதாதுன் அடிக்கே கூய்ப் பணிகொள்ளே.

*என்கிறார். குலமும் தமரும் நிதியும் பூங்குழலாளும் இவர் கண்டது உலகியற்கை. புளியின் கீழ்க் கண் மூடியிருந்தவருக்கு இவ்வுலகியற்கை எப்படித் தெரியும்? இறையருள் பெற்ற மாத்திரத்திலே உலக அனுபவமும் ஞான அனுபவமும் பரானுபவமும் தாமே சித்திப்பன என்றே நாம் கருத வேண்டும்.*

*பரம்பொருளுக்குத் தமது நெஞ்சமே சாந்தம், தமது பாடலே கண்ணியும் பட்டாடையும், தமது கைகூப்பே அணிகலனும் என்று ஆழ்வார் பாடியிருப்பது ஓர் அழகிய பாடல் (3254):*

பூசும் சாந்து என் நெஞ்சமே; புனையும் கண்ணி எனதுடைய
வாசகம் செய் மாலையே; வான் பட்டு ஆடையும் அஃதே;
தேசம் ஆன அணிகலனும் என் கை கூப்புச் செய்கையே–
ஈசன், ஞாலம் உண்டு உமிழ்ந்த எந்தை, ஏக மூர்த்திக்கே.

---

** பி.ஸ்ரீ. ஆச்சாரியா.*

நான் எத்தனை தீவினைதான் செய்திருந்தாலும், நெஞ்சுருகி நிற்கின்ற காரணத்தால் எதிரே வந்து 'பாவி' என்றேனும் ஒரு சொல் சொல்லலாகாதா என்று உருக்கமாய்க் கேட்கிறார் (3299):

ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன் கொல்
தாவி வையம் கொண்டஎந்தாய், தாமோதரா என்றென்று
கூவிக்கூவி நெஞ்சுருகிக் கண்பணி சோர நின்றால்
'பாவிநீ' என்றொன்று சொல்லாய், பாவியேன் காணவந்தே.

## ஐந்தாம் பத்து

இதன் பொருள், கருணையுடைமை (காருணிகத்துவம்); விரோதியைப் போக்குபவனும் அவனே எனல் என்பர். இதனுள் ளும் ஐந்து பதிகங்கள் அகத்துறை. பிரிவாற்றாமை மிகுதியால், தலைமகள் பழிக்கும் அஞ்சாமல் மடலேறத் துணிதலை ஒரு பதிகம் கூறும். பெண்கள் மடலேறுதல் தமிழ் அகப் பொரு ளிலக்கிய மரபில் இல்லை. இவருக்கு முன்மாதிரி, திருமங்கை யாழ்வார் பாடிய இரு திருமடல்களும் ஆகலாம்.

தலைவி இரவு நீட்டிப்புக்கு வருந்துதல், தலைவன் உரு வெளிப்பாடு கண்டு தாயரை மறுத்துரைத்தல், தலைவன் தன்மை களைத் தன்னவாய்க் கொண்டு பேசும் தலைவியின் நிலை கண்ட தாய், ஆவேசமோ என நொந்து கூறுதல், திருவல்லவாழ்ப் பெருமான் அருள் என்று பெறுவது என்று தலைவி இரங்குதல் என்பன பிற துறைகள்.

ஆவேசம் என்று நொந்து கூறும் பதிகம் சிறப்புடையது. வேறிடத்தில் இதுபோன்ற நிலையைக் காண்பதற்கில்லை. பின் வருவது பத்தாம் பாடல்.

கோலம்கொள் சுவர்க்கமும் யானே என்னும்;
கோலமில் நரகமும் யானே என்னும்;
கோலம் திகழ் மோக்கமும் யானே என்னும்;
கோலம்கொள் உயிர்களும் யானே என்னும்;
கோலம் கொள் தனிமுதல் யானே என்னும்;
கோலம் கொள் முகில்வண்ணன் ஏறக்கொலோ!
கோலம் கொள் உலகத்தீர்க்கு என்சொல்லுகேன்,
கோலம் திகழ் கோதை என் கூந்தலுக்கே. 3405

அடியார் திருக்கூட்டத்தைக் கண்டு வாழ்த்தும் இரண்டாம் பதிகத்து முதல் இரு பாடல்கள் சிறப்புடையவை; இவை முன்னமே காட்டப்பட்டன (பொலிக பொலிக, கண்டோம் கண்டோம்).

மக்கள் எல்லோரும் 'அவனையே ஒக்கத்தொழு கிற்றி ராகில் ஒன்றும் கலியுகமில்லையே' என்றும் 'கலியுகம் நீங்கி, பெரிய கிருதயுகம் பிறந்து பேரின்ப வெள்ளம் பெருகும்' என்றும் கூறுகிறார்: இது தொண்டர் அனைவரையும் காணுகின்ற ஒரு காட்சியின் விளைவான எண்ணம்.

அகப்பாட்டுக்கள் யாவுமே சிறப்பானவை. 'பெண் பிறந்தார் எய்தும் பெருந்துயர்' என்று ஆழ்வார் உண்மையாகவே தாம் ஓர் பெண்ணாகி இங்கு பாடுகிறார் ஆழ்வார் சிறப்பாக மல்லிகை மணத்தில் ஈடுபடுகிறார்; 'மது மல்லிகை கமழும் தேனார் சோலைகள் சூழ்திரு வல்ல வாழ்' (3429) என்று இங்கு சொல் லுபவர், பிற இடத்திலும் 'மணங் கமழ்வர் மல்லிகையே' என்றும் 'மல்லிகை கமழ் தென்றல் ஈருமாலோ' (3868, 3869) என்றும் பாடுவது காணத்தக்கது.

பிறதிருமொழிகளுள் மிகவும் சிறப்புடையது. திருக்குடந்தை ஆராவமுதன் புகழ். வழக்கற்றிருந்த நாலாயிரப் பிரபந்தங்கள் வெளிப்படுவதற்கே காரணமாயிருந்தவை இப்பாசுரங்கள் என்பதைத் தொடக்கத்தில் குறிப்பிட்டோம் (3418).

ஆரா அமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே
நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே,
சீர்ஆர் செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்குடந்தை
ஏர்ஆர் கோலம் திகழக் கிடந்தாய், கண்டேன் எம்மானே.

**ஆறாம் பத்து**

இதன் கருத்து சரண்யத்துவம்; விரோதிகளை அழிக்கும் ஆற்றலுடைய அவன் திருவடிகளில் சரண் புகுதல் என்பர். இதனுள் ஆறு பதிகங்கள் அகத்துறையாக உள்ளன. தலைவி பறவைகளைத் தூது விடுவது இரண்டு பதிகம்; மற்றவை தலைவி ஊடலும், தோழி தாயருக்கு உரைத்தலும், தாய் இரங்குதலும், திருக்கோளூருக்குச் செல்லத் துணிந்த மகளைக் குறித்துத் தாய் இரங்குதலும் ஆகும். இவற்றுள் குறிப்பிடத்தக்கது ஒரு பாடல்:

உண்ணும் சோறு, பருகும்நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்றென்றே கண்கள் நீர் மல்கி,

மண்ணினுள் அவன்சீர் வளம்மிக்கவன் ஊர் வினவி,
திண்ணம் என்இளமான புகும்ஊர் திருக்கோளூரே. 3517

வெற்றிலை என்று இலக்கியத்தில் ஆட்சி வருவது முதல் முதல் இவருடைய பாசுரத்தில்தான் என்று தெரிகிறது. பாக்கு வெற்றிலை என்ற பழக்கம் தமிழ் நாட்டில் ஆழ்வாருக்கு நெடு நாள் முன்னமேயே இருந்தது. அதற்குத் தினசரி வாழ்க்கைத் துறையிலும், சமயத்துறையிலும் நன்மை தீமை ஆகிய எல்லாச் சமூகச் சடங்குகளிலும் நிலவுகின்ற பெரும் ஆட்சியைப் பார்க்கும் போது, தமிழன் தோன்றிய அன்றே பாக்கு வெற்றிலை மெல்லும் பழக்கமும் தோன்றிவிட்டது என்று சொல்வது பிழையாகாது. 'அம்மென் திரையலோடு அடைக்காய்' என்ற சிலப்பதிகாரத் தொடருக்கு 'அழகிய மெல்லிய வெற்றிலைச் சுருளோடு கூடிய பிளவு' என்று உரைகள் கூறுகின்றன. (அக்காலத்திலேயே அழகிய மென்மையான வெற்றிலை தேடினார்கள் என்று தெரிகிறது). இருந்த போதிலும், வெற்றிலை என்ற சொல்லாட்சி முதன் முதல் ஆழ்வாரிடத்தில் தான் காணப்படுகிறது. (ஆனால் திருப்புளியின் கீழ் உலகத் தொடர்பே இல்லாமல் அமர்ந்திருந்த ஆழ்வார் தின்னும் வெற்றிலையை எப்படிக் கண்டு சொன்னார்?).

பூர்வாசாரியர் பல காரணங்களால் ஆரா அமுதன் பாசுரத்தில் பெரிதும் ஈடுபட்டிருக்கிறார்கள். பிரபந்தங்கள் யாவும் கிடைப்பதற்கு மூலமாயிருந்தது இப்பாசுரமே என்ற வரலாறென்றே இவ்வீடுபாட்டிற்குப் போதுமானது. பிற காரணங்களும் சொல்வார்கள். இதற்கு முந்திய திருமொழி, சிரீவர மங்கலத்தைத் துதிக்கும் திருமொழி (3407-17), நோற்ற நோன்பிலேன் என்று தொடங்குவது; 'உன்னை எங்கு எய்தக் கூவுவனே?' என்றெல்லாம் அங்குப் பாடிச் சரண் புகுந்த போதிலும், எம்பெருமான் இவருக்கு அங்கு முகங்காட்டாமல், திருக்குடந்தையில் காட்சி தருவதாகக் குறிப்பிட்டாராம். அப்படியே இவரும் குடந்தை ஆரா அமுதனை நினைத்துப் பாடினார். ஆனால் அப்பெருமானும் இவருக்கு எவ்விதமான அருளும் செய்யாத நிலையை எண்ணி, தாய் முகங்கொடாமல் இருப்பினும் சேய் எவ்வாறு வருந்தி அழைக்குமோ அதுபோல அமுதனைக் குழைந்து அழைப்பது இப்பாசுரம் என்பர். வடநாட்டில் வாழ்ந்திருந்த லோகசாரங்க முனி முதலானோர், தென்னாட்டிலிருந்து சென்ற ஒருவர் ஆரா அமுதே என்ற பாசுரம் பாடக்கேட்டு, அதை நன்குணர்ந்து, இச்சொல் நடையாடும் நாட்டை நோக்கிச் செல்வோம் என்று தென்னாடு நோக்கி வந்தார் என்று நம்பிள்ளை ஈட்டில் அருளிச்

செய்கிறார். 'அடியேன் உடலம் நின்பால் அன்பாயே நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே' என்ற இடத்தில், அசேதனமான உடலும் ஆத்ம தர்மம் சொல்லிச் செய்தது எனவும், 'ஆழ்வாருக்கு எம்பெருமான் பக்கலிலே உண்டான பேரன்பு அற்பமாகவும், எம்பெருமானுக்கு ஆழ்வார் பக்கல் உண்டான அன்பு பெரிதாகவும் விளைந்தன' எனவும் சொல்வார்கள். சீரார் செந்நெல் என்ற தொடருக்கு, செந்நெல்லுக்குச் சீர்மையாவது ஆராவமுதனுக்கு அமுதுபடியாகிற சீர்மை என்பர் நம்பிள்ளை.

வைணவ இலக்கிய மரபில் ஊடல் மிகவும் அருமை. இப்பத்தில் இரண்டாம் திருமொழி தலைவன் காலம் தாழ்த்து வரக்கண்ட தலைவி ஊடல் கொண்டு பேசுவதாக உள்ளது. பேச்செல்லாம் உண்மையாகவே ஒரு சிறு பெண் தன் விளை யாட்டுத் தோழனாகிய நம்பியைக் குறித்து உரைப்பது போலவே உள்ளன. உன்னுடைய சுண்டாயம் நான் அறிவன், என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு நம்பி; ஆகள் போகவிட்டுக் குழல் ஊது போயிருந்தே; நின் புள்ளுவம் அறியாதவர்க்கு உரை நம்பி; உன் மாயங்கள் மேலை வானவரும் அறியார், எம்மை நீ கழறேல்; உன் கை தவம் மண்ணும் விண்ணும் நன்கு அறியும்; எம் குழறு பூவையோடும் கிளியோடும் குழகேல்; குழகி எங்கள் குழமணன் கொண்டு கோயின்மை செய்து கன்மம் ஒன்று இல்லை; கழகம் ஏறேல்; உனக்கேலும் பிழை பிழையே, அது கேட்கில் என்னை மார் தன்ம பாவம் என்னார், ஒரு நான்று தடிபிணக்கே - எவ்வளவு எளிமையான நேர்முகமான குற்றச்சாட்டு, ஊடல்!

தோழி தலைவியின் செய்கை குறித்துத் தாய்மாரிடம் சொல்லி இரங்கும் பாடலில் ஒன்று:

பின்னைகொல், நிலமாமகள்கொல்,
    திருமகள்கொல், பிறந்திட்டாள்?
என்ன மாயம்கொலோ! இவள் நெடுமால்
    என்றே நின்று கூவுமால்;
முன்னிவந்து, அவன் நின்று, இருந்து
    உறையும் தொலைவில்லிமங்கலம்
சென்னியால் வணங்கும்; அவ்வூர்த்
    திருநாமம் கேட்பது சிந்தையே. 3504

ஆறாந் திருமொழி தன் மகள் மாலுக்கு இழந்தது சங்கு மாமை, பீடு, பண்பு, கற்பு முதலாக அடுக்கிச் சொல்வது மிகவும் சிறப் பாக உள்ளது.

ஒரு பதிகத்தில் தம் உள்ளத்தைக் கவர்ந்தவன் திரு விண்ணகர்ப் பெருமான் என்று சொல்லுமிடத்து, ஒவ்வொரு பாடலிலும், முரணுள்ள பொருள்களைக் காட்டி, அவை யாவும் அவனே என்று சுவைபடச் சொல்லுகிறார். நல்குரவு-செல்வம், நரகு-சுவர்க்கம், பகை-நட்பு, விடம்-அமுதம், இன்பம்-துன்பம், கலக்கம்-தேற்றம், தண்டம்-தண்மை, தழல்-நிழல், நகரம்-நாடு, ஞானம்-மூடம், சுடர்-இருள், நிலன்-விசும்பு, புண்ணியம்-பாவம், புணர்ச்சி-பிரிவு, எண்ணம்-மறப்பு, உண்மை-இன்மை, கைதவம் செம்மை, கருமை-வெளுமை, மெய்-பொய், இளமை-முதுமை, புதுமை-பழமை, மூவுலகங்களும்-அல்லனும், உகப்பு-முனிவு, பூமகள்-தவ்வை, புகழ்-பழி, பரஞ்சுடர் உடம்பு-அழுக்குப் பொதிந்த உடம்பு, கரந்தும்-தோன்றியும், நின்றும்-செய்தும், சுரர்க்குச் சரண்-அசுரர்க்குக் கூற்றம், உலகம் சரண் நிழற் கீழ் வைத்தும்-வையாதும், நிழல்-வெய்யில், குறுமை-நெடுமை, சுழல்வன-நிற்பன என்று எல்லாப் பொருளையும் எடுத்துச் சொல்லிய ஒரு நீண்ட பட்டியலை இங்குப் பார்க்கின்றோம். கண்ணனைப் பேசப் பெற்றமைக்குக் களித்தலும், எம்பெருமானை வாராய் என்று அழைத்தலும் திருவேங்கடவன் திருவடிகளில் சரண் புகுதலும் பிற திருமொழிகள் கூறும்.

ஆறாம் பத்தின் பத்தாம் திருமொழியின் ஏழாம் பாசுரம், 'அடியேன் மேவியமர்கின்ற அமுதே, இமையோர் அதிபதியே' என்ற முதல்வரியுடையது. ஒரு சமயம் ஒரு வைணவர், பட்டரை நோக்கி 'நித்தியத்திலே அமுது செய்யப் பண்ணும்போது எந்த ஸ்தோத்திரத்தை விண்ணப்பம் செய்வது?' என்று கேட்க, பட்டர் 'இந்தப் பாசுரத்தையும், பச்சை மாமலை போல் மேனி என்ற பாசுரத்தையும் போல இருக்குமவற்றை விண்ணப்பம் செய்க' என்றருளிச் செய்தாராம்.

### ஏழாம் பத்து

இதன் பொருள் சக்தி தத்துவம் என்றும், பெரிய பிராட்டியார் முன்னிலையாகச் சரண் புகுந்தும் சம்சாரம் தொடர்வது கண்டு ஆழ்வார் வருந்துதல் என்றும் சொல்வர். மூன்று பதிகங்கள் அகத்துறை. தலைவியின் காதல் கண்டு தாய் பெருமானை வினாவுதல், தலைவி தலைவனூர் செல்லத் துணிதல், அவனது உருவெளித் தோற்றம் கண்டு தலைவி இரங்குதல் என்பன பொருள்களாகும். பிற பதிகங்கள் இந்திரியங்களால் வரும் துன்பம், அவனது வெற்றிச் செயல்கள், அவனுக்கே அனைவரும்

*ஆளாதல், அவனிடத்து ஈடுபட்டு உருகுதல், அவனுடைய விசித்திர இயற்கைகள், தம்மைக் கொண்டு தன்னையே பாடு வித்துக் கொண்ட பெருந்தகைமை, அவனையன்றி வேறோர் சரணில்லை எனல் என்ற பொருள்களைக் கூறும். நான்காம் திருமொழியின் முதல் ஐந்து பாடல்கள், ஆட்டத்துக்கென்றே பாடப்பட்டவை போல, ஒலிச் சித்திரமாக அமைந்துள்ளன. முதல் மூன்றும் பின்வருவன (3594-6):*

ஆழி எழச் சங்கும் வில்லும் எழ, திசை
வாழி எழத் தண்டும் வாளும் எழ, அண்டம்
மோழை எழ, முடி பாதம் எழ, அப்பன்
வாழி எழ, உலகம் கொண்டவாறே!

ஆறு மலைக்கு எதிர்ந்து ஓடும் ஒலி, அரவு,
ஊறு சுலாய் மலைதேய்க்கும் ஒலி, கடல்
மாறு சுழன்று அழைக்கின்ற ஒலி, அப்பன்
சாறுபட அமுதம் கொண்ட நான்றே!

நான்றில ஏழ் மண்ணும் தானத்தவே, பின்னும்
நான்றில ஏழ்மலை தானத்தவே, பின்னும்
நான்றில ஏழ்கடல் தானத்தவே, அப்பன்
ஊன்றி இடந்து எயிற்றில் கொண்ட நாளே.

*தாம் அவன் மீது இங்கே கவி பாடிய செய்தியை ஒரு பதிகம் முழுமையிலும் என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை இன் கவிபாடும் பரமன் என்றே பாடுகிறார். முதல் இரு பாடல்கள் பின்வருவன (3649-50),*

என்றைக்கும் என்னை உய்யக் கொண்டுபோகிய
அன்றைக்கு என்று என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை
இன்தமிழ் பாடிய ஈசனை ஆதியாய்
நின்ற என் சோதியை என்சொல்லி நிற்பனோ?

என் சொல்லி நிற்பன், என் இன்னுயிர் இன்று ஒன்றாய்
என்சொல்லால் யான்சொன்ன இன்கவி என்பித்து,
தன்சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன்என்
முன்சொல்லும் மூவுருவாம் முதல்வனே.

*நல் இன் கவி தான் தன்னைச் சொன்ன என் வாய்முதல் அப்பன், என்னைத் தன்னாக்கி என்னால் தன்னை இன்கவி பாடும் பரமர்; இன்கவி பாடும் பரமகவிகளால் தன்கவி தான் தன்னைப் பாடுவியாது என்னுடன் ஆக்கி என்னால் தன்னை*

*வன் கவிபாடும் - இவ்வாறே எல்லாப் பாடல்களிலும் சொல்கிறார். பெருமான் தமக்கு அருள் செய்து தம்மை ஆட்கொண்டு, தாம் வேறு அவன் வேறு என்று இல்லாத நிலையைத் தந்தான், தாம் முழுமையும் அவனேயாய் ஆனபிறகு, தாம் அவனைப் பாடுவது எளிதல்ல. அவனே தன்னைப் பாடிக் கொண்டான் என்பது அவருடைய கருத்து. இது வைணவத்துக்கு மட்டுமல்ல, எல்லா வைதிக சமயங்களுக்கும் உரிய ஒரு சிறப்பான அத்வைத நிலை. இப்பத்துப் பாட்டுக்களின் முடிவில், 'இங்ஙனே சொன்ன இப்பத்தும் எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்குமே' என்கிறார். (ஏழாம் பத்தில் ஒன்பதாந் திருமொழி).*

*பதிகங்களிலே பாதாதிகேசம் கேசாதிபாதம் பாடுதல் அருளாளர்களின் வழக்கு. நம்மாழ்வார் ஒரு திருமொழியில் பத்துப் பாட்டிலும் கண்ணபிரான் திருமுக மண்டலத்தில் உள்ள உறுப்புக்களையே பாடுகிறார் - கண், மூக்கு, வாய், புருவம், முறுவல், காது, நுதல், முகம், குழல், சுடர் முடி என (3627-3637).*

கற்பார் இராம பிரானை அல்லால் மற்றும் கற்பரோ
புல்பா முதலா புல்எறும்பு ஆதி ஒன்று இன்றியே
நல்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நல்பாலுக்கு உய்த்தனன் நான்முகனார் பெற்றாநட்டுளே?

## எட்டாம் பத்து

*இதன்பொருள் சத்யகாமத்துவம் என்றும், ஆழ்வார் உலகப் பொருள்களில் தாம் நசையற்ற படியை அருளிச் செய்கிறார் என்றும் பெரியோர் கூறுவர். இரு பதிகங்கள் அகத்துறையாக உள்ளன. தலைவி தலைவனை நோக்கிச் செல்லக் கருதிக் கூறுதல், தோழி அவளது காதலின் உண்மை நிலையை எடுத்துரைத்து அயல் மணம் விலக்கல் என்ற இரு துறைகள் இங்குப் பேசப்படும். எடுத்துக்காட்டாக ஒரு பாடலை இங்கு தருவோம்.*

பரவாள் இவள் நின்று, இராப்பகல் பனிநீர்
　　நிறக்கண்ண பிரான்
விரவுஆர் இசை மறை வேதியர் ஒலி
　　வேலையின் நின்று ஒலிப்ப
கரவுஆர் கடந்தொறும் தாமரைக் கயம்
　　தீவிகை நின்று அலரும்
புரவுஆர் கழனிகள் சூழ்திருப் புலியூர்ப்
　　புகழ் அன்றி மற்றே.

எம்பெருமான் அடியார் வசமாவான் என்பதையும், அவன் அடியார் எங்கும் உளர் என்பதையும், அவனது வலிமையையும் நீ வந்து தோன்றாய் என்ற வேண்டுகோளையும், திருக்கடித்தான இருப்பையும், அவன் திருவடி வைத்தமை உள்ளத்தில் கண்ட மகிழ்தலையும், அவனது பரம்பொருள் தன்மையைத் தாம் உணர்ந்தமையையும், அவனுடைய அடியார்க்கே குடியாளாய்ச் செல்லும் நல்ல கோட்பாட்டையும் இங்கு மற்றப் பதிகங்களால் கூறுகிறார்.

‘உன்னை வணங்குமாறு அறியேன், மனமும் வாசகமும் செய்கையும் யானும் நீ தானே’ என்பது அவர் கூறும் முடிவான பொருள். எம்பெருமான் திருவுருவத்தைக் கண்டு அனுபவித்து அனுபவம் அளவிடப்படாமையாலே அதைச் சொல்லிச்சொல்லி மகிழ்கிறார்.

திருச்செங்குன்னூரில் திருச்சிற்றாறு அதனுள்
கண்ட அத்திருவடி என்றும்
திருச்செய்ய கமலக் கண்ணும் செவ்வாயும்
செவ்வடியும் செய்ய கையும்
திருச்செய்ய கமல உந்தியும் செய்ய
கமலை மார்பும் செய்ய உடையும்
திருச்செய்ய முடியும் ஆரமும் படையும்
திகழ என்சிந்தை யுளானே. 3710

இவ்வூரில் மூவாயிரம் வேதியர் வாழ்வதையும், குறிப்பிடுகிறார். பெருமானின் கருநிறத்தையும் திருமேனி ஒளியையும் ஒருங்கு புலப்படுத்துவதற்கு ஆழ்வாருக்குச் சொற்கள் இல்லை: கருஞாயிறு என்ற ஒரு புதுத்தொடரைப் படைத்துக் கொள்கிறார்.

வைணவ சமயத் தத்துவங்களின் சாரமாய் உள்ள ஒரு கருத்தை முன்னமே குறிப்பிட்டோம். திரண்ட கருத்தை ஆழ்வார் எட்டாந் திருமொழி முழுமையிலும் வெளியிடுகிறார். அவற்றிலும் சிறப்பானவை பின்வரும் நான்கு பாடல்கள் : (3751-4)

யானும் தானாய் ஒழிந்தானை யாதும் எவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத்த தனிமுதலை
தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகித் தித்தித்து, என்
ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை உணர்ந்தேனே.

நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு
அதன் நுண்நேர்மை அது இது என்று

ஒன்றும் ஒருவர்க்கு உணரலாகாது,
உணர்ந்தும் மேலும் காண்பு அரிது,
சென்று சென்று பரம்பரம் ஆய்
யாதும் இன்றித் தேய்ந்து அற்று
நன்றுதீது என்று அறிவு அரிதாய்,
நன்றாய் ஞானம் கடந்ததே.

நன்றாய் ஞானம் கடந்துபோய்
நல்இந்திரியம் எல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் பாழ்
உலப்பு இல்அதனை உணர்ந்து உணர்ந்து
சென்ற ஆங்கு இன்பத் துன்பங்கள்
செற்றுக்களைந்து பசை அற்றால்
அன்றே அப்போதே வீடு
அதுவே வீடு வீடாமே.

அதுவே வீடு வீடு பேற்று இன்பம் தானும் அது தேறி
எதுவே தானும் பற்று இன்றி யாதும் இலிகள் ஆகிற்கில்
அதுவே வீடு வீடு பேற்று இன்பம் தானும் அது தேறாது
எதுவே வீடேதின்பம் என்று எய்த்தார் எய்த்தார் எய்த்தாரே.

## ஒன்பதாம் பத்து

இதன் பொருள் ஆபத்சகத்துவம் என்றும், ஆழ்வார் தமக்கு எல்லாவற்றையும் குறைவற அருளுமாறு வேண்டுகிறார் என்றும் பெரியோர் கூறுவர். இங்கு நான்கு பதிகங்கள் அகத்துறையாக உள்ளன. பறவைகளெல்லாம் தலைவனையே நினைவூட்டு கின்றன என்று தலைவி தான் தளர்ந்தமை கூறுதல், பறவை களைத் தூதுவிடுதல், அவன் நகருக்குச் செல்ல நினைத்தல், மாலைப்பொழுது கண்டு இரங்குதல் என்ற துறைகள் இங்கு பொருளாய் உள்ளன. பிற பதிகங்களில், கண்ணன் அல்லால் இல்லை சரண் என்றும்,

வடிவிணை இல்லா மலர்மகள், மற்றை
நிலமகள் பிடிக்கும் மெல் அடியைக்
கொடுவினை யேனும் பிடிக்க நீ ஒருநாள்
கூவுதல் வருதல் செய்யாயே. 3801

என்றும், இருவினையும் கெடுத்து, யாக்கை புகாமை உய்யக் கொள்வான் நின்ற வேங்கடம் நீள் நிலத்து உள்ளது என்றும், 'கார்முகில் வண்ணன் தன் கள்வம் அறிகிலேன்' என்றும்,

திருக்கண்ணபுரம் நயந்த பெருமான் சரண் ஆகுமே என்றும் பிற திருமொழிகளில் பாடியுள்ளார்:

எம்பிரானைக் கண்டுகொண்டு அனுபவித்த நிலையைச் சொல்லாதிருக்க முடியவில்லை. 11ஆம் பாட்டிலன்றி இடையிலும் ஒரு பாட்டில் தொண்டர்க்காகச் சொன்னேன் என்று பாடுகிறார் (9.4.9).

**கண்டுகொண்டென் கண்ணிணை யாரக் களித்துப்**
**பண்டை வினையாயின பற்றோடறுத்துத்**
**தொண்டர்க்கமு துண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்**
**அண்டத் தமரர் பெருமா னடியேனே.**

திருக்கண்ணபுரம் வழிபடுமாறு உபதேசம் செய்கின்ற திருமொழி மிக்க அழகுடையது; தயிர்ப் பழஞ்சோற்றோடு பால் அடிசிலும் தந்து சொல் பயிற்றிய நல்வளம் ஊட்டினீர் (3832) என்ற பாடல் அக்காலம் இருந்த உண்மை நிலையையும் உணர்த்துகிறது. தலைவி மாலைப் பொழுது கண்டு இரங்குவதைக் கூறுமிடத்துப் பல பாடல்களில் பஞ்சமப் பண்ணைக் கூறுகிறார்.

**பத்தாம் பத்து**

இதனுள் ஆர்த்தி ஹரத்துவம் கூறப்படுகிறதென்றும் எம்பெருமான் ஆழ்வாருக்கு அர்ச்சிராதிகதியைக் காட்டி இவருடைய விருப்பத்தைக் கூட்டுவிக்கிறான் என்றும் பெரியோர் சொல்வர். இதனுள் அகத்துறைப் பதிகம் இல்லை. திருமோகூர்ப் பெருமானைச் சரண் புகுந்து பரமபதம் அடையக் கருதுதல், திருவனந்தபுரம் ஏத்த வினைகள் மாய்ந்து அறும் எனல், ஆநிரை மேய்க்கச் செல்ல வேண்டாம் என்று ஆய்ச்சியர் கண்ணனை வேண்டுதல், பின்னை கேள்வன் தாளைத் தலைமேல் புனைந்தமை, பக்தி பண்ணும் வகைகள், திருவாட்டாற்று எம்பெருமான் செய்த அருள், திருமாலிருஞ் சோலைமலை மாமாயன் மாயக் கவியாய் வந்து தம் நெஞ்சும் உயிரும் உள்கலந்து நின்றமை, திருப்பேர் நகரான் அடிசேர்வது தமக்கு எளிதாயினவாறு, திருநாட்டில் நடைபெறும் உபசாரங்கள் என்பன கூறி, திருவாய்மொழியின் இறுதியான பதிகத்தில் ஆழ்வார் பரம பக்தியால் கனிந்து திருமாலைத் தாம் அடைந்தமையை அருளிச் செய்கிறார்.

இறைவனை வழிபடுவதற்கான பொருள்களை ஒரு பாடலால் அழகாகக் குறிப்பிடுகின்றார்.

வகையால் மனம்ஒன்றி மாதவனை நாளும்
புகையால் விளக்கால் புதுமலரால் நீரால்
திசைதோ றமரர்கள் சென்று இறைஞ்ச நின்ற
தகையான் சரணம் தமர்கட்கோர் பற்றே. 3933

*ஏழாம் திருமொழியின் முதற்பாடல் மிக்க சிறப்புடையது. கவிஞரான ஆழ்வார் பிற கவிஞர்கட்கு ஒன்று உணர்த்துகிறார்.*

செஞ்சொற் கவிகாள், உயிர்காத்துஆட்
செய்ம்மின்; திருமாலிருஞ்சோலை
வஞ்சக் கள்வன், மாமாயன்
மாயக் கவியாய் வந்துஎன்
நெஞ்சும் உயிரும் உள்கலந்து
நின்றார் அறியாவண்ணம், என்
நெஞ்சும் உயிரும் அவை உண்டு,
தானே ஆகி நிறைந்தானே. 3957

*மிக்க நகைச்சுவையோடு, 'கவிகாள், உயிர் காத்து ஆட்செய்ம்மின்' என்று தம் நிலையைச் சுட்டி எச்சரிக்கை செய்கிறார் (3957).*

*திருமந்திரத்தைக் குறிப்பிடும் சிறிய பாடல் மிகவும் போற்றப் பெறுவது (10.5.1,3):*

கண்ணன் கழலிணை
நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே.

நாடீர் நாள்தோறும்
வாடா மலர் கொண்டு
பாடீர் அவன் நாமம்
வீடே பெறலாமே.

*இறுதிப் பதிகத்தின் முதற்பாடல் நன்கறிந்த பாடல்:*

முனியே, நான்முகனே, முக்கண் அப்பா, என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே, என்கள்வா,
தனியேன் ஆருயிரே! என் தலைமிசையாய் வந்திட்டு
இனிநான் போகலொட்டேன் ஒன்றும் மாயம் செய்யேல் எனையே.

*அடுத்த பாடலில் தம்மைக் கூவிக் கொள்ளுமாறு ஆணையிட்டுச் சொல்கிறார்.*

மாயம் செய்யேல் என்னை: உன்திரு மார்வத்து மாலை நங்கை
வாசம் செய்பூங் குழலாள் திருஆணை; நின் ஆணைகண்டாய்;
நேசம் செய்து உன்னோடு என்னை உயிர்வேறின்றி ஒன்றாகவே
கூசம் செய்யாது கொண்டாய்; என்னைக் கூவிக் கொள்ளாய்*
வந்து, அந்தோ!

## சடகோப சரிதம் கூறும் கருத்து

இங்கு தேவேச பாரதிகள் கூற்றாகத் திருவாய்மொழியின் கருத்தை அமைத்திருக்கும் பகுதி பற்றிச் சில சொற்கள் கூறுதல் தகும். 12 திராவிடவேதம் அருளிச்செய்த படலம் என்ற இடத்தில் இவர் சில கருத்துக்கள் கூறுகிறார். 108 திருப்பதி மாயனும் புளி நீழலில் வந்து வைகினார்கள். காரிக்குலப் பிரானும் ஆரணப் பொருளாகிய தமிழ் ஓதலுற்றான்; அந்தாதியாக எண்பத்தேழ் தொடை சொற்றனன். 1102 பாவே திருவாய்மொழி. முதலில் பாரதிகள் திருவாய்மொழி பத்தின் பொருளை ஒரு பாட்டிலும், அடுத்து இவ்விரண்டாக ஐந்து பாட்டிலும், பின் தனித்தனியாக ஐந்து பாட்டிலும், பிறகு தனித்தனி பத்து வீதம் 100 பாட்டிலும் சொல்கிறார். இவ்வாறு இவ்வாசிரியர் கூறியிருப்பது மிகவும் சிறப்பு என்பதில் ஐயமில்லை. ஒரே பாடலில் கூறிய கருத்து:

பேருறும் பிர பந்த மதிற்பிரான்
நாரணன் என்றதும், உயிர் நாடிடும்
சீரும், அன்னவன் செய்கும் உபாயமும்,
ஏர்கொள் நாடினை ஈதலும் ஓதினான்.

அடுத்த பகுதியை விட்டு, அடுத்து ஒவ்வொரு பத்தின் பொருளை இரண்டு அடிகளால் கூறியிருப்பதைக் காட்டுவோம்.

பண்ணமைந்த அப்பாமுதற் பத்தினில்
கண்ண னேபரன் என்று கழறி, மற்று
எண்ணு மோரிரண்டு எவ்வுயிர் கட்கும் அவ்
வண்ண லேயினி யானென் றறைந்தனன்.

பின்னும் மூன்றினிற் பேரருளான்குணந்
தன்னை யேஉயிர் சாற்றிடும் என்றதும்,
உன்னும் நான்குள் உயிரவன் தன்னையே
மன்னும் என்றதும் வாய்ப்ப விளம்பினான். 18

* கூவிக் கொள்ளாய் என்பது அடிக்கடி திருவாசகத்துள்ளும் பயிலும் தொடர்.

ஏயும் ஐந்தினில் எம்பெரு மானேஉ–
பாய மாம் உயிர்க் கென்று பகர்ந்தபின்
ஆயும் ஆறினில் ஆருயிர் உய்குவான்
மாய வன்செய் உபாயம் வழங்கினான். 19

மற்றும் ஏழினில் மாயனைச் சேருதற்கு
உற்றி டும்பல் விரோதம் உரைத்து, நற்
சொற்றி கழ்ந்திடு எட்டிற்சொல் விரோதிகள்
அற்றிடும் என்று அறைந்தனன் நன்றரோ. 20

பாகு நேரொன் பதிற்றிரு வாளனால்
ஆகும் லாபம் அறைந்து, ஒரு பத்தில்தான்
சோக மோகந் தொலைத்தவர் வாழ்திரு
மாக மானிலம் வைகிய தோதினான். 21

இதன்பின் முறையாக ஒவ்வொரு பத்தின் உட்பொருளை விளக்கி வருகிறார். ஒவ்வொரு திருமொழிக்கும் ஒரு பாட்டு. இப்படி நூறு பாட்டுச் சொல்லி வருகிறார். நாலாம் பத்து முடிந்தவுடன், பொலிந்து நின்ற பிரான் நெஞ்சம் வியந்து சடகோபருக்கு ஒரு விருது ஈந்தான் என்கிறார்.

இத்திருவாய் மொழியினை மாறனும் உகந்தங்கு
இயம்பலும் அச்சுவை செவியால் இனிது மாந்தி
வித்தகன்நம் பொலிந்து நின்ற பரம னெஞ்சம்
வியந்த தற்கோர் கைம்மாறு விருதீவான்தன்.

சித்தமதி லுன்னியனத் துவசம் வண்டார்
செய்ய மகிழ்த் தொடையலுமச் செவ்வியோன்பால்.

மத்தகசத் தறுகணறச் செய்தேவர் ஈந்து
வகுளபூடண னெனப்பேர் வழங்கப் பெற்றான். 63

இவற்றையெல்லாம் இங்கு காட்டுவது, ஆழ்வார் பாசுரங்களைப் பின்வந்தோர் எப்படியெல்லாம் அனுபவித்திருக்கிறார்கள் என்று உணர்த்துவதற்காகவே.

### பல சுருதியில் உள்ள பொருள்

திருவாய் மொழியில் பல சுருதிப் பாடல்கள் 100 உள்ளன. இவற்றில் சொல்லப்பட்ட பொருள்கள் மிகவும் சுவையுடையன. அவை இகம், பரம் இரண்டையும் கருதியவை ஆகும். அவற்றுள் சிலவற்றை இங்கு தொகுத்துக் கூறலாம். சில பாடல்

களில் பாடி ஆடுங்கள் என்று கூறுகிறார். பாடவல்லார் வீடு அடைவர், வைகுந்தம் விடார், பாடல்கள் நோய்களை ஓட வைக்கும், நல்குரவை நீக்கும், வெற்றி தரும், கற்போருக்குக் கல்வி வாய்க்கும், பாடல் வல்லவர்கள் வைணவர்கள் ஆவார்கள். கொண்ட பெண்டிர் மக்கள் நல்ல பதத்தால் மனை வாழ்வார். மண் ஆண்டு மல்லிகை மணம் கமழ்வார்.

பாடல்கள் வல்லார் தம் அருவினையை நீவு செய்யும், வேதி மாறாத பூமேல் இருப்பாள், அவர்களுடைய சன்மம், முடியும், அவர்களுக்கு இகலோக நல்வாழ்வு கிடைக்கும் என்பதைப் பல பாடல்களில் சொல்லுகின்றார். உயிரின்மேல் ஆக்கை ஊனிடை உய்விக்கும். அவன் நாடும் நகரமும் நன்குடன் காண நலனிடை ஊர்தி பண்ணி வீடும் பெறுத்தி மூவுலகுக்கும் ஒரு நாயகம் தரும். வையம் மன்னி வாழ்ந்திருந்து மண்ணோடே விண்ணும் ஆள் வர். அவரைத் தொக்கு ஏழையர் பல்லாண்டு இசைத்துக் கவரி செய்வர். பாடல் வல்லார் அமருலகில் போய்ப் பைந்தொடி மங்கையர் தம் வேய்மரு தோளினை அடைவர். அவர்கள் முனி வர்கள். அவர்கள் மின்னிடையார்க்கு மதனர் ஒப்பார். அவர் கள் இறந்துபோய் வைகுந்தம் சேராவாறு எங்ஙனேயோ?

பாடல் வல்லார்களை வைகல் தீர்த்தங்களே என்று பூசித்து நல்கித் தம் தேவியார்க்கு உரைப்பர். அவர்களுக்குத் திருமால் தன் கண்கள் சிவந்து சன்மம் விடத் தேய்ந்து அற நோக்கும். பாடல் வல்லார் பிறவார், பிறவி அம் சிறை அறுவர். பாடல்கள் உள்ளத்தை மாசு அறுக்கும், திருவடி அடைவிக்கும் (3329) திரு வடியைச் சேருவது என்பது வைணவப் பாசுர மரபில் மிகவும் அபூர்வமாய் வருகிற ஒரு பிரயோகம்.

**சமரசம்**

எல்லோர்க்கும் நாயகன் அவனே (3333) என்று ஆழ்வார் எங்கும் சொல்லிவந்த போதிலும், சில சமயம் அந்த நாராயண னுக்கும் நான்முகனுக்கும் சிவனுக்கும் பேதங் காணாத நிலை யையும் கூறி மகிழ்கிறார்; முனியே நான்முகனே முக்கண் அப்பா என் பொல்லாக் கனி வாய்த் தாமரை கண் கருமாணிக்கமே என் கள்வா' (3990) 'அம்பரம் நற்சோதி அதனுள் பிரமன் அரன் நீ' (3993) 'தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத் தனி முதல்' (3751), 'ஏறாளும் இறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறாளும் தனி உடம்பன் (3619); முக்கட்பிரான் பிரம பெருமான் அவன் நீ (3619);

**ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற**
**நன்றெழில் நாரணன் நான்முகன் அரன் எனுமிவரை**
**ஒன்றநும மனத்துவைத்துள்ளிநும் இருபகை அறுத்து**
**நன்றென நலம்செய்து அவனிடை நம்முடை நாளே. 2927**

*என்ற இடங்கள் சில எடுத்துக்காட்டுக்களாகும்.*

**ஒளி மணி வண்ணன் என்கோ?**
**ஒருவன் என்று ஏத்தநின்ற**
**நளிர்மதிச் சடையன் என்கோ?**
**நான்முகக் கடவுள் என்கோ?**

*என்ற பாடலில் (3161) எம்மான் கண்ணனை மாயனை இவ்வாறெல்லாம் சொல்லித் துதித்து மகிழ்வேனோ என்கிறார். இங்கு 'ஒருவன் என்று ஏத்த நின்ற நளிர் மதிச் சடையன்' என்று இவர் குறிப்பிட்டிருப்பது சிந்திக்கத்தக்கது. ஏறாளும் இறையோனும் திசைமுகனும், திருமகளும், கூறாளும் தனி உடம்பன்; வெள்ள நீர்ச்சடையானும் நின்னிடை வேறல்லாமை விளங்க நின்றதும்; கடிகமழ் கொன்றைச் சடையனே என்றும், நான்முகக் கடவுளே என்றும், வடிவு உடை வானோர் தலைவனே என்றும், வண் திருவரங்கனே என்றும்; பெரிய அப்பனைப் பிரமன் அப்பனை உருத்திரன் அப்பனை முனிவர்க்கு, உரிய அப்பனை அமரர் அப்பனை; அயனாம் சிவனாம் திருமாலால் அருளப்பட்ட சடகோபன்; சிவனோடு பிரமன் வண்திருமடந்தை சேர் திரு ஆகம் எம் ஆவியீரும்; படைப்பொடு கெடுப்பு காப்பவன், பிரம பரம் பரன், சிவப்பிரான் அவனே (3712), அரி அயன் அரன் என்னும் இவரை உணர்ந்துணர்ந்து விரைந்துரைத்து இறைஞ்சுமின் (2926).*

புணர்க்கும் அயனாம், அழிக்கும் அரனாம்,
புணர்த்ததன் உந்தியொடு ஆகத்து மன்னி 3090

என்திருமார் பன்தன்னை என்மலைமகள் கூறன்தன்னை,
என்றும் என்நாமகளை அகம்பால் கொண்ட நான்முகனை,
நின்றசசிபதியை நிலம் கீண்டு எயில் மூன்றெரித்த
வென்றுபுலன் துரந்த விசும்பு ஆளியைக் காணேனோ. 3622

*'திருச்செங்குன்றூரில் .... அமர்ந்த மாயோனை முக்கண் அம்மானை நான்முகனை அமர்ந்தேனே' (3713).*

*இவை மட்டுமல்ல ஆழ்வார், தாம் பாடிய எல்லாப் பாடல்களையும் முடித்து இறுதியாகப் பாடுகின்ற பாடலில்*

(10.10.11) என்ன சொல்கிறார் என்பது இங்கு சிந்திக்கத்தக்கது. இறுதிப்பாடல் இவருடைய பாசுரங்கள் அனைத்தின் முடிமணி என்று கருதுதல் பொருந்தும்.

அவாவறச்சூழ் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவில் அந்தாதிகளால் இவை ஆயிரமும் முடிந்த
அவாவில் அந்தாதி இப்பத்து அறிந்தார் பிறந்தார் உயர்ந்தே.

இங்கு தாம் அரியாக, அயனாக, அரனாக உள்ள ஒரு பரம்பொருளைப் பாடி வீடுபெற்றதாகப் பாடுகிறார். இறுதித் திருமொழியில் ஆழ்வார் தாம் திருமாலை அடைந்தமையை அருளிச் செய்கிறார் என்று பெரியோர் சொல்வர். இங்கு அரியை மட்டும் சொல்லவில்லை. அரியை அயனை அரனைப் பாடி அவாவவற்று வீடு பெற்றதாக - மூவரையும் பாடி வீடு பெற்ற தாகச் சொல்கிறார். இறுதி நிலையிலும் இவரே சமரசம் சொல்ல வேண்டுமென்று எண்ணிச்சொல்வது பெரிதும் சிந்திக்கத்தக்கது.

ஆழ்வார் கூறுவது சமரசம் மட்டும் அல்ல, அதனினும் உயர்ந்ததாகிய வேறுபாடற்ற ஒருமை நிலை.

மற்றுமொரு கருத்து. பல சுருதிப் பாடல்கள் ஆழ்வார் பாடல்கள் அல்ல பின்வந்தோர் பாடிச் செருகியவை என்று சிலர் சொல்வதை வேறிடத்தில் குறிப்பிட்டிருக்கிறோம். இடைச் செருகல் செய்தவர்கள் அப்படியே செய்தார்கள் என்று கொண்டு பேசுவதானால் அவர்கள் சமய வெறியுடையவர்கள், அவர் கள் பாடலில் இத்தகைய சமரசம் உதிக்காது. ஆகவே, பூரண சமரசம் சொல்லுகின்ற இப்பாடல் ஆழ்வாருடைய ஆழ்ந்த அனுபவத்தின் வெளிப்பாடே அன்றி, யாரோ பெயர் தெரியாத ஒருவர் எக்காலத்திலோ பாடிச் சேர்த்தார் என்று நினைப்பது, ஆழ்வார் இதயத்தை உணராமையால் வந்த பெரும் பிழையும் ஆழ்வாருக்குச் செய்யும் பெருந்துரோகமுமாகும். இவ்வொரு பாடலின் நிலை இதுவானால் ஏனைய பாடல்களும் ஆழ்வார் பாடல்களே என்றாகி, பிறர் வேறுவிதமாய்க் கூறும் கருத்து மறுக்கப்பட்டுப் போகிறது.

### திருவாய்மொழித் திரட்டு

நாலாயிரப் பிரபந்தத்தை நாள்தோறும் முழுவதும் ஓதுவது இயலாமையால், இவற்றுள்ளே திருப்பாவை, திருப்பள்ளி

எழுச்சி இரண்டும் பெருமானைத் திருப்பள்ளி உணர்த்தி அவனிடத்தில் பணிகொள்ளும் பனுவல்கள் ஆகையால், அவை சிறு காலையில் நாளும் ஓதப்பட வேண்டும் என்றும், ஆழ்வார்கள் அருளிச் செயல்களை ஓதும் போதெல்லாம் முதலில் வேதத்துக்கு ஓம் என்ற பிரணவம் போலத் திருப்பல்லாண்டு ஓதப்படுவது என்றும், திருவாய்மொழி ஓதும் காலத்துக்கு முன், நம்மாழ்வாரைத் துதிக்கும் கண்ணி நுண் சிறுத்தாம்பு ஓதப்படுவது என்றும், சந்நிதிகளில் எல்லாம் மாலையில் திருப்பல்லாண்டு முதல் சில நூல்கள் அன்றாடம் ஓதப்படுவன என்றும் இப்படி நாதமுனிகள் உள்ளிட்ட முன் ஆசாரியர்கள் இந்நூலை ஓதும் காலங்களில் சில நிலையான நடைமுறைகளை வகுத்தார்கள் என்றும், இப்படியே திருவாய்மொழியின் முதல் பத்தில் முதல் 2 திருவாய்மொழிகளையும் (உயர்வற உயர்நலம், வீடு மின் முற்றவும்) 10ஆம் பத்தின் இறுதி இரண்டு திருவாய் மொழிகளையும் (சூழ் விசும்பு அணிமுகில், முனியே நான் முகுனே), மற்ற எட்டுப் பத்துக்களிலும் சாரமான ஒவ்வொரு திருவாய்மொழியையும் (20-கிளரொளி இளமை 23-ஒழிவில் காலமெல்லாம், 40-ஒன்றும் தேவும், 43-ஆரா அமுதே அடியேன் உடலம், 60-உலகம் உண்ட பெருவாயா, 62-கங்குலும் பகலும், 80-நெடுமாற்கு அடிமை, 90-மாலை நண்ணித்தொழுது) தேர்ந்தெடுத்து அந்தப் பன்னிரண்டு திருவாய்மொழிகளையும் கோயில் திருவாய்மொழி என்று பேரிட்டு, அவை திருவாய்மொழி முழுமையும் ஓத இயலாத போது ஓதத் தகுவனவாக அமைக்கப்பட்டன என்றும் சொல்வது ஒரு வைணவ மரபு. இப்படியே சைவரது தேவார மரபிலும், அடங்கன் முறை முழுவதையும் நாளும் ஓத இயலாமையால், 25 பதிகங்களை மட்டும் ஓதினால் முழுமையும் ஓதிய பயன் பெறலாம் என்று சிவாலய முனிவருக்காக அகத்திய முனிவர் 25 பதிகங்களைத் திரட்டிக் கொடுத்தார் என்ற ஒரு மரபு உண்டு; அப்பதிகங்கள் அகத்தியர் தேவாரத் திரட்டு என இன்றும் வழங்கி வருகின்றன.

இங்கே குறிப்பிட்ட திரட்டு தென்கலைக்குரியதாகும். இதனோடு பின் குறிப்பிடும் திருவாய் மொழிகளையும் சேர்த்து ஓதுவது வடகலையார் மரபு என்பர். 2-8; அணைவரதவனணைவு மேல், 4-1; ஒரு நாயகமாய் 7-4; ஆழியெழ. 9-3; ஓராயிரமாய் (ஆக நான்கு)

❖ ❖ ❖

# 4. நம்மாழ்வார் புகழ்

## ஆசாரிய பரம்பரை

ஸ்ரீவைஷ்ணவ ஆசாரிய பரம்பரை பரமபதத்தில் பெரிய பெருமாளாகிய திருவைகுந்த நாதன் முதலே தொடங்குகிறது. பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார் (திருமகள்), விஷ்வச் சேனர் என்னும் சேனை முதலிகள். இவருக்கு ஆழ்வார் பதின் மரும் சிஷ்யர் என்ற போதிலும், நம்மாழ்வார் வழியேதான் பரம்பரை வளர்ந்து கொண்டு வருகிறது. திருமால் திருமகள் சேனைநாதன் மூவரும் வைகுந்தத்திலிருப்பவர்கள். நம்மாழ் வார் முதல் தொடங்கும் ஆசாரியர் பூலோகவாசிகள். ஆழ்வா ரைச் சேனை நாதருடைய அமிசபூதர் என்று சொல்வார்கள்.

நம்மாழ்வாருடைய சீடர் மதுரகவி. அவருடைய மாணாக்கர் பராங்குசதாசர் என்பவர். அவரே திருக்குருகூர் வந்த நாதமுனி களுக்குத் தம் குரு பாடிய நம்மாழ்வார் தோத்திரமாகிய கண்ணி நுண் சிறுத்தாம்பு என்ற பாசுரம் பத்தையும் கற்பித்து அதை அனுசந்தித்து நாதமுனிகள் நம்மாழ்வாரைத் தம் யோகத்தில் காணும் உபாயம் காட்டியவர். நாதமுனிகள் இவ்வாறு நேரே நம்மாழ்வாரை ஆசாரியராய்க் கொண்டவர் என்று சொல்லப் படுவார், நாதமுனிகள் வழியாக ஆசாரிய பரம்பரை தொடர் கிறது. குரு பரம்பரைக்கு வணக்கம் செய்வது வைணவ மரபு. வைணவர்கள் குரு வணக்கம் சொல்லும் போது சம்பிரதாயப் படி, 'லஷ்மிநாதன் தொடக்கமாய் இடையில் நாதமுனி யாமு னர் (நாத முனிகளின் பேரர்) ஆகியோரைக் கொண்டு, எனது ஆசாரியர் வரை வந்துள்ள குரு பரம்பரையை வணங்குகின்றேன்'* என்று சொல்வது மரபு. நாதமுனிகளின் பின் குரு சீடர் முறையில் உய்யக் கொண்டார். மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, இராமானுசர் என்பது ஆசாரியக்கிரமம். (இராமானுசரால் வைணவம் இராமானுச தரிசனம் என்ற பெயர் பெற்றது). இந்தக் கிரமத்தை வேதாந்த தேசிகர் தமது அதிகார சங்கிரகத்துள் ஒரு பாடலால் விளக்கியுரைக்கிறார்:

---

* லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் அஸ்மத் ஆசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் என்பது குருவணக்கச் சுலோகம்.

என்னுயிர்தந் தளித்தவரைச் சரணம் புக்கு
யானடைவே அவர்குருக்கள் நிரைவ ணங்கிப்
பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணக்கால் நம்பி,
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக் கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனை நாதன்
இன்னமுதத் திருமகள்என் றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே.

ஆழ்வார்களில் கடைசியாக வந்த நம்மாழ்வார் ஆசாரியருள் முதல்வர். இவருடைய ஆசாரியர் சேனை நாதன், சீடர் மதுர கவியும் நாத முனிகளும்.

ஆழ்வார்களையெல்லாம் நம்மாழ்வாருக்கு அவயவங் களாக அமைத்து, இவரை அவயவியாகச் சொல்வதில் வைணவப் பெரியாருக்கு ஒரு மகிழ்ச்சி. இவருடைய திருமுடிஸ்தானம் நம்பெருமாள்; சிரசு பூதத்தாழ்வார்; நேத்திரஸ்தானம் பொய்கை பேயாழ்வார்கள். திருமுக மண்டலம் பெரியாழ்வார்; கண்டம் திருமழிசையாழ்வார்; திருக்கைகள் குலசேகராழ்வாரும் திருப் பாணாழ்வாரும்; மார்பு தொண்டரடிப் பொடி; நாபிக்கமலம் திருமங்கை மன்னன்; திருவடிகள் மதுரகவியும் நாதமுனிகளும் - என்று உரைப்பர். நம்மாழ்வார் வாய்மொழி மறை (நான்கு வேதம்) என்றும், திருமங்கையாழ்வார் பாசுரம் அதற்கான ஆறங்கம் என்றும் மணவாள மாமுனி கூறுவார். (பெரிய திருமொழி, திரு எழு கூற்றிருக்கை, பெரிய திருமடல், சிறிய திருமடல், திரு நெடுந்தாண்டகம், திருக்குறுந்தாண்டகம் என இவை ஆறாக இருத்தலும் காண்க.) வேறிடத்தில் விளக்கிச் சொல்லியபடி திருவாய் மொழி என்ற தமிழ் வேதத்தைச் சொன்னவர் நம்மாழ் வார். ஏனைய ஆழ்வார் பாசுரங்களைப் பொதுவாக வேதம் என்று சொல்லியபோதிலும், இவருடைய பாசுரங்களையே சிறப்பாய் வேதம் என்பது மரபு. வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத் தவரே ஆசாரியருள் முதல்வர் என்பதும் பொருந்துவதே.

இவர் எந்தத் தலத்துக்கும் யாத்திரை செல்லவில்லை என்பர்; ஆயினும் 36 தலங்களைப் பாடியிருக்கிறார்; இது பற்றிப் போலும், திவ்விய தேசத்து எம்பெருமான்கள் இவருக்குத் திருக்குருகூரிலேயே எழுந்தருளிக் காட்சி தந்தார்கள் என்றும் வரலாறு எழுந்தது.

## நம்மாழ்வார் பெயர்கள்

ஆழ்வாருக்கு மாறன், காரிமாறன், சடகோபன், பராங்குசன், மகிழ்மாறன், வகுளாபரணன் முதலான பெயர்கள் வழங்கும். திருக்குருகூரில் பிறந்தமையால் திருக்குருகூர் நம்பி, குருகைப் பிரான். இவர் பிறந்த பெரும் பேற்றினாலேயே அவ்வூரும் ஆழ்வார் திருநகரியாயிற்று; அப்பெயரே இன்றும் வழங்குகிறது. பிற்காலத்தில் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு புலவரை, 'நம் சடகோபனைப் பாடினையோ'* என்று நம் பெருமாள் விஞ்சிய ஆதரத்தாற் கேட்ப' என்று பின்புள்ளார் கொண்டாடுவார். இவ்வாறு நம்மாழ்வார் என்று அபிமானித்து விசேஷ கடாட்சம் செய்யப்பட்டு மற்றை ஆழ்வார்களினும் உயர்வு பெற்றதனால் நம்மாழ்வார் என்னும் திருப்பெயர் பெற்றார். இவர் தெய்வக் குழவியாக இருந்த காலத்தே உலக நடைக்கு நேர்மாறாக இருந்தமையால் மாறன் என்றும், காரியார் புதல்வராதலால் காரி மாறன் என்றும், வழங்கப் பெற்றார். (மாறன் பாண்டியனது பெயர்களில் ஒன்று. இவர் முன்னோர் பாண்டிய மன்னரிடம் சிறப்புப் பெற்ற தலைவராயிருந்தமையால் இப்பெயர் தரித்துக் கொண்டார்கள்). கர்ப்பத்திலிருக்கும் பொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனது பரிசத்தால் அஞ்ஞானத்திற்கு உள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணி விடும் தன்மையதான சடம் என்னும் வாயு இவரையும் பிறந்த பொழுது தொடுதற்கு வர, அப்பொழுது இவர் அதனை ஹுங்காரத்தால் ஒறுத்து ஓட்டி ஒழித்ததனால், இவருக்கு **சடகோபர்** என்று திருநாமமாயிற்று. இவர் திருவாய்மொழி அருளிச் செய்த பின், தம்மிடம் திருவுள்ளமுவந்து குருகூர்ப் பொலிந்து நின்ற பிரான் பிரசாதித்தருளின மகிழமலர் மாலையைத் தரித்ததனால், மகிழ் மாறர், வகுளா பரணர் என்று பெயர்கள் வழங்கின. (வகுளம்-மகிழ்.)

வண்குரு கூர் நகரான்
நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன்
மாறன் சடகோபன். **3340**

என்று அவர் தம்மைக் குறிப்பிட்டிருப்பதும் காண்க.

---

* சடகோபர் அந்தாதியின் வரலாறு, எமது தமிழ் இலக்கிய வரலாறு, 12ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

பிற மதங்களாகிய யானைகளைத் தமது பிரபந்தங்களிற் கூறிய தமது சமய தத்துவார்த்தங்களாற் செருக்கடக்கி அவற் றுக்கு அங்குசம் போலிருந்தமையால் இவருக்குப் பராங்குசர் என்ற திருநாமம் வந்தது. பிரபத்தி மார்க்கத்தைப் பின்பற்றும் வைணவரும் அனைவருக்கும் இவர் தலைவர் என்று கருதிய மையால் இவருக்குப் பிரபன்ன ஜன கூடஸ்தர் என்ற ஒரு பெயரும் உண்டு; பிரபன்னன் - கடவுளே சரணாக உள்ளவன்; கூடஸ்தன் - மூல புருஷன்.

இப்படி ஒப்புயர்வற்ற இந்த ஆழ்வார் எம்பெருமானுடைய திருவடிகளுக்கு மிகவும் அந்தரங்கராயிருந்த படியால் பெரு மானது பாதுகை ஸ்ரீசடகோபன் (சடாரி) என்று இவர் திரு நாமத்தை வைத்தே வழங்கப் பெறுகிறது; திருமால் திருவடி களைப் பக்தர்களுடைய சிரசில் வைத்து ஆசீர்வதிப்பதற்கே 'சடகோபம் சாத்துதல்' என்று பெயராகி திருமால் ஆலயங்கள் அனைத்திலும் இன்றும் வழக்கத்தில் இருக்கிறது.

### வரலாற்று நூல்கள்

16ஆம் நூற்றாண்டில் திருக்குருகைப் பெருமாள் கவிராயா செய்த பெருநூலாகிய திருக்குருகை மான்மியம், தலவரலாறு கூறிய போதிலும் கூட, நம்மாழ்வார் வரலாற்றை விவரித்துரைக் கும் நோக்கமே உடையது; ஆனால் இந்நூல் முழுமையும் கிடைக்க வில்லை; ஒரு பகுதி தான் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளது. சென்ற நூற்றாண்டில் தேவேச பாரதிகள் (தேவராஜ ஐயங்கார்) நம்மாழ் வார் வரலாற்றை 15 படலங்களும் 119 பாடல்களும் கொண்ட சடகோப திவ்விய சரிதம் என்ற பெரு நூலாகப் பாடினார்.

மகிழ்மாறன் திருவவதாரச் சரிதை* என்று ஒரு சிறு நூல் ஏட்டு வடிவத்திலேயே காணப்படுகிறது. அதன் ஆசிரியர்

---

* மாறன் திருவவதாரச் சரிதை அச்சிடப்பட்டதாகத் தெரியவில்லை. அதுபற்றியே ஏட்டில் கிடைத்த செய்யுட்களின் அருமை கருதி இங்கு தரப்படுகின்றன. இச்சரிதை குருகைமான்மியத்தில் காணாத பகுதியாயிருக்கலாமோ என்ற ஐயம் எழுகிறது. சரிதையில் ஒரு பகுதியே மேலே தரப்பட்டுள்ளது. பிற்காலப் பிள்ளைத் தமிழுக்கும் இங்குக் காட்டிய பாடற் பகுதிக்கும் வேற்றுமையுண்டு. கண்மலர் மலர்த்தல், கனிவாய் திறத்தல், சும்மம் பருகுதல், தொட்டிலாடுதல் ஆகிய பகுதிகள் பிள்ளைத் தமிழில் காணப்படா. அங்கு காணப் படும் சிறுதேர் சிற்றில் சிறுபறை மூன்றும் இங்கு இல்லை.

நம்மாழ்வார் அவதாரத்தை மட்டும் புனைந்துரைக்க வந்தார். குழந்தை திருப்புளியின் கீழ் எழுந்தருளியதைச் சொன்னவுடனே, அவர் அக்குழந்தை மீது மேலும் பாட ஆசை கொள்ளுகிறார். அப்போது குழந்தையை, பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்தின் பருவங்கள் அமைந்துள்ள முறையில், வாழ்த்துகிறார்:

அங்கண் வழுதிவள நாடர்குலத் தாரமுதாம்
எங்கள் பெருமானை எம்பெருமான் காக்கவே!
ஏனோர்க்கும் பெம்மானை எம்பெருமான் காக்கவே!

அந்தா மரைபோன் றலர்ந்த திருமுகத்தெம்
மைந்தா திருக்கண் மலரை மலர்த்துகவே!
மாறா திருக்கண் மலரை மலர்த்துகவே!

பெற்றபசு மஞ்சட் பொடிநாவின் மேற்றடவக்
கற்றவர்தம் கண்ணே கனிவாய் திறந்தருளே!
காரிதரு மாறா கனிவாய் திறந்தருளே!

இருமைக்கும் எம்முயிர்பே ரின்பமுறத் தந்த
அருமைப் புதல்வாஎன் னம்ம பருகவே!
ஆரா அமுதேஎன் னம்ம பருகவே!

முத்திக்கு வித்தாம் முதற்கனியைக் கண்டுளத்தே
தித்திக்குந் தெள்ளமுதே செங்கீரை யாடுகவே!
செஞ்சொற் றமிழ்க்கரசே செங்கீரை யாடுகவே!

சேமத்தால் வந்துதித்தாய் சேயமகிழ் மாறனென்னும்
தாமத்தாய் நாமத்தாய் தாலேலோ தாலேலோ!
தத்துவஞா னப்புதல்வா தாலேலோ தாலேலோ!

யானென் றெனதென் றிழிந்தார்க் கிடியேறு
தானென் றவதரித்தாய் சப்பாணி கொட்டுகவே!
தாட்டா மரைக்கரத்தாற் சப்பாணி கொட்டுகவே!

புதல்வா குறுங்குடிவாழ் புண்ணியா புத்தேளிர்
முதல்வா மழலையின்வாய் முத்தந் தருகவே!
மூரல் எழுப்பியுன்வாய் முத்தந் தருகவே!

விண்ணிற்கும் வித்தாம் விதியுடையாய் ஈண்டினியிம்
மண்ணிற்கு வித்தாக வாழ்வே வருகவே!
மாணிக்கக் கிண்கிணித்தாள் வாழ்வே வருகவே!

பேதித்த ஒன்பதுடன் பின்பொருப தாயுதித்த
ஆதிச் சுடரிவனோ டாடவா அம்புலியே!
அன்பருயிர் காணிவனோ டாடவா அம்புலியே!

அழுதகண்ணீர் மாற்ற அருள்புரிந்தே வந்த
வழுதிவள நாடா மணித்தொட்டில் ஆடுகவே!
வண்குருகூர் மாறா மணித்தொட்டில் ஆடுகவே!

வரும் பொருநைத் துறையாடப் பெறுவேனாகில்
வடமூலைக் கருடனடி பணிவேனாகில்,
அரும்பு மணிக் கோபுரத்துட் புகுவேனாகில்,
ஆதிநா தன்சரணந் தொழுவே னாகில்,
விரும்பு திருப்புளிநீழல் வலமாய் வந்துன்
மெய்ஞ்ஞான முத்திரைக்கை காண்பேனாகில்,
தரும் புவியில் இப்பிறப்பே வேண்டுகின்றேன்
சடகோபா யதிராசன் தம்பிரானே.

குருபரம்பரா ப்ரபாவங்கள் (மணிப்பிரவாளம்) யாவுமே நம்மாழ்வார் வரலாற்றைக் கூறுகின்றன. அன்றி முன்கூறிய வடிவழகிய நம்பி தாம் பாடிய குரு பரம்பராப் பிரபாவம் (செய்யுள் நூல்), அரிசமய தீபம் ஆகியனவும் இங்கு சொல்லத்தக்கன. சமீப காலத்தில் புலவர் புராணமுடையாரும் 37 செய்யுட்களால் சடகோபர் சரிதத்தைக் கூறுகிறார். இவையாவும், பின்பழகிய பெருமாள் ஜீயருடைய குருபரம்பரையை அடிப்படையாக வைத்துப் பெருக்கியனவே.

## நம்மாழ்வாரைப் புகழும் நூல்கள்

பிற்காலத்தில் வந்த பெரியோர், இலக்கியத் துறையில் எந்தெந்த வழியில் பிரபந்தம் பாடி நம்மாழ்வாரைச் சிறப்பிக்கலாமோ அத்தனை வழிகளிலும் இவரைச் சிறப்பித்திருக்கிறார்கள்.

### மதுரகவி

மதுரகவியாழ்வார் பாடிய கண்ணி நுண் சிறுத்தாம்பு இவரையே பாடி அந்த ஒரே சிறப்பினால் நாலாயிரத்துள் சேர்க்கப் பெறும் பேறுபெற்றது.

நாவி னால்நவிற் றின்பம் எய்தினேன்;
மேவி னேன் அவன் பொன்னடி மெய்ம்மையே;

தேவு மற்றறியேன்; திருக்குரு கூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவனே.

என்று அவர் பாடினார்.

### சடகோபரந்தாதி

12ஆம் நூற்றாண்டில் தோன்றிய சடகோபரந்தாதி மிகச் சிறந்த இலக்கிய நயம் வாய்ந்த ஒரு நூல். இராமானுசர் மீது அமுதனார் பாடிய அந்தாதி பிரபன்ன காயத்திரி என்று கொண்டாடப் பெற்று இராமானுசராலேயே நாலாயிர மொத்த பெருஞ் சிறப்பளித்து அதன் பகுதியாகவே கொள்ளும்படி நியமிக்கப் பெற்றது. சடகோபரந்தாதி அவர் காலத்தில் எழவில்லை போலும். எழுந்திருந்தால் இதையும் அவ்வாறு சிறப்பித்திருத்தல் கூடும். இதைச் செய்தவர், கம்பர் என்று இராமாயணக் கம்பர் பெயரைத் தாங்கி வாழ்ந்த ஒரு புலவர் என்பது வரலாறு.* திருவாய்மொழி எந்த எந்தத் துறைக்கெல்லாம் சிறப்புத் தருகிறது என்று ஒரு பாடலில் அழகாகச் சொல்லுகிறார்.

ஆயிரம் மாமறைக் கும்அலங்காரம், அருந்தமிழ்க்குப்
பாயிரம், நாற்கவிக்குப் படிச்சந்தம், பனுவற்கெல்லாம்
தாய், இரு நாற்றிசைக்குத் தனித்தீபம் – தண்ணங்குருகூர்ச்
சேய், இரு மாமரபுஞ் செவ்வியான், செய்த செய்யுட்களே.

மற்றொரு பாடலும் இங்கு நினைவு கூரத்தக்கது. 'திருமாலுக்குப் பிற செல்வங்கள் சேர்ந்ததால் சிறப்பில்லை; ஆயிரம் நாமம், ஆயிரம் முடி, ஆயிரம் தார் - எல்லாம் இருப்பினும் சடகோபருடைய கவி ஆயிரம் பெற்றதே பெருஞ்சிறப்பு' என்ற பொருளில் ஒரு பாடல் கூறுகிறது.

சேராதனஉள வோதிருச் சேர்ந்தார்க்கு? வேதஞ்செப்பும்
பேரா யிரம், பொன் முடியா யிரம் நறை பெய்துளவத்
தாரா யிரம் – நம் திருக்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
ஆரா அமுதக் கவியா யிரம், அவ் அரியினுக்கே.

ஆயிரம் என்றிவர் இங்கு அடுக்கிச் சொல்லும் கருத்து திருவாய்மொழியில் நம்மாழ்வாரே சொல்லும் அடுக்காகும்.

---

* இப்புலவர் அரங்கத் தமுதனாரைப் போல ஒரு ஸ்ரீ வைணவரா யிராமை இந்நூலுக்குச் சிறப்பான அங்கீகாரம் கிடைக்காமைக்கு ஒரு காரணமாயிருத்தலுங் கூடும்.

தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பத்
தந்தபேர் உதவிக் கைம்மாறாத்
தோள்களை ஆரத் தழுவி, என் உயிரை
அறவிலை செய்தனன் – சோதீ!
தோள்கள் ஆயிரத்தாய், முடிகள் ஆயிரத்தாய்,
துணைமலர்க் கண்கள் ஆயிரத்தாய்,
தாள்கள் ஆயிரத்தாய், பேர்கள் ஆயிரத்தாய்,
தமியனேன் பெரிய அப்பனே!

சடகோபரந்தாதியில் சம்பிரதாயச் சிறப்புள்ள ஒரு பாட்டு பின்வருவது:

வேதத்தின்முன்செல்க, மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன்முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின் முன்செல்க, குணங்கடந்த
போதக் கடல்எம் குருகூர்ப் புனிதன் கவியின் ஒரு
பாதத்தின் முன்செல்லு மோ, தொல்லை மூலப் பரஞ்சுடரே?

இப்பாடல் உற்சவத்தின் போது நம்பெருமாள் திருமுன்னர் திவ்வியப் பிரபந்தம் அனுசந்திக்கப்படுவதற்கும், அவர் பின்னரே வேதம் ஓதப்படுவதற்கும் ஆதாரம் என்பர் பெரியோர். 'கோயில்களில் உத்ஸவம் கண்டருளும் போது எம்பெருமான் நடுவே எழுந்தருள வடமொழி வேதம் எம்பெருமானது குணங் களைப் பேசத் தொடங்கி அவற்றின் முடிவு தனக்கு எட்ட முடியாமல், 'யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸாஸஹ' என்று களைத்துப் போய்ப் பின்னும் அப்பெருமானை நாடிச் செல்வதற்கு அறிகுறியாக எம்பெருமானுக்குப் பின்னே பாராயணஞ் செய்யப்பட்டும், மயர்வற மதி நலம் அருளப் பெற்ற ஆழ்வார்களின் திவ்ய ஸூக்தியான தமிழ் வேதமாகிய திவ்வியப் பிரபந்தம் அப்பெருமானது ஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்து அவனை ஸாக்ஷாத்கரித்து வடமொழி வேதத்துக்கு முற்பட்டமை தோன்ற அப்பெருமானுக்கு முன்னே பாராயணஞ் செய்யப்பட்டும் வருகின்றன'. இதை வேதாந்த தேசிகரும் வட மொழி நூல்களில் சொல்லியிருக்கிறார்.

இப்பாடலில் தமிழுக்குச் சமஸ்கிருதத்திலும் பார்க்க ஏற்றம் கொடுத்தது போலவே, மற்றொரு பாடலும், சமஸ்கிருத வேதத்தினும் தமிழ்வேதம் ஏற்றமுடையது என்று சூளுரைத்துச் சொல்கிறது.

சாதிக்கு மேபர தத்துவத் தை, சம யத்திருக்கைச்
சேதிக்கு மே, ஒன்று சிந்திக்கு மே, அதனைத் தெரியப்

போதிக்குமே, எங்குமோங்கிப் பொதுநிற்கும் மெய்யைப் பொய்யைச்
சோதிக்குமே உங்கள் வேதம்எங் கோன்தமிழ்ச் சொல்லெனவே?

அக்காலத்தில் தமிழில் வைணவர் எவ்வளவு வீறுகொண்டிருந் தார்கள் என்று இப்பாடல் மிக நன்றாய் உணர்த்துகிறது.

### திரு அரங்கத்தமுதனார்

தம் இராமானுச நூற்றந்தாதியுள் பலமுறை நம்மாழ்வாரைப் போற்றுகிறார் (பாடல்கள் 18, 19, 20, 29, 46, 54, 60, 64). சில பாடல்களை இங்கு நினைவு கூரலாம்.

எய்தற் கரிய மறைகளை ஆயிரம் இன்தமிழால்
செய்தற் குலகில் வரும்சட கோபனைச் சிந்தையுள்ளே
பெய்தற் கிசையும் பெரியவர் சீரை உயிர்களெல்லாம்
உய்தற் குதவும் இராமா னுசன்எம் உறுதுணையே. 18

கூட்டும் விதியென்று கூடுங்கொ லோதென் குருகைப்பிரான்
பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ் தன்னைத்தன் பத்தியென்னும்
வீட்டின்கண் வைத்த இராமா னுசன்புகழ் மெய்யுணர்ந்தோர்
ஈட்டங்கள் தன்னைஎன் நாட்டங்கள் கண்டின்பம் எய்திடவே.

நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன, நாரணனைக்
காட்டிய வேதம் களிப்புற்றது, தென் குருகைவள்ளல்
வாட்டமி லாவண் தமிழ்மறை வாழ்ந்தது, மண்ணுலகில்
ஈட்டிய சீலத்து இராமா னுசன்தன் இயல்வுகண்டே. 54

### மணவாள மாமுனிகள்

திருவாய் மொழியைப் பயின்று அதனால், பிள்ளை லோகாசாரியரின் சீடராயிருந்த திருமலையாழ்வார் என்பவர் அவருக்கடுத்த ஆசாரியராகித் திருவாய்மொழிப் பிள்ளை என்று பெயர் பெற்றிருந்தார். இவர் சீடரும் பின்னர் தென் கலையில் சிறப்பான ஆசாரியருமாயிருந்த மணவாள மாமுனி திருவாய் மொழியினிடத்து மிக்க ஈடுபாடுடையவராயிருந்தது இயல்பே யாகும். திருவாய்மொழியின் பதிகங்களான நூறு திருவாய் மொழியிலும் முதற் பாட்டின் தொடக்கத்தையும் பதினோராம் பாட்டின் இறுதியையும் ஒவ்வொரு வெண்பாவின் முதலாகவும் இறுதியாகவும் அமைத்து இவர் நூறு வெண்பாப் பாடினார். இது திருவாய்மொழி நூற்றந்தாதி என்று பெயர் பெறும். அடுத்து இதற்கு வியாக்கியானம் செய்த பிள்ளைலோகம் ஜீயர் இது பற்றிச் சொல்லிய கருத்து, இவ்வந்தாதியின் அமைப்பை

நன்கு விளக்கும். 'இது வெண்பாவில் அமைந்திருப்பது நூலுக்கே ஒரு தளை. இரண்டாவது, பாடல் தோறும் ஆழ்வார் பெயரை அமைத்துப் பாடுகிறது. ஆழ்வாரின் ஒவ்வொரு திருமொழிக்கும் ஒரு பாடல் வீதம் செய்யப் பெற்றுள்ளது மூன்றாவது தளை. திருமொழியின் முதல் பாடலின் தொடக்கமும், இறுதிப் பாடலின் இறுதிச் சொல்லும், ஒவ்வொரு வெண்பாவின் தொடக்கச் சொல்லாகவும் இறுதிச் சொல்லாகவும் அமைக்கப் பெற்றுள் ளன: இது நான்காவது தளை. அன்றியும் அவ்வத் திருமொழி யின் சாரமான கருத்தை முறையே ஒவ்வொரு வெண்பாவும் சொல்லி வருகிறது: இது ஐந்தாவது தளை. இவ்வாறு ஐந்து நிர்ப்பந்தங்கள் இந்த அந்தாதிக்கு உள்ளன.'

இவ்வாறு திருவாய்மொழிக்கு ஏற்பட்ட சிறப்பு வைணவத் திலோ சைவத்திலோ வேறெந்த நூலுக்கும் ஏற்படவில்லை. மணவாள மாமுனிகள் செய்த உபதேச ரத்தினமாலையில் நம்மாழ்வார் பிறந்த வைகாசி விசாகத்தைப் பின்வருமாறு போற்றுகிறார்.

**ஏரார்வை காசி விசாகத்தின் ஏற்றத்தைப**
**பாரோர் அறியப் பகர்கின்றேன் – சீராரும்**
**வேதம் தமிழ்செய்த மெய்யன் எழில்குருகை**
**நாதன் அவதரித்த நாள்.**

**உண்டோ வைகாசி விசாகத்துக் கொப்பொருநாள்?**
**உண்டோ சடகோபர்க் கொப்பொருவர்? – உண்டோ**
**திருவாய் மொழிக்கொப்பு? தென்குருகைக் குண்டோ**
**ஒருபார் தனிலொக்கும் ஊர்?**

**தனியன்கள்**

பிற்காலத்தில் வைணவ சமயப் பெரியார், திவ்வியப் பிரபந்தச் சுவையீலீடுபட்டு அவற்றைப் புகழ்ந்து பாடிய சிறப்புப் பாயிரம் போன்ற சுவைமிக்க பாடல்கள் தனியன் என்று வைணவ மரபில் சொல்வதுண்டு. அவை பெரும்பாலும் அச்சமய ஆசா ரியர் செய்தனவாகவே இருக்கும். அவற்றைத் தொகுத்து இங்கே தருகிறோம். திரு விருத்தம், திரு ஆசிரியம், பெரிய திருவந்தாதி ஆகியவற்றுக்குரிய தனியன்கள், அந்நூல்களை ஆராய்ந்த இடத்துச் சொல்லப்பட்டன. பாடல்கள் முறையே கிடாம்பியாச்சான், அருளாளப் பெருமாளெம்பெருமானார்,

எம்பெருமானார் செய்தவை. பின்வருபவை திருவாய் மொழிக் குரியவை. நாதமுனிகள் செய்த தனியன், வடமொழி:

பக்தாம்ருதம் விச்வ ஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோப வாங்மயம்
ஸஹஸ்ர சாகோப நிஷத் ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிட வேத சாகரம்.

பக்தர்க்கு அமுதமாய் மக்களனைவரும் விரும்பியேற்பதாய்ச் சகல அர்த்தங்களையும் அளிப்பதாய் ஆயிரமாகப் பணைத்த உபநிடதங்களோடு கூடியதாய் ஸ்ரீ சடகோபருடைய வாக்குக் களாலான தமிழ் வேத சாகரத்தை நான் வணங்குகிறேன்'.

ஆன்றோர் இத்தனியன் பொருளில் மிகவும் ஈடுபட்டு நாத முனிகள் இங்கு ஆழ்வாருடைய திருவாய் மொழியை ஐந்து விதங்களில் கடலுடன் ஒப்பிட்டுச் சொல்லியிருக்கிறார் என்று விளக்குவதுண்டு. பக்தாம்ருதம் - கடலானது தேவர்களுக்கு அம்ருதம் வழங்கியது போல, திருவாய்மொழியும் பக்தர்களுக்கு ஆரா அமுதினை (ஆரா அமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே என்ற பாடலை நினைவு கூர்க) வழங்குகின்றது. விச்வ ஜநாநு மோதநம் கடல்போலக் காணக் காணத் தெவிட்டாத மகிழ்ச்சியைத் தருகின்றது. ஸர்வார்த்ததம் - கடலில் உள்ள பொருள் அளவிட்டுக் காண முடியாதது போலவும் புகுந்து குடைவார்க்கு எல்லையில்லாமல் முத்தையும் பவழத்தையும் இரத்தினங்களையும் அளிப்பது போலவும், இது எல்லையற்ற தத்துவப் பொருள்களைத் தன்னுள் அடக்கி வைத்திருந்து, பயில்வார் ஆற்றலுக்கேற்ப அரிய அர்த்த விசேஷங்களைத் தந்து கொண்டேயிருக்கிறது. ஸ்ரீ சடகோப வாங்கமயம் - கடலானது உள்ளங்கையில் எடுத்து அகத்தியரால் பருகப்பட்டு மீண்டும் அவர் வாயிலிருந்து வெளிப்பட்டது போல வேதமானது சட கோபர் வாக்கிலிருந்து மீண்டும் தமிழ் வேதமாக வெளிப்படு கின்றது. ஸகஸ்ர சாகோபநிஷத் ஸமாகமம் - கடல் பல நாடு களைச் சூழ்ந்து இருப்பதாலும், ஆறுகள் அடித்துக் கொண்டு போடுகின்ற மரம் முதலியவற்றாலும் பல கிளைகளைக் கொண்டிருப்பது போல, திராவிட வேத சாகரமாகிய திருவாய் மொழியும் பலசாகைகளை (கிளைகளைத்) தன்னகத்தே கொண் டிருக்கிறது நமாமி அஹம் திராவிட வேத சாகரம் - தமிழ் வேதக் கடலாகிய திருவாய் மொழியை நான் நமஸ்கரிக்கிறேன் பாலோடு அமுதன்ன ஆயிரத்து இப்பத்தும் (3736) என்றும்,

அமுதுண்ணச் சொன் மாலைகள் சொன்னேன் என்றும் ஆழ்வாரே பாடுவதும் இங்குக் கருதத்தக்கது.

*ஈசுவர முனிகள் (நாதமுனிகள் புதல்வர், ஆளவந்தார் தந்தை) பாடியது:*

திருவழுதி நாடென்றும், தென்குருகூ ரென்றும்
மருவினிய வண்பொருநல் என்றும் – அருமறைகள்
அந்தாதி செய்தான் அடியிணையே எப்பொழுதும்
சிந்தியாய், நெஞ்சே தெளிந்து.

*சொட்டை நம்பி (ஆளவந்தார் புதல்வர்) பாடியது:*

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்
இனத்தாரை யல்லா திறைஞ்சேன் – தனத்தாலும்
ஏதும் குறைவிலேன், எந்தை சடகோபன்
பாதங்கள் யாமுடைய பற்று.

*அனந்தாழ்வான் (இராமானுசரின் சீடர்) பாடியது:*

ஏய்ந்த பெருங்கீர்த்தி இராமா னுசமுனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன் – ஆய்ந்தபெரும்
சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும்
பேராத உள்ளம் பெற.

*பட்டர் அருளியது:*

வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ்மறைக ளாயிரமும் – ஈன்ற
முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த
இதத்தாய் இராமானு சன்.

*இவர் செய்த 'மிக்க இறை நிலையும்' என்ற பாடலை 3ஆம் பக்கத்தில் காண்க. ஆழ்வார் வரிசையிலும் ஆசாரியர் வரிசையிலும் இவருடைய வாழித் திருநாமங்கள் காணப்படும். (செய்தவர் அப்புள்ளார்) இரண்டும் முறையே பின்வருவன:*

ஆனதிருவிருத்தம் நூறு அருளினோன் வாழியே
ஆசிரியம் ஏழுபாட்டு அளித்தபிரான் வாழியே
ஈனமில் அந்தாதி எண்பத் தேழீந்தான் வாழியே
இலகுதிரு வாய்மொழியா யிரத்தொருநூற் றிரண்டு
ரைத்தான் வாழியே

வானணியும் மாமாடக் குருகை மன்னன் வாழியே
வைகாசி விசாகத்தில் வந்துதித்தோன் வாழியே
சேனையர்கோன் அவதாரம் செய்தவள்ளல் வாழியே
திருக்குருகைச் சடகோபன் திருவடிகள் வாழியே.

மேதினியில் வைகாசி விசாகத்தோன் வாழியே
வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்தான் வாழியே
ஆதிகுரு வாய்ப்புவியில் அவதரித்தான் வாழியே
அனவரதம் சேனையர்கோன் அடிதொழுவோன் வாழியே.

நாதனுக்கு நாலா யிரமுரைத்தான் வாழியே
நன்மதுர கவிவணங்கும் நாவீறன் வாழியே
மாதவன்பொற் பாதுகையாய் வளர்ந்தருள்வோன் வாழியே
மகிழ்மாறன் சடகோபன் வையகத்தில் வாழியே.

### வேதாந்த தேசிகர்

தமது அதிகார சங்கிரகம் முதல் பாடலில் ஆழ்வார்கள் பாடிய பாடல்களே தமக்கு வேதத்தில் தெளியாத பொருள்கள் எல்லாம் தெளியச் செய்தன என்று சொல்லுகிறார்: 'இவர்கள் மகிழ்ந்து பாடும் செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே'. பிரபந்தசாரம் என்ற நூலில் ஆழ்வார்கள் செய்த நூல்களையும் பாடல் தொகையையும் கூறுமிடத்து, நம்மாழ்வார் பாடல்களைப் பின்கண்டபடி தேசிகர் தொகுத்துச் சொல்லுகிறார்.

முன்னுரைத்த திருவிருத்தம் நூறு பாட்டும்
முறையில்வரும் ஆசிரியம் ஏழு பாட்டும்
மன்னியநற் பொருட்பெரிய திருவந் தாதி
மறவாத படியெண்பத் தேழு பாட்டும்.

பின்னுரைத்த தோர்திருவாய் மொழியெப் போதும்
பிழையறஆ யிரத்தொருநூற் றிரண்டு பாட்டும்
இந்நிலத்தில் வைகாசி விசாகந் தன்னில்
எழிற்குருகை வருமாறா, இரங்கு நீயே.

இங்கு தேசிகர், ஆழ்வார் நூல் ஒவ்வொன்றிலும் எத்தனை பாடல் என்று சுட்டிச் சொல்வது காணத்தக்கது.

### தனிப்பாடல்கள்

ஏட்டுச் சுவடிகளில் எண்ணற்ற தனிப் பாடல்கள் நம்மாழ்வாரைப் புகழ்வனவாகக் காணப்படும். இவற்றைத் தொகுத்தால்

*சுவையான ஒரு திரட்டு கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. இக்கட்டுரை முகப்பில் தந்துள்ள 'தேனறா மகிழ்த் தொடையலும் மவுலியும்' என்பதும் அத்தகையதொரு பாடலே; தென் பாண்டி நாட்டில், ஏறக்குறைய எல்லா ஏடுகளின் முகப்பிலும் இது எழுதப்பட்டுள்ளது என்றால் மிகையல்ல. ஆசிரியர் மிகவும் உருகி இப்பாடலைப் பாடியிருக்கிறார். மேலும் சில கீழே காணலாம்.*

பாடுவ தெல்லாம் பராங்குசனை நெஞ்சத்தால்
தேடுவ தெல்லாம் புளிக்கீழ்த் தேசிகனை – ஓடிப்போய்க்
காண்பதெல்லாம் நங்கையிரு கண்மணியை, யான்விரும்பிப்
பூண்பதெல்லாம் மாறனடிப் போது.

*(நங்கை - ஆழ்வாருடைய தாயான உடைய நங்கையார்)*

பாராத கல்விப்ர பந்தப் பொருளனைத்தும்
நேராக முன்வந்து நிற்குமே – தேராது
தேவிறு கொண்ட திருமாலை முத்தமிழ்தேர்
நாவீற னைத்துதித்த நாள்.

*பராங்குச தாசர் பாடியது, தென்கலை இயல்சாத்து:*

திருநாடு வாழி, திருப்பொருநல் வாழி,
திருநாட்டுத் தென்குருகூர் வாழி – திருநாட்டுச்
சிட்டத தமர் வாழி, வாழி சடகோபன்
இட்டத்தமிழ்ப் பா இசை.

*'திருவரங்கருடைய கொற்றப் புயங்கள் சடகோபருடைய சொற்பெற்றுயர்ந்தன' என்பது பிள்ளைப் பெருமாளையங்காரின் கூற்று:*

அருமறை துணிந்த பொருள்முடிவை இன்சொல்
　　அமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பி
　　அருளிய சடகோபர் சொற்பெற் றுயர்ந்தன,
அரவணை விரும்பி அறிதுயில் அமர்ந்த
　　அணிதிரு அரங்கர் மணிதிகழ் முகுந்தர்
　　அழகிய மணவாளர் கொற்றப் புயங்களே!

*'இராமானுசதாசர்*

*பிற்காலத்தில் குரவை இராமானுசதாசர் என்பவர், வைணவத் திருப்பதிகள் 108க்கும் அருணகிரிநாதர் திருப்புகழ் போல ஒரு*

*திருப்புகழ் பாடியிருக்கிறார். இவர் குருகை நம்மாழ்வார் பதமலர் தொழுபவர் என்று தம்மைக் கூறிக்கொள்கிறார். இதனுள் பல இடங்களில் நம்மாழ்வார் திருவாய்மொழி பாடியதைக் குறிப்பிடுகிறார். நூலுக்குக் காப்பு நம்மாழ்வாருக்கே சொல்கிறார். திருப்பேர் நகர் திருப்புகழில் மறைநாலும் வடித்துத் தெளித்து ஆயிரம் பன்னுதமிழ் பாடிய பட்சத்தர் கத்தூரிப் பொட்டு அணிவோர் தொழு நெடுமாலே' என்கிறார். ஆனால் நம்மாழ்வார் பாடாத புள்ளம் பூதங்குடி, வண்புருடோத்தமம், திருத்தண்கால், திருப்பிரிதி என்ற ஊர்களுக்குப் பாடும்போது, நம்மாழ்வாரைப் புகழ்கிறார். 'வண்தமிழ் ஆயிரமும் செய்து உடல் பொய் என்கிறார் தம் திருவாய்மொழி கொண்டருளும் நெடுமாலே':*

புலவோர்க்கு வேதந் தமிழென வேசெய்
குருகூர்க் குள்வாழுந் திருமகிழ் மாறர்
புகழ்தீர்த் தனேபங் கயமுக சேவை யருள்வாயே.

மிகுத்த நான்மறை யினைவிந்தை யாகிய
தமிழ்ச்சொ லாயிரம் வடிகொண்ட நீடிரு
விருத்த நூறொடு தமிழந்த மாதிசெய் யொருநூலும்.

விளைத்த வாசிரி யமதென்ற வேழுமிவ்
விதத்தி லேயுரை செய்துநங்கை பாலகர்
விதித்த பாவெனு மணிதொங்கல்சூடிய நெடுமாலே.

வேரிவகு ளத்தொடைப் பிறங்க
ஞானமுழு முத்திரைக் கைகொண்ட
வீறர்குரு கைப்பதிக் கிலங்கு – மகிழ்மாறர்.

வேதமறை யைத்தனிப் பிரபந்த
மாயிரம்வ டித்தெடுத்த தொங்கல்
மேவுபிரி தித்தலத் தினின்ற – பெருமாளே.

*என்ற பகுதிகள் ஆழ்வார் புகழைக் கூறுவன.*

*பராங்குச நாடகம்*

*18ஆம் நூற்றாண்டின் முதல் கால் பகுதியில் வாழ்ந்த சேஷகவி என்பவர் நம்மாழ்வார் சரிதத்தை அகவல் விருத்தம் கண்ணி ஒரு சிந்து முதலான உறுப்புக்கள் அமைய நடிப்பதற்கான ஒரு நாடகமாய் எழுதினார். பிற்காலத்தில் கீர்த்தனம் என்று சொல்லுகிற அமைப்பிலும் கூட இதில் பாடல்கள் காணப்படு*

கின்றன. இந்நூல் ஆழ்வார் நாடகம் என்றும் பெயர் பெறும். இதன் 'உருப்படிகள்' 120. பாயிரப் பகுதியை அடுத்துள்ள 106 அடிகொண்ட அகவல் நம்மாழ்வார் வரலாற்றைச் சுருக்கி உரைக்கிறது. காரிப்பிரான் திருமணத்தில் தொடங்கி நம்மாழ்வார் நாதமுனிகளுக்கு நாலாயிரத்தையும் பிரசாதிக்கிற வரையிலுள்ள கதையை விரிவாகவே இந்நாடகம் கூறுகிறது. தாலாட்டு, குறத்தி வருகை, தன் மலைவளங் கூறல், வாசற் சிறப்பு முதலியன சிறப்பான பகுதிகள். தரு என்று பெயர் சூட்டப்பட்ட பகுதிகள் யாவும், பிற்காலக் கீர்த்தனம் போல, பல்லவி, அனுபல்லவி, சரணங்கள் என்ற உறுப்புக்களைப் பெற்றுள்ளன.

வையாபுரிப்பிள்ளை பரிசோதித்துப் பெரியன் சீனிவாசையங்காரால் 1945 இல் இந்நூல் அச்சிடப்பெற்றது.

## இலக்கண நூல்கள்

ஆழ்வார் பெயராலேயே மாறன் அலங்காரம், மாறன் அகப்பொருள், மாறன் பாப்பாவினம் என அணி பொருள் யாப்பு இலக்கண நூல்கள் திருக்குருகைப் பெருமாள் கவிராயரால் செய்யப் பெற்றிருந்தன. இவை மூன்றும் 16ஆம் நூற்றாண்டுக் குரியவை, தண்டியலங்காரத்தின் வழியே செய்யப்பட்ட விரிந்த நூல் மாறனலங்காரம். நூலாசிரியரின் மாணாக்கரே அவர் கருத்தை நன்குணர்ந்து விரிவான உரை எழுதியிருக்கிறார். உதாரணப் பாடல்கள் பல ஆசிரியரே செய்தார் என்று கருதத் தக்கன. ஒரு பாடல் சிறப்புடையது.

> தென்னம் பொதியந் தருபொருநைத் தென்கரையின்
> மன்னும் புளிக்கீழ் வளர்தரு வொன்று – இன்னமிர்தொத்து
> ஆன்றசுவைத் தீங்கனியோர் ஆயிரமும் தண்ணளிகூர்ந்து
> ஈன்றளித்த தன்பால் எமக்கு.

'மன்னும் புளி என்பது திருப்புளியாழ்வார். திருப்புளிக் கீழ் வளர் தருவாவது காரிமாறப்பிரான், இன்னமிர்து ஒத்து ஆன்ற சுவைத் தீங்கனி ஓராயிரமென்றது திருவாய்மொழி ஆயிரப் பாடல்'. மற்றோரிடத்தில் இவர், நம்மாழ்வார் சாம வேதத்தைத் தமிழ் செய்தார் என்று கூறுகிறார் (உதாரணப் பாடல் 181 உரை). 'முத்தமிழ் சித்தசித்தீச்சுரம் மூன்றும் கூறும் தமிழ்; அது திருவாய்மொழி' என்று எழுதுவதும் காணத்தக்கது.

அலங்காரத்தில் ஓரிடத்தில் இவர் நம்மாழ்வாருக்குத் தசாங்கம் கூறுகிறார்.

மறை முரசம், தாமம் மகிழ், வழுதிநாடர்
துறைபொருநை, வெற்பூர் துடரி – உறை குருகை
யஞ்சம் பராங்குசம் வெள்ளானை கொடியாணைமா
பஞ்சகலி யாணன் பரி.

என்பது வழுதிவள நாடர் துறை-பொருநை, வெற்பும் ஊரும் துடரியும் உறையுளாங் குருகாபுரியும்; பரி-பஞ்ச கலியாணன்; மா-வெள்ளானை; ஆணை-ஶீ பராங்குசம்; கொடி-அன்னம்; தாமம்-மகிழ்; முரசு-மறை என்றவாறு'.

இவரே இவ்வலங்காரத்துள் 51 அடிகொண்ட திருவெழு கூற்றிருக்கையும் பாடியிருக்கிறார் மற்றும் இரு பாடல்கள் சிறப்பாய்க் கருதத்தக்கன.

கைக்கணி ஒன் றீகை; கருத்திற்கணி ஞானம்;
மெய்ச்செவிகட் கேற்ற அணி மேதகுநூல் – உய்த்தறிதல்;
சென்னிக்கணி மாறன் சேவடிமேற் கொண்டிறைஞ்சல்;
என்னுக் கணி வே றினி?

முத்திரைக் கைம் மாறன் மொழிந்த தமிழ் வேதப்
புத்தமிர்தை உண்டின் புறுவேனைப் – பத்தர்காள்,
வேறுதமிழ் கேட்பிப்பான் வேட்குமனம் கேட்கிலதை
சீறும் என திண்பச் செவி.

### உரையாசிரியர்

வைணவராகிய பரிமேலழகர் தம் திருக்குறளுரையில் நம்மாழ்வார் பாசுரங்களைப் போற்றிக் கூறுவதில் வியப்பில்லை. குறளுரை, இறைமாட்சி என்ற அதிகாரத்தின் அவதாரிகையில், திருவுடை மன்னரைக் காணில் திருமாலே என்னும் என்று பெரியாரும் பணித்தார் என்று திருவாய் மொழிப் பாடலைக் காட்டுகிறார் (3271). 'பற்றற்ற கண்ணே' என்ற குறளுரையில் (349), அற்றது பற்றெனில்-உற்றது வீடு என்று எடுத்துக் காட்டுகிறார் (2914). 370-ஆரா இயற்கை என்று தொடங்கும் குறளுரையில்,

களிப்பும் கவர்வு மற்றும் பிறப்புப் பிணி மூப்பிறப்பு மற்று
ஒளிக்கொண்ட சோதியுமாய் உடன் கூடுவதென்றுகொலோ.

(3040) என்ற பாடலின் கருத்தை, 'களிப்புக் கவற்சிகளும் பிறப்புப் பிணி மூப்பிறப்புக்களும் முதலாயின வின்றி உயிர் நிரதிசய

இன்பத்த தாய் நிற்றலின், (வீட்டினைப் பேரா இயற்கை என்றும், அஃது அவாநீத்த வழிப் பெறுதல் ஒரு தலையாகலின் அந்நிலையே தரும் என்றும் கூறினார்) என்ற சொற்களால் கூறிவிட்டு, 'நன்றாய் ஞானம் கடந்து போய்' என்ற பாடல் (3753) முழுமையும் தந்து, 'என்பதும் இக்கருத்தே பற்றி வந்தது' என்று எடுத்துக் காட்டுகிறார்.

**பிற சமயத்தார்**

தத்துவராயர் என்பவர் 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு வேதாந்தி; அவர் புதிதாக எண்ணற்ற வேதாந்த நூல்கள் செய்து வேதாந்த நெறிக்கு ஆக்கம் கொடுக்க முயன்றவர். எங்குமே சைவ வைணவ பேதமின்றி நூல்களை எடுத்துத் தருவார். இவ்வியல்பை அவர் தொகுத்த பெரு நூலாகிய பெருந்திரட்டில் காணலாம். அன்றியும், அவர் தாம் செய்த பல நூல்களிலும், சைவ சமயா சாரியர் நால்வரையும், ஆழ்வாராதிகளில் நம்மாழ்வாரையும் தவறாமல் புகழ்ந்து பாடுகிறார். தமது மோகவதைப் பரணி என்ற நூலில், திருமுடியடைவு என்ற பகுதியில், தமது ஆசாரியர் பரம்பரையைக் கூறுமிடத்து, நம்மாழ்வாருக்கும் நால்வருக்கும் அருள் செய்தலின் என்று தனித்தனியே குறிப்பிடுகிறார்.

தேனொக்க மன்னும் அமிர்தொக்க வேத
 சிரமே மொழிந்த குருகைக்
கோனுக்கு வந்து பெருகன்பு நெஞ்சம்
 உருகக் கொடுத்த குரவோன்.

இதே பரணியில், தொடக்கத்தில் உள்ள வாழ்த்துப் பகுதியில், நம்மாழ்வார் வாழ்த்து:

ஒண் பொருளை நாடி இந்த நிலம் வாழ
 ஒண் தரளம் வாரி எங்கணும்
தண்பொருநை வீசும் தண்குருகையாளி
 தந்த தமிழ் வேதம் வாழியே.

அஞ்ஞவதைப் பரணி, பேய் முறைப்பாடு என்ற பகுதியில், பேய் கள், பராவமுதை நம்மாழ்வார் தாமே உண்டார் என்கின்றன.

சாந்தியினை நேராக உடைய நல்ல
 சடகோபர் அமுதத்தைத் தாமே உண்டு
தீந்தமிழென் றொரு கோடி வேதமாகும்
 செய்யதிருவாய் மொழிந்தார், தேர மாட்டோம். 62

சிலேடையுலாவில், தலைவன் சிறப்புரைக்குமிடத்துத் தம் குரு வான சொரூபானந்தரை நம்மாழ்வாரென்றே போற்றுகிறார்.

முழுதுணர்ந்த தெய்வ முனிக் கணங்கள் போற்றும்
வழுதிவள நாடன் மாறன் – பழுதிலா
எண்ணார் மறைப்பொருளை எல்லாரும் தாமறியப்
பண்ணார் தமிழாற் பரிந்தெடுத்துக் – கண்ணீர்
திரைக்கொண்டு நெஞ்சுடைப்பத் தித்திக்கும் வார்த்தை
உரைக்கும் திருநா வுடையான். 25–7

அரிவையை வருணிக்கும் போது சொல்லுகிறார்:

அந்த மறைப்பொருளை அந்தச் சடகோபன்
செந்தமிழே ஒக்கின்ற செவ்வியாள். 259

## ஆழ்வார்கள் வரிசை முறை

ஆழ்வார்கள் வரிசை முறை நிர்ணயிப்பதற்கு நாலாயிர திவ்வியப் பிரபந்தம் நமக்குத் துணை செய்யவில்லை; ஏனெனில், அங்கு, திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி 2ஆம் ஆயிர மாகவும், நம்மாழ்வார் திருவாய்மொழி 4ஆம் ஆயிரமாகவும், இசைப் பாக்கள் யாவும் முதலாயிரமாகவும், இயற்பாக்கள் யாவும் இயற்பா என்றே பெயரமைந்த மூன்றாம் ஆயிரமாகவும் அமைக்கப் பெற்றுள்ளன. 1, 3 தொகுதிகளில் பலர் பாடல் களும் அடங்கியிருப்பதால், அவற்றுள் கால வரிசை முறையைக் காண்பதரிது. 12 முதல் 15 நூற்றாண்டு வரையில் வைணவ மரபில் பெரியவர்களான நால்வர், ஆழ்வார்களைக் குறிப்பிட்டு இருக் கிறார்கள். அவர்களில் வேதாந்த தேசிகரும் மணவாள மாமுனி களும் ஏறக்குறைய ஒரே வரிசையில் ஆழ்வார்களைக் குறிப்பிடு கிறார்கள். முதலாழ்வார்களுக்கு அடுத்துத் திருமழிசையாழ்வார், பின் நம்மாழ்வார் என்பது இவர்கள் கொண்டுள்ள வரிசை. ஆனால் குருபரம்பரை எழுதியவர் நம்மாழ்வாரை இறுதியில் வைத்திருக்கிறார்.

## ஆழ்வார் வரிசை முறை

| எண் | திருவரங்கத்த முதனார் இராமானுச நூற்றந்தாதி 12ஆம் நூற்றாண்டு | பின் பழகிய பெருமாள் சீயர்-குரு பரம்பரை, 13ஆம் நூற்றாண்டு | வேதாந்த தேசிகர் பிரபந்த சாரம் 14ஆம் நூற்றாண்டு | மணவாள மாமுனிகள் உபதேச ரத்தினமாலை 15ஆம் நூற்றாண்டு |
|---|---|---|---|---|
| 1-3 | முதலாழ்வார் | முதலாழ்வார் | முதலாழ்வார் | முதலாழ்வார் |
| 4 | திருப்பாணாழ்வார் | திருமழிசை | திருமழிசை | திருமழிசை |
| 5 | திருமழிசை | குலசேகரர் | நம்மாழ்வார் | நம்மாழ்வார் |
| 6 | தொண்டரடிப் பொடி | பெரியாழ்வார் | மதுரகவி | குலசேகராழ்வார் |
| 7 | குலசேகரர் | ஆண்டாள் | குலசேகரர் | பெரியாழ்வார் |
| 8 | பெரியாழ்வார் | தொண்டரடிப்பொடி | பெரியாழ்வார் | (ஆண்டாள்) |
| 9 | ஆண்டாள் | திருப்பாணாழ்வார் | ஆண்டாள் | தொண்டரடிப்பொடி |
| 10 | திருமங்கை | திருமங்கையாழ்வார் | தொண்டரடிப்பொடி | திருப்பாணாழ்வார் |
| 11 | நம்மாழ்வார் | நம்மாழ்வார் | திருப்பாணாழ்வார் | திருமங்கையாழ்வார் |
| 12 | மதுரகவி | மதுரகவி | திருமங்கை | (மதுரகவி) |

மணவாள மாமுனிகள் கூறிய முறையே பெரிய திருமுடியடைவும் கூறும். ஆண்டாள் பெண் பாலாதலாலும், மதுரகவி நம்மாழ்வாரையே பாடியவராதலாலும், சில சம்பிரதாயங்கள் இவ்விருவரையும் ஆழ்வாராகக் கணக்கிடாமல் ஆழ்வார் பதின்மராகவே கணக்கிடுதலுண்டு. மணவாள மாமுனிகள் இவ்விருவரையும் குறிப்பிடவில்லை.

இங்கு நாம் சிறப்பாய்க் கருதத்தக்கது, இராமானுச நூற்றந்தாதி பாடிய திருவரங்கத்தமுதனார் தம் நூலின் 8ஆம் பாடலிலிருந்து 18ஆம் பாடல் வரையில் ஆழ்வார்களைக் குறிப்பிடும் முறை. ஒவ்வொரு பாடலிலும் ஓர் ஆழ்வாரைக் குறிப்பிடுகிறார். அவர் கொண்ட முறையே திருத்தமானது, கொள்ளத்தக்கது என்பதற்குச் சில காரணங்கள் உள்ளன. முதலாவது, நம்மாழ்வார் காலத்துக்கு மற்ற அனைவரையும் விட அமுதனாரே நெருக்கமான காலத்தில் வாழ்ந்தவர். ஆதலால் பிற் காலத்தை விட இவர் காலத்தில் ஆழ்வார்களைப் பற்றிய செய்திகள் நன்கு நினைவில் இருத்தல் இயல்பு. இரண்டாவது, இந்த அந்தாதி இராமானுசரால் திருக்கண் சாத்தி அங்கீகரிக்கப் பட்டது. ஆதலால் இதில் உள்ள வரிசை முறை திருத்தமானது என்று இராமானுசரால் கருதப்பெற்றது என்று நாம் கொள்ள வேண்டும். எனவே, ஆழ்வார்களைக் குறித்த எந்த ஆராய்ச்சியிலும் இந்த வரிசை முறையை நாம் பின்பற்றுவது பயனுடையதாய் இருக்கும்.

தேசிகரும் மணவாள மாமுனிகளும் கொண்டுள்ளபடி கொள்வதில் சில இடையூறுகள் எழுகின்றன. நம்மாழ்வார் அவயவியாகவும் பிற ஆழ்வார்கள் அவயவங்களாகவும் கொள்வது ஒரு வைணவ மரபு என்று குறிப்பிட்டோம். அங்ஙனமானால் அவயவியாகிய நம்மாழ்வார் முதலிலோ அல்லது கடையிலோ தான் இருக்க வேண்டும் என்பது தெளிவு. இடையில் இருத்தல் பொருந்தாது. ஆனால் எல்லோருமே பொய்கை, பூதம், பேய் ஆகிய மூவரையும் முதல் ஆழ்வார்களாக முதலில் சொல்வது ஒரு மரபு ஆகியிருக்கிறது. ஆதலால் நம்மாழ்வார் இறுதியில் வருவதுதான் முறை.

மற்றொரு காரணமும் உண்டு. திருவாய் மொழி ஆயிரமும் தேடிச் சென்ற நாதமுனிகள் திருக்குருகூர் அடைந்து நம்மாழ்வாரைப் பிரத்தியாட்சமாகக் காண்கிறார். அவருக்கு ஆழ்வார் தம்முடைய திருவாய்மொழியை மட்டுமன்றி நாலாயிரம் பாசுரங்களையுமே அருள் செய்கிறார். இக்கதையின்படி, இப்பாசுரங்கள் ஆழ்வாருக்கு முன்னமே தோன்றியிருந்தால்தான் இவர் அவற்றைக் கொடுக்க இயலுமேயன்றி, இவருக்குப் பின் அவை தோன்றியிருந்தால் கொடுத்தல் இயலாது. ஆதலினால் இவர் பிற ஆழ்வார் அனைவருக்கும் பிற்பட்டவராய் இருத்தல் வேண்டும் என்பது தெளிவு. அமுதனாரும் குருபரம்பரையாரும் நம்மாழ்வாரை

இறுதியிலேயே வைத்திருக்கிறார்கள். திருப்பாணாழ்வார், தொண்டரடிப்பொடி என்ற இருவர் காலம் பற்றித்தான் வேறு பாடு. முன்சொன்ன காரணங்களால், இங்கு அமுதனார் வரிசை முறையையே கொள்ள வேண்டும்.

**இராமானுச நூற்றந்தாதி வரிசை முறை**

| எண் | ஆழ்வார் – ஆசாரியர் | அந்தாதிப் பாடல் எண் | நூற்றாண்டு |
|---|---|---|---|
| ஆழ்வார் | | | |
| 1. | திருவிளக்கு எரித்த பொய்கைப்பிரான் | 8 | 5-6 |
| 2. | ஞானமென்னும் விளக்கேற்றிய பூதம் | 9 | 5-6 |
| 3. | கோவலுள் மாமலராள் தன்னொடும் மாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த் தலைவன் | 10 | 5-6 |
| 4. | நான்மறைச் செம்பொருள் செந்தமிழாலளித்த பாண் பெருமாள் | 11 | 7 |
| 5. | மழிசைக் கிறைவன் | 12 | 7 |
| 6. | துளபத்தொழில் மாலையும் தமிழ் மாலையும் அணியும் தொண்டரடிப் பொடி | 13 | 7 |
| 7. | கொல்லி காவலன் குலசேகரன் | 14 | 8 |
| 8. | பல்லாண்டு காப்பிடும் பான்மையன் | 15 | 8 |
| 9. | மாலையைச் சூடிக் கொடுத்தவள் | 16 | 8 |
| 10. | தண்டமிழ் செய்த நீலன் (திருமங்கை) | 17 | 8 |
| 11. | மறைகளை ஆயிரம் இன்தமிழால் செய்தற்கு வரும் சடகோபன் | 18 | 9 |
| 12. | மதுரகவி யாழ்வார் | 18 | 9 |
| ஆசாரியர் | | | |
| | நாதமுனிகள் | 20 | 9 |
| | யமுனைத் துறைவர் | 21 | 10 |
| | இராமானுசர் (1017-1137) | எல்லாப் பாடல்களிலும் | 11-12 |

இனி இங்கு, பின்னும் சிலர் கொண்டுள்ள முறையையும் காட்டுவோம். பொதுவாக ஒன்று; பின்வந்தோர் அனைவரும் கால முறையைக் கருதித்தான் சொன்னார்கள் என்று கருத

இடமில்லை; அப்படி அவர்கள் கருதாமையால் தான் இத்தனை வேறுபாடுகளும் ஐயங்களும். கூரத்தாழ்வார் புதல்வரான பராசர பட்டர், பட்டர் என்றே சிறப்புப்பெயர் உடையவராய் எல்லாருக்கும் பின் வைணவ ஆசாரியராய் அமர்கிறார். இவர் ஆழ்வார்-உடையவருக்குத் துதியாகச் செய்திருக்கும் ஒரு வட மொழித்தனியன் இங்கு கருதத்தக்கது; காலம் 12ஆம் நூற் றாண்டிறுதி ஆனமையால் இப்பாடல் முக்கியமானது என்பதில் தவறில்லை (காலம் 1192-1220 எனக் கூறலாம்).

பூதம், ஸரச்ச, மஹாதாஹ்வய, பட்டநாத,
ஸ்ரீபக்திஸார, குலசேகர, யோகிவாஹாந்
பக்தாங்க்ரிரேணு, பரகால யதீந்த்ர மிச்ராந்
ஸ்ரீமத் பராங்குஸ முநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

பூதம்-பூதத்தாழ்வார்; சரசு-பொய்கை; மஹதாஹ்வய-பேயாழ் வார்; பட்டநாத-பெரியாழ்வார்; பக்திஸார-மழிசை; குலசேகரர்; யோகிவாஹாந்-முனிவாசகரான பாணாழ்வார்; பக்தாங்க்ரி ரேணு-தொண்டிரடிப்பொடி; பரகால-திருமங்கை; யதீந்த்ரமிச் ராந்-இராமானுசர்; பராங்குச முநி-நம்மாழ்வார். இங்கு மதுர கவியும் ஆண்டாளும் சொல்லப்படவில்லை. நம்மாழ்வாரை அவயவியாகவும், பிறரை அவயவங்களாகவும் சொல்லும் மரபைத் தழுவிய பாடல் இது (இராமானுசரும் ஓர் அவயவம் ஆதலால் அவரும் இங்கு சொல்லப்பட்டுள்ளார்).

வேதாந்த தேசிகர் இரண்டிடங்களில் ஆழ்வார்களைச் சொல்லுகிறார். ஒன்று அதிகார சங்கிரகத்தின் தொடக்கம்.

பொய்கை முனி பூதத்தார் பேயாழ் வார் தண்
பொருநல்வரு குருகேசன் விட்டு சித்தன்
துய்யகுல சேகரன்நம் பாண நாதன்
தொண்டரடிப் பொடிமழிசை வந்த சோதி
வையமெலாம் மறைவிளங்க வாள்வேல் ஏந்தும்
மங்கையர்கோன் என்றிவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித்
தெளியாத மறைநிலங்கள் தெளிகின் றோமே.

நம் பாணநாதன் - திருப்பாணாழ்வாருக்கும் தேசிகருக்கும் உள்ள தொடர்பு தேசிகர் வரலாற்றில் சொல்லப்பட்டது. (14நூ. வரலாறு) அவரே பாணரின் அமனாதிபிரான் வியாக்கியானமாக முனி வாகன போகம் செய்தார். இதனால் நம் என்ற அடைமொழியின்

நயம் காணலாகும். இங்கு ஆண்டாள் மதுரகவி இருவரையும் சொல்லவில்லை. அடுத்த பாடலில், மதுரகவியை மட்டும் சொல்லுகிறார்: 'அருமறைகள் தமிழ் செய்தான் தாளே கொண்டு துன்பற்ற மதுரகவி'; ஆண்டாளைச் சொல்லவில்லை. பிரபந்த சாரத்தில் பன்னிருவரையும் தனித்தனிப் பாடல்களில் விரிவாகச் சொல்லுகிறார். ஆனால் இரண்டிலும் வரிசை மாறுகிறது. தொகுத்துரைக்கும் பாடலொன்று:

> **வையகமெண் பொய்கைபூதன் பேயாழ்வார்**
> **மழிசையர்கோன் மகிழ்மாறன் மதுரகவி**
> **பொய்யில்புகழ் கோழியர்கோன் விட்டு சித்தன்**
> **பூங்கோதை தொண்டரடிப் பொடி பாணாழ்வார்**
> **ஐயனருட் கலியன் எதிராசர் தம்மோடு**
> **ஆறிருவ ரோரொருவர் அவர்தாம் செய்த**
> **துய்யதமிழ் இருபத்து நான்கிற் பாட்டின்**
> **தொகைநாலா யிரமுமடி யோங்கள் வாழ்வே. 17**

இனி, உபதேச ரத்தினமாலையில் (4) மணவாள மாமுனிகள் 'ஈது இவர்கள் தோற்றத் தடைவு' என்று ஒரு பாடல் கூறுகிறார்.

> **பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ் மழிசை**
> **அய்ய னருள்மாறன் சேரலர்கோன் – துய்யபட்ட**
> **நாதன்அன்பர் தாள்தூளி நற்பாணன் நன்கலியன்**
> **ஈதிவர்தோற் றத்தடைவாம் இங்கு.**

மதுரகவியையும் ஆண்டாளையும், அடுத்த பாடலில் (21) 'ஆழ்வார் திருமகளார் ஆண்டாள், மதுரகவியாழ்வார், எதிராச ராமிவர்கள்' என்று கூறுகிறார். இனி, இவர் சீடரான அப்பிள்ளை செய்த வாழித் திருநாமம் மற்றொரு முறையைக் கடைப்பிடிக் கிறது.

மற்றும், நாலாயிரத் தொகுப்பில், கால முறை கொள்ளப் படவில்லை என்பது தெளிவு. ஏனெனில் அங்கு இயல் இசை என்ற முறையும் நான்கு ஆயிரமாகத் தொகுக்கும் முறையும் கொள்ளப்பட்டுள்ளது. அவற்றைப் பின்வருமாறு காட்டுவோம்.

| | | |
|---|---|---|
| முதலாயிரம் | : | பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகரப் பெருமாள், மழிசையார், தொண்டரடிப் பொடி, திருப்பாணர், மதுரகவி. |
| இரண்டாவது | : | திருமங்கை யாழ்வார் |

மூன்றாவது : பொய்கையார், பூதத்தார், பேயார், (மழிசையார்), (நம்மாழ்வார்), (திருமங்கை), அரங்கத்தமுதனார்.

நாலாவது : நம்மாழ்வார்

இங்கு, பாடல்களின் இயல் அமைதியால், திருமழிசை திருமங்கை நம்மாழ்வார் பிரபந்தங்கள் சில மீண்டும் இயற்பாவில் வந்துள்ளமை காணலாம். இது வரலாற்று முறையன்று என்பது வெளிப்படை.

மேலும், 1973இல் வெளிவந்த திருத்தமான அழகிய நாலாயிரப் பதிப்பொன்றில்,* ஒருவகையான சமாதானம் கூறி, திருவாய்மொழியை மூன்றாவதாகவும் இயற்பாவை நான்காவதாகவும் பதிப்பித்திருக்கக் காண்கிறோம். ஆதலால், நாலாயிரப் பாடல் வைப்பு முறை கால வரையறைக்குப் பயன்படாது.

இதுவரை குறிப்பிட்ட கருத்துக்கள் அனைத்தையும் இங்கே ஓர் அட்டவணையாக அமைத்துக் காட்டியிருக்கிறோம். ஆழ்வார் பெயர்களைக் குறிப்பிடாமல், பின்வரும் முறைப்படி எண்ணை மட்டும் அமைத்திருக்கிறோம்.

1. பொய்கையார்
2. பூதத்தார்
3. பேயார்
4. திருப்பாணாழ்வார்
5. திருமழிசை யாழ்வார்
6. தொண்டரடிப் பொடி யாழ்வார்
7. குலசேகராழ்வார்
8. பெரியாழ்வார்
9. ஆண்டாள்
10. திருமங்கை யாழ்வார்
11. நம்மாழ்வார்
12. மதுரகவி யாழ்வார்

இது திருவரங்கத்தமுதனார் கொண்ட வரிசை முறையாகும்.

---

* வி. பூதூர் கி வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு. திருவேங்கடத்தான் திருமன்றம். 1973.

## நூல்களில் ஆழ்வார் வரிசை முறை

| திரு அரங்கத் தமுதனார், இராமானுச அந்தாதி | பட்டர் | பின் பழகிய ஜீயர் குரு பரம்பரைப் பிரபாவம் | வேதாந்த தேசிகர் அதிகார சங்கிரகம் | வேதாந்த தேசிகர் பிரபந்த சாரம் | மணவாள மாமுனி உபதேச ரத்தின மாலை | அப்பிள்ளை வாழித் திருநாமம் | கந்தாடை யண்ணன் பெரிய திருமுடிவு யடைவு | தென்கலை இயல் சாத்து (பின் பழகியர்) | நாலாயிரப் பாசுர முறை |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| கி.பி.1130 | 1200 | 1290 | 1320 | 1320 | 1400 | 1450 | 1450 | 1300 | - |
| பொய் 1 | 2 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 3 | 8 |
| பூதம் 2 | 1 | 2 | 2 | 2 | 2 | 2 | 2 | 1 | 8a |
| பேய் 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 3 | 2 | 7 |
| பாண் 4 | 8 | 5 | 10 | 5 | 5 | 9 | 5 | 10 | 5 |
| மழிசை 5 | 5 | 7 | 8 | 10 | 7 | 4 | 11 | 5 | 6 |
| தொண் 6 | 7 | 8 | 8a | 10a | 6 | 8 | 7 | 9 | 4 |
| குலசேக 7 | 4 | 8a | 7 | 7 | 8 | 6 | 8 | 8 | 10a |
| பெரியா 8 | 6 | 6 | 4 | 8 | 10 | 7 | 9 | 6 | 9 |
| ஆண் 8a | - | 4 | 6 | 8a | 11 | 12 | 6 | 11 | 1 |
| மங்கை 9 | 9 | 9 | 5 | 6 | 4 | 10 | 4 | 7 | 2 |
| நம்மாழ் 10 | 10 | 10 | 9 | 4 | 9 | 5 | 10 | 4 | 3 |
| மதுர 10a | - | 10a | 10a | 9 | 12 | 11 | 12 | 12 | 10 |

**ஆழ்வார் வரலாற்று ஆதார நூல்கள்**

1. வடமொழித் திவ்விய சூரி சரிதம் : கருடவாகன பண்டிதர் என்பவர் செய்தது. (திவ்விய சூரி - தெய்வத் தன்மை பொருந்திய புலவர்). பண்டிதர் இராமானுசரின் உடன் காலத்தவர் எனக் கருதப்படுகிறார். ஆழ்வார் வரலாறுகளையும் இராமானுசர் வரையிலுள்ள ஆசாரியர் வரலாறுகளையும் சொல்லி, இராமானுசர் தாம் வந்த நோக்கத்தை முடித்து, பரமபதம் செல்வதை எதிர்நோக்கியிருக்கிறார் என்று முடிக்கிறார். (வங்கிபுரம் சீனிவாசாசாரி என்பவர் வேதாந்த தேசிகர் வரை ஆழ்வார் ஆசாரியர் வைபவத்தைத் தமிழில் திவ்விய சூரிசரிதம் என்ற பெயரால் கூறுகிறார். காலம் 19ஆம் நூற்றாண்டு பாடல் 2824, அச்சானது 1939. இது ஆதார நூலன்று) இராமானுசர் பரமபதம் சென்றது கி.பி. 1137 என்பது வழக்கு.

2. நம்பிள்ளையின் சீடரான பின்பழகிய பெருமாள் ஜீயர் என்பவர் செய்த குருபரம்பரா ப்ரபாவம், ஆறாயிரப்படி செய்த காலம் சுமார் 1290. இந்நூல் செய்த காலம் வடகலை தோன்றவில்லை. (வேதாந்த தேசிகருக்கு அப்போது வயது சுமார் 20). இதனுள் நம்பிள்ளை வரையில் வரலாறு உள்ளது. கிடைக்கிற வரலாறுகளில் பொதுவாய் இது ஒன்றே ஆதாரமாய்க் கொள்ளத் தக்கது. இது மணிப்பிரவாள நடையில் எழுதப்பெற்றது.*

இராமானுசரின் சீடரான வடுகநம்பி வழிவந்த அனந்தாசாரி என்பவர் மிகவும் பிற்காலத்தில் பின் பழகியார் குருபரம்பரையை வடமொழியில் பிரபந்நாம்ருதம் என்ற பெயரில் மொழிபெயர்த்தார். இவர் விசயநகர மன்னன் முதலாம் வேங்கடபதிராயன் (1586-1664) காலத்துக்குச் சற்றுப் பிற்பட்டவர்.

3. வேதாந்த தேசிகர் பாடிய தேசிகப் பிரபந்தத்தின் 18ஆம் பிரபந்தம் பிரபந்த சாரம் என்பது (பிரபந்தம் - திவ்வியப் பிரபந்தம்). இதன் 2-13 பாடல்கள் பொய்கையாழ்வார் தொடங்கிப் பன்னிரு ஆழ்வார்களையும் ஒவ்வொரு பாடலால் துதிக்கிறது. ஆழ்வார் பிறந்த தலம், திருநட்சத்திரம், செய்த நூல்கள், பாடல் தொகை என்பன கூறுகிறது. இது வரலாற்று நூல் அல்லா விட்டாலும் கூட, இந்தச் செய்திகளைத் தவறாமல் விளக்குமளவு இப்பிரபந்தம் பயனுடையது. தாம் இவற்றைச் சொல்லப்

* குருபரம்பரை வரலாறுகளின் அட்டவணையொன்றையும், பின் பழகிய ஜீயர் வரலாற்றையும் எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

போவதாக முதல் பாட்டில் அவதாரிகை செய்து கொண்டு, 14ஆம் பாட்டில் அமுதனாரின் அந்தாதியைப் போற்றி செய்து, 15-17 இல் நாலாயிரம் பாடல் என்பதை முறையாக வரையறை செய்து, பிரபந்தங்கள் 24, பாடல் 4000 என்று முடிக்கிறார்.

4. மணவாள மாமுனிகள் பாடிய உபதேச ரத்தின மாலை. 71 வெண்பாக் கொண்ட இச்சிறு நூலில் இவ்வாசாரியர் ஆழ்வார்கள் திருநட்சத்திரம் முதலிய பல பயனுள்ள செய்திகளைப் பல பாடல்களால் தருகிறார். காலம் 15ஆம் நூற்றாண்டு.

5. மணவாள மாமுனிகளின் சீடரான கோயில் கந்தாடையண்ணன் என்பவர் பெரிய திருமுடியடைவு என்ற பெயரால் ஒரு சிறு உரைநடைக் குறிப்பு நூல் செய்தார். இது ஆழ்வார் ஆசாரியர் பரம்பரையை முக்கியமான செய்திகளோடு, ஒரு குறிப்பேடு போலக் கூறுவது. இங்கு பரமபதநாதன் தொடங்கி, இவரது ஆசாரியர் வரையில் நட்சத்திரம் (அவதார நாள்), ஊர், இடம், ஆசாரியர், சீடர், பாடிய திருப்பதிகள், பாடிய நூல்கள், பெற்றோர், திருவாராதனம், திருநாமங்கள், தனியன் ஆகிய பொருள்களைக் கூறுகிறது. ஆழ்வார் ஆசாரியர் பற்றிய அறிவுக்கு மிக முக்கியமான சிறு நூல்.

6. பிற குரு பரம்பரைகள் - வடகலை மூவாயிரப்படி; பன்னீராயிரப்படி, தென்கலை மூவாயிரப்படி - முதலான பல. இவை யாவும் புகழ்ந்துரைகளும், இடைச்செருகல்களும், வடகலை தென்கலைப் பூசல்களும் மலிந்தவை.

7. இராமானுசாசார்ய திவ்ய சரிதை, யதீந்திரப் பிரவணப்ரபாவம், வேதாந்த தேசிக வைபவப் பிரகாசிகை போன்றவை. பிற்கால நூல்கள், அந்தந்த ஆசாரியர் வரலாறு மட்டுமே கூறும், ஆழ்வார் வரலாறு விளங்கக் கூறமாட்டா.

8. கிழையூர்ச் சடகோப தாசர் பாடிய அரிசமய தீபம், 1500 பாடல். காப்பிய ரீதியில் இராமானுசர் வரையில் கூறுவது. அச்சு 1904. 17ஆம் நூற்றாண்டு.

9. வடிவழகிய நம்பிதாசர் பாடிய ஆழ்வார் ஆசாரிய வைபவங்கள், விருத்தச் செய்யுள், பெருநூல்; எல்லாப் பகுதிகளும் அச்சானதாகத் தெரியவில்லை; சில பகுதிகளே அச்சாயின. பிற்காலம்; 2965 பாடல்.

10. குரு பரம்பரைப் புராணம்; விசயராகவர். 4361 பாடல்.

நாலாயிரப் பிரபந்தப் பாடல் தொகை

| எண் | ஆழ்வார் | | நூல் | பிரிவு | பாடல் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | பொய்கையாழ்வார் | 1 | முதல் திரு அந்தாதி | III | 100 | 100 |
| 2. | பூதத்தாழ்வார் | 2 | இரண்டாம் திருஅந்தாதி | III | 100 | 100 |
| 3. | பேயாழ்வார் | 3 | மூன்றாம் திருஅந்தாதி | III | 100 | 100 |
| 4. | திருப்பாணாழ்வார் | 4 | அமலனாதி பிரான் | I | 10 | 10 |
| 5. | திருமழிசையாழ்வார் | 5 | நான்முகன் திருவந்தாதி | III | 96 | - |
| | | 6 | திருச்சந்த விருத்தம் | I | 120 | 216 |
| 6. | தொண்டரடிப் பொடியாழ்வார் | 7 | திருமாலை | I | 45 | - |
| | | 8 | திருப்பள்ளியெழுச்சி | I | 10 | 55 |
| 7. | குலசேகராழ்வார் | 9 | பெருமாள் திருமொழி | I | 105 | 105 |
| 8. | பெரியாழ்வார் | 10 | பெரியாழ்வார் திருமொழி (திருப்பல்லாண்டுடன்) | I | 473 | 473 |
| 9. | ஆண்டாள் | 11 | திருப்பாவை | I | 30 | - |
| | | 12 | நாச்சியார் திருமொழி | I | 142 | 173 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 10. | திருமங்கையாழ்வார் | 13 | பெரிய திருமொழி | II | 1084 | - |
| | | 14 | திருக்குறுந் தாண்டகம் | II | 20 | - |
| | | 15 | திருநெடுந் தாண்டகம் | II | 30 | - |
| | | 16 | திருவெழு கூற்றிருக்கை | III | 1 | - |
| | | 17 | சிறிய திருமடல் | III | 40 | - |
| | | 18 | பெரிய திருமடல் | III | 78 | 1253 |
| 11. | நம்மாழ்வார் | 19 | திருவிருத்தம் | III | 100 | - |
| | | 20 | திருவாசிரியம் | III | 7 | - |
| | | 21 | பெரிய திருவந்தாதி | III | 87 | - |
| | | 22 | திருவாய் மொழி | IV | 1102 | 1296 |
| 12. | மதுரகவி ஆழ்வார் | 23 | கண்ணிநுண் சிறுத்தாம்பு | I | 11 | 11 |
| | திருஅரங்கத் தமுதனார் | 24 | இராமானுச நூற்றந்தாதி | தனி | 108 | 108 |
| | ஆகத் திருநாமங்கள் 13 | | பிரபந்தங்கள் 24 | | 4000 | 4000 |
| | I முதலாயிரம் | | II பெரிய திருமொழி | III இயற்பா | IV திருவாய்மொழி | |

இவ்வனைத்தினுள்ளும் பின்பழகிய பெருமாள் சீயர் எழுதிய குரு பரம்பராப்பரபாவமே (எண் 2) மணிப்பிரவாள நடை ஆதாரமானது, ஓரளவு நம்பத்தகுந்தது.

## நாலாயிரம் என்ற தொகை

இவ்வட்டவணையின்படி முதலாயிரம் 947 பாடல்; இரண்டாவது பெரிய திருமொழி 1134 பாடல்; மூன்றாவது இயற்பா பாடல் 593, நான்காவது திருவாய் மொழி 1102 பாடல். ஆகவே மொத்தப் பாடல் 3776. இவற்றோடு அமுதனார் அந்தாதியையும் சேர்த்து, இரண்டு திருமடல்களின் கண்ணிகளையும் தனித்தனிப் பாட்டுக்களாகச் சேர்த்துக் காட்டும் போது 4000 என்ற எண் நிறைவு பெறுகிறது. இது அவசியமில்லை. நாலாயிரத்துக்குக் குறைந்திருந்தாலும் நாலாயிரம் என்ற பேரெண்ணால் குறிப்பிடுவதும் பொருத்தமே என்ற கருத்தும் நிலவுகிறது. 'துய்ய தமிழ் இருபத்து நான்கிற் பாட்டின் தொகை நாலாயிரமும் அடியோங்கள் வாழ்வே' என்பர் வேதாந்த தேசிகர்.* தொகை நாலாயிரம் என்பதற்கு அவரே இரண்டு பாடல்களால் விளக்கம் சொல்கிறார்:

எண்ணில்முத லாழ்வார்கள் மூன்று நூறும்
 எழில்மழிசைப் பிரான் இருநூற் றொருபத் தாறும்
உண்மைமிகு மாறன் மறை ஆயி ரத்தோடு
 உற்றஇரு நூற்றுத்தொண் ணூறும் ஆறும்
வண்மையுடை மதுரகவி பத்தும் ஒன்றும்
 வஞ்சியர்கோன் நூற்றைந்தும் பட்ட நாதன்
பண்ணியநா னூற்றெழு பத்து மூன்றும்
 பார்க்கோதை நூற்றெழு பத்து மூன்றே

பத்தரடிப் பொடிபாடல் ஐம்பத்தைந்தும்
 பாணர்புகழ் பத்துடனே பரகா லன்சொல்
அத்தனுயர் வேங்கடமாற் காயி ரத்தோடு
 ஆனஇரு நூற்றோரைம் பத்து மூன்றும்
முத்தி தரு எதிராசர் பொன்ன டிக்கே
 மொழிந்தவமு தர்பாடல் நூறும் எட்டும்
எத்திசையும் வாழ இவை பாடி வைத்த
 என்பவை நாலாயிரமும் எங்கள் வாழ்வே.❖

---

* பிரபந்த சாரம் 17.

❖ பிரபந்த சாரம் 15-16.

## பதிப்பு

முடிச்சூர் அப்பாவு முதலியார் பதிப்பு* முதன் முதலாக 1865இல் வெளிவந்தது. அச்சிட்டோர் பொதுவாக நாலாயிரமும் சேர்த்து ஒரு தொகுதியாகவே அச்சிட்டார்கள். இதுவரை சுமார் 15 பேர் அச்சிட்டிருக்கிறார்கள். அன்றியும் ஈடு வரையில் உள்ள வியாக்கியானங்களோடும் பகவத் விஷயம் என்ற பெயரில் (சே. கிருஷ்ணமாச்சாரியர் 1927) ஒரு சிறந்த பதிப்பு வெளியாயிற்று. இந்த நூற்றாண்டில் வெளியானவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை சே. கிருஷ்ணமாச்சாரியர், இரண்டாம் பதிப்பு. இதனுள் திருவாய்மொழி முழுமைக்கும் பதிகம் பதிகமாக உட்கிடைப் பொருளைத் தமிழில் தந்துள்ளார்; மிக்க சிறப்புடைய பதிப்பு. 1929 டி.சி. பார்த்தசாரதி ஐயங்கார் பதிப்பு. 1943 மயிலை மாதவதாசன் பதிப்பு (ம. பாலசுப்பிரமணிய முதலியார்) பின்னர், வெளிவந்த எல்லாப் பதிப்புக்களிலும் சிறப்பானது எஸ். ராஜம் தக்க புலவர் குழாம் கொண்டு பதிப்பித்தது. 1955-6 நாலாயிரமும் நாலுபாகம். சொல்பிரித்து, பதிகத் தலைப்புக்களில் வெளிப்படைப் பொருளொடு, அருஞ்சொற்பொருள், பாடபேதம், தல அட்டவணை முதலிய அங்கங்களோடு கூடியது.

மாதவதாசன் பதிப்பு, திருமடல் இரண்டுக்கும் தனி எண் கொடுக்காமல் மொத்தம் 3776 பாடல் என்று எண்ணிட்டுக் காட்டுவது. நான்கு பகுதியாக வந்த எஸ். ராஜம் பதிப்பு, அவந்றுக்குத் தனி எண்ணிட்டு, மொத்தம் 4000 என்று முடித்துக் காட்டுவது.

இந்நூல் எழுதி முடிந்த பின், வி. பூதூர் வித்துவான் கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு. திருவேங்கடத்தான் மன்றம், 1973இல் வெளிவந்தது. இது 4000 பாடல்களுக்கும் தொடக்கத்தில் எண்ணிட்டு அமைந்தது, இதில் ஒரு வேறுபாடு, இவர் திருவாய் மொழியை மூன்றாம் பகுதியாகவும் இயற்பாவை நான்காம் பகுதியாகவும் அச்சிட்டிருப்பது. இப்பதிப்பு பல ஆராய்ச்சிக் குறிப்புக்கள், பாடபேத விளக்கங்கள் முதலியன கொண்ட ஒரு சிறந்த பதிப்பு.

---

* பண்டைய அச்சுப் புத்தக விவரங்களை 1956 மர்ரே கம்பெனி திருவாய் மொழிப் பதிப்பில் (பக்கம். 206) விளங்கக் காணலாம்.

## கல்வெட்டுக் குறிப்புக்கள்

உடன்காலத்தில் நம்மாழ்வாரைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புக்கள் கிடைக்காவிட்டாலுங் கூட, பிற்காலத்தில் பல கிடைக்கின்றன. முதலாம் இராசேந்திரனுடைய 19ஆம் ஆண்டு (கி.பி. 1031) உத்திரமேரூரில் 1470 குழி நிலத்திலிருந்து வரும் வருவாயைக் கொண்டு நாள்தோறும் இரண்டு காலங்களிலும் திருவாய் மொழியை மூவர் விண்ணப்பம் செய்ய வேண்டுமென்ற நிபந்தம். 26ஆம் ஆண்டில் (1038), அவ்வூரிலேயே மூவர் திருவாய்மொழி விண்ணப்பம் செய்வதற்கு 7 குறுணி நெல் நாள்தோறும், இதே அரசன் ஆட்சியில் (ஆண்டுக் குறிப்பு இல்லை). எண்ணாயிரம் என்ற ஊரில் திருவாய்மொழி விண்ணப்பித்தற்காக, இராசராச விண்ணகருக்கு நிலம் அளிக்கப் பெற்றது. இராசேந்திரன் மகன் முதல் இராசாதிராசன் ஆட்சியாண்டு 30இல் (கி.பி. 1048); திருபுவனியில் திருவாய் மொழி விண்ணப்பஞ் செய்ய நெல். இரண்டாம் இராசாதி ராசனுடைய 8ஆம் ஆண்டு (1141) திருக்கோவலூரில் திருவாய்மொழி விண்ணப்பம் செய்ய ஒரு பெண் ஏழு கழஞ்சு அளிக்கிறாள். திருக்கண்ணபுரத்தில் திருமால் சித்திரை மாதத் திருக்கல்யாண விழா ஐந்தாம் நாளில் நீராவி மண்டபத்தில் இராவணாந்தகன் என்ற பீடத்தில் தம் தேவியரோடு இருந்து சடகோபர் அருளிய பிரபந்தங்களைக் கேட்டருளினார். முதல் குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு 15இல் (கி.பி. 1093) சில நம்பிமார் திருவரங்கத்தில் திருவரங்கத் தாழ்வார் கோயிலில் திருவாய் மொழி விண்ணப்பம் செய்யக் கைத்தீட்டுக் கொடுத்தனர். திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் கோயிலில் கி.பி. 1564ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் திருவாய்மொழி மண்டபம் என்ற பெயருடைய ஒரு மண்டபம் கட்டப்பெற்றதென அறிகிறோம்.

இரண்டாம் இராச ராசனுடைய ஆட்சியாண்டு 14இல் (1160) திருக்கண்ணபுரத்தில் திருமால் சித்திரை மாதத் திருக்கல்யாண விழா ஐந்தாம் நாளில் நீராவி மண்டபத்தில் இராவணாந்தகன் என்ற பீடத்தில் தம் தேவியரோடு வீற்றிருந்த சடகோபர் அருளிய பிரபந்தங்களைக் கேட்டருளினார். முதல் குலோத்துங்க சோழ தேவற்குயாண்டு 15இல் (1093) சில நம்பிமார் திருவரங்கத்தில் திருவரங்கத் தாழ்வார் கோயிலில் திருவாய் மொழி விண்ணப்பம் செய்யக் கைத்தீட்டுக் கொடுத்தனர்.

முதலாம் இராச ராசனுடைய 13ஆம் ஆட்சியாண்டில் (998) வடார்க்காடு ஜில்லா உக்கல் சாலை கல்வெட்டு விக்கிரமாபரணச் சதுர்வேதி மங்கலத்து மகா சபையார் அங்குள்ள திருவாய் மொழித் தேவர் உச்சிக்கால நிவேதனத்துக்குத் தினமும் நாலு நாழி அளப்பதற்காக 500 குழி நிலம் மானியம் கொடுத்ததாகக் கூறுகிறது. இதனால் அக்காலத்திலேயே திருவாய் மொழி என்ற பெயர் சாசனங்களில் ஆட்சிக்கு வந்ததையும் அறிகிறோம்.

திருநெல்வேலி ஜில்லா காட்டாற்றுப் போக்கில் அடங்கிய விஜய நாராயணச் சதுர்வேதி மங்கலத்துச் சபையானது, முதலாம் இராசராசனுடைய 16ஆம் ஆட்சியாண்டில் (1001) ஒரு பிராமணன் கோயிலுக்கு அளித்த இரு துண்டு நிலங்களுக்கு வரிவிலக்கு அளித்தபோது, அவ்வூரிலுள்ள **சடகோப விண்ணகரப் பெருமானடிகள்** கோயிலில் கூடியதாகக் கல்வெட்டுக் கூறுகிறது. (2/1927) இக்காலத்தில் ஆழ்வார் பெயராகிய சடகோபர் என்பது பிரசித்தமடைந்திருந்தது என்பதல்லாமல், கோயிலுக்கும் அப் பெயர் இடப்பட்டிருக்கிறது.

திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் கோயிலில் கி.பி. 1564 கல்வெட்டொன்றில் திருவாய்மொழி மண்டபம் எனப் பெயரிய ஒரு மண்டபம் அங்குக் கட்டப்பட்டதெனவும் அறிகிறோம்.

மேற்குறித்த காலங்களில் சடகோபர், திருவாய் மொழி என்ற பெயர்கள் சாசனங்களில் வழங்கிய போதிலும் நம்மாழ் வார் என்ற பெயர் வழக்கிலில்லை என்று தெரிகிறது. அன்றியும் இவ்வாறு காணப்படும் சாசனங்கள் சோழ நாட்டிலும் சோழ மன்னர் ஆட்சிக்குட்பட்ட வட பகுதியிலும் காணப்படுகின்றன வேயன்றிப் பாண்டிய நாட்டில் அதிகம் காணப்படவில்லை என்றும் தெரிகிறது.

இனி திருக்கண்ணபுரம் சௌரிராஜப் பெருமாள் ஆல யத்தில் முதல் பிரகாரத்திலுள்ள ஒரு தூணில் பெயர் குறிப் பிடாமல் ராஜகேசரி என்று மட்டும் சொல்லப்பட்ட சோழ மன்னனுடைய சாசனத்தைக் கோபிநாதராயர் எடுத்துக்காட்டி யிருக்கிறார். அரசன் பெயர் அதில் இல்லாத போதிலும் கூட எழுத்தமைதியைக் கொண்டு அவர், அச்சாசனம் ஆதித்த சோழனுக்கு உரியது என்று முடிவு செய்திருக்கிறார். அவர் முடிவு

செய்த காலம் 906, செந்தமிழில் இது பற்றி ஒரு கட்டுரை எழுதி இருக்கிறார், பிறகு இதைச் சென்னை சர்வகலாசாலையில் 1917 டிசம்பர் மாதத்தில் ஓர் அறக்கட்டளைச் சொற்பொழிவாய்ப் பேசியுமிருக்கிறார். அவர் குறிப்பிட்டதன் சாரம் பின்வருவது; ஆதித்தன் 908 வரையில் அரசாண்டான் குறித்த இந்தச் சாசனம் சடகோபன் என்ற பெயருடைய ஒருவன் அளித்த தர்மங்களைக் கூறுகிறது. ஒருவனுக்கு இப்பெயர் அமைவதானது இதற்கு நெடுங்காலம் முன்னமே சடகோபர் என்ற பெயருடையவர் வாழ்ந்திருந்து அவ்வுடைய புகழ் நாடெங்கும் பரவி பின்னால் வந்த ஒரு சாமானிய மனிதர் அப்பெயரைத் தரித்துக் கொள் வதற்கு இடம் கொடுத்திருக்கிறது ஆதித்தனுடைய ஆட்சிக் காலம் 871-908 சாசனத்தின் காலம் ஆதித்தனுடைய மூன்றாம் ஆட்சியாண்டு அதாவது 874, அதனால் இதன்படி பார்த்தால் சடகோபாழ்வார் வாழ்ந்த காலம் இதற்கு முற்பட்டகாலம், அதாவது 9ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதி என்பது ராயருடைய கருத்தாகும்.



# 5. நம்மாழ்வார் காலம்

நம்மாழ்வார் காலம் என்று நாம் பார்க்கும் போது இன்றி லிருந்து ஆயிரம் ஆண்டுகளேனும் காலத்தில் பின் நோக்கிச் செல்ல வேண்டியவர்களாகிறோம். காலத்தில் பின்னோக்கிச் செல்லச் செல்லச் சான்றுகள் கிடைப்பது குறைந்து கற்பனைக் கதைகளும் அற்புதக் கதைகளுமே மிகுதியாகின்றன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் சுமார் கி.பி. 845இல் சோழ சாம்ராஜ்யத்தை இன்றைய தஞ்சையில் விசயாலய சோழன் நிறுவினான். அது தொடங்கி ஓரளவு தமிழ்நாட்டின் பெரும்பகுதியில் அரச வரலாறு தொடர்பாய்க் காணப்படுகிறது. இலக்கியச் செய்தி களும் பெரும்பகுதி திருத்தமாயும் தொடர்பு பெறவும் அமைக்க முடிகிறது. இதற்கு முற்பட்ட காலத்தில் அவ்வாறு அமைக்க முடியவில்லை. பல்லவர் ஆட்சி சிறிது காலத்திற்குத் தொடர்பு பெற அமைகிறது. பாண்டியர் ஆட்சி வரலாறு அவ்வாறு அமையவில்லை. நம்மாழ்வார் பாண்டி நாட்டில் அவதரித்தவர். ஆதலால் ஆராய்ச்சிச் சான்றுகள் மிகவும் திருத்தமான தொடர்பு உடையனவாக அமையவில்லை. தவிர இவர் தமிழ் வேதம் செய்த வைணவ ஆழ்வாரும் ஆசாரியரும் ஆனமையால் விருப்பு வெறுப்புக்கள் ஆய்வின் போக்கைப் பாதிக்கவே செய்யும்.

ஒரு வைணவப் பெரியாரோடு பேசிக் கொண்டு இருந்த போது அபிமானம் என்பது எவ்வளவு தூரம் நமது ஆய்வைக் கோணச் செய்யும் என்று விசதமாகத் தெரிந்தது. நம்மாழ்வார் வரகுண மங்கையைப் பாடியிருக்கிறார். ஆகவே அவர் வரகுணன் காலம் அல்லது அடுத்த காலம் என்றவுடன் அவர் சிறிதும் தயங்காமல் இந்த வரகுணனுக்கு முன் எத்தனையோ வரகுணர் இருந்திருப்பார்கள். நமக்குத் தெரியாமல் இருக்கலாம். இவ்வாழ்வார் எந்த வரகுணன் காலம் என்று எப்படிச் சொல்ல முடியும் என்று பளிச்சென்று சொன்னார். ஆனால் மாணிக்க வாசகர் என்றவுடன் அவரைச் சேக்கிழார் சொல்லவில்லை. ஆகவே சேக்கிழார் காலமாகிய 12ஆம் நூற்றாண்டு அல்லது பிற்பட்டிருக்க வேண்டும் என்று ஒரே கணத்தில் சொன்னார். மற்றப்படி அவர் தெளிந்த சிந்தையும் கூர்த்த மதியும், சிறந்த

திருமால் பக்தியும் கொண்ட வைணவர். அபிமானம் எவ்வளவு தூரம் ஆய்வைக் கோணச் செய்யும் என்பதற்கு இது ஓர் உதாரணம். இந்த நிலையில்தான் நம்மாழ்வார் கால ஆய்வை மேற்கொண்டிருக்கிறோம்.

இதுகாறும் நம்மாழ்வார் வரலாறு, அவர் நூல்கள், சமய தத்துவம், அவர் புகழ் என்ற தலைப்புக்களில் யாம் கூறியவற்றை ஊன்றிப் படித்தவர்கள் சிறிதும் விருப்பு வெறுப்புக்கு இடங் கொடுக்காமல் நடுநிலையில் நின்றே இவ்வளவும் சொன்னோம் என்று காண்பார்கள். ஆகவே நம்மாழ்வார் காலமும் நடுநிலையில் நின்றே யாம் கணிக்கிறோம் என்று அவர்கள் காணமுடியும்.

இவர் காலத்தை ஆய்வதற்கு நமக்குக் கிடைக்கும் சான்றுகள் மூன்று வகை. முதலாவது சம்பிரதாயமான வரலாறுகள். இரண்டாவது கிடைக்கின்ற கல்வெட்டுக் குறிப்புக்கள். மூன்றாவது இவர் பாசுரங்களில் கிடைக்கும் குறிப்புக்களான அகச் சான்றுகள். இவற்றோடு பொருந்திக் காணக்கூடியவை, முந்தைய ஆராய்ச்சியாளர்கள் கண்ட முடிவுகள்.

### 1. சம்பிரதாயமான வரலாறுகள்

இவற்றைத் தெளிவாக முன்னமே இரு தலைப்புகளில் ஆராய்ந்திருக்கிறோம். ஒன்று ஆழ்வார் வரலாற்று ஆதாரங்கள் (பக்கம் 4, 14, 138) இரண்டு ஆழ்வார்களின் வரிசை முறை (பக்கம் 130). ஆழ்வார் ஆசாரியர் வரலாறுகள் கூறும் முதல் நூல் வடமொழியில் கருட வாகன பண்டிதர் இராமானுசர் உயிர் வாழ்ந்திருந்த காலத்திலேயே செய்த திவ்விய சூரி சரிதம் என்பது. இராமானுசர் தாம் செய்ய வந்த வேலையை முடித்து இருந்தார் என்றே பண்டிதர் தம் நூலை முடித்திருக்கிறார். அந்த நூலில் அவர் ஆழ்வார்கள் அவதாரம் செய்த யுகம் வருடம் முதலான செய்திகளைச் சொல்லவில்லை. மாதம் திதி நட்சத்திரம் மட்டுமே சொல்கிறார். அவரைத் தழுவித் தமிழில் (உரைநடை மணிப்பிரவாளத்தில்) சுமார் கி.பி. 1290இல் குரு பரம்பராப் பிரபாவம் (ஆறாயிரப்படி) என்ற நூல் செய்த பின் பழகிய பெருமாள் ஜீயரே முதலாவதாக ஆழ்வார்கள் பிறந்த வருடம் ஆண்டின் பெயர் முதலான செய்திகளைத் தருகிறார். இக்காலம் இராமானுசர் பரமபதம் அடைந்ததற்கு (1137) நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பின் ஆகும். இந்த நூலில் தான் முதன் முதலாக

முதலாழ்வார்கள் துவாபர யுகத்தில் பிறந்தார்கள் என்பதும் திருமழிசையாழ்வார் 3700 சம்லத்ஸரம் பகவதனுபவம் பண்ணிக் கொண்டிருந்தார் என்பதும் நம்மாழ்வார் கலியுகம் பிறந்த 4302ஆவது தினம் வெகுதான்ய வருஷத்தில் அவதாரம் செய் தார் என்பதும் முதலான செய்திகள் சொல்லப்படுகின்றன. பின் பழகிய பெருமான் ஜீயர் அருளிச் செய்த ஆறாயிரப்படி குரு பரம்பராப் பிரபாவத்தில் சொல்லப்பட்ட நம்மாழ்வார் வர லாற்றை இந்நூல் 3-10 பக்கங்களில் அப்படியே விரிவாகத் தந்தி ருக்கிறோம். இந்த மணிப்பிரவாள நூலே தமிழில் முதலாவதாக ஆழ்வார் ஆசாரியர் வரலாற்றைக் கூறும் நூல். இது வைகுந்த நாதன் தொடங்கி நம்மாழ்வார் வரையுள்ள ஆழ்வார் பரம்பரை யையும், பின்னர் நம்மாழ்வார் நாத முனிகள் யமுனைத் துறைவர் இளையாழ்வார், எம்பார் பட்டா நஞ்சீயர் நம்பிள்ளை ஆகிய ஆசாரியர் பிரபாவங்களையும் அழகாக எடுத்துரைக்கிறது. உரைக்கும் முறையில் படிப்போர் அனைவரும் உள்ளத்தைப் பறிகொடுத்து நிற்பர் என்பதில் ஐயமில்லை. ஆனால் மணிப் பிர்வாளத்தைப் படித்துச் சுவைக்க மட்டும் கற்றுக் கொள்ள வேண்டும். இவ்வாறு காட்டிய இரு பகுதிகளில், நாதமுனிகள் தொடங்கி நம்பிள்ளை வரையுள்ள ஆசாரியர் வரலாறு, வர லாற்று முறைக்குப் பொருத்தமாய், கால உணர்வுக்கும் பொருத்த மாய், அமானுஷியமாயில்லாமல், மிகவும் தெளிவாய் அமைந் திருக்கிறது. சில சொந்தக் கருத்து வேற்றுமைகளையும் மிகைப் படுத்திய கூற்றுக்களையும் விலக்கி முழுமையும் அப்படியே மெய்யென்று கொள்வதில் எந்தத் தடையும் இருக்க முடியாது.

ஆனால் முதற்பகுதியாகிய ஆழ்வார் வரலாறு அப்படி இல்லை. அங்கு சம்பிரதாயச் செய்திகளே உள்ளனவாதலால், காலக்கண் கொண்டு பார்க்குமிடத்து அவ்வளவும் அப்படியே உண்மையென்று இக்கால அறிவியல் ஆராய்ச்சி உலகம் ஏற்றுக் கொள்ளாது. இது ஆழ்வார் வரலாற்றுக்கும் சைவ நாயன்மார் வரலாற்றுக்கும் ஒப்பக்கூடிய செய்தி. எனவே இந்த நிலைமை களை மனத்தில் இருத்திக் குரு பரம்பரை கூறுவதைக் காண்போம்.

"எம்பெருமான் இவரிடத்திலேற் பாரெல்லாம் உய்யும் படி சேனை முதலியாரை நம்மாழ்வாராகக் கலி யுகாதியிலே கலிதினம் நாலாயிரத்து முந்நூற்றிரண்டு நாள் சென்ற வர்த்த மாந பஹு̃தாந்ய வருடத்தில் வசந்த ருதுவில் வைகாசி மாதம்

சுக்ல பக்ஷம் பௌர்ணமி கூடிய திருவைசாக நக்ஷத்திரத்தில் காவ்ய வாஸா கர்க்கடக லக்நத்திலே திவ்ய யோக கரணங்களிலே ஆதித்ய திவாகராக்யுத பாநுக்கள் உதயத்திலே, நீங்காத உள்ளிருள் நீங்கிச் சோஷியாத பிறவிக் கடல் சோஷித்து விகஸி யாத போதிற் கமல மலரும்படி வகுள பூஷண பாஸ்கரோதய முண்டாயிற்று உடைய நங்கையாராகிய பூர்வ சந்த்யையிலே.

இது நம்மாழ்வாருடைய அவதார ஜாதகம். கலியுகம் பிறந்த 4302ஆவது நாளென்றால் கலியுகம் பிறந்த 11ஆவது வருஷம் 6 மாதம் 6 நாள் ஆகிறது. இது கி.மு. 3112ஆம் வருஷத்திற்குச் சமம். இந்த ஆண்டில் நம்மாழ்வார் அவதாரம் செய்தார் என்பது எந்த வகையாலும் மொழியாராய்ச்சிக்கும் வரலாற்று ஆராய்ச்சிக்கும் பொருந்தி வரக்கூடியதன்று. ஆழ்வார் பாடலில் திருக்குறள் காணப்படுகிறது; திருக்குறள் (பலர் கருதுவது போல) கி.மு. 32ஆம் நூற்றாண்டு என்று யாரும் சொல்வதில்லை. ஆழ்வார் பாடல்களின் சொல்நடை பொருள் எல்லாம், சங்க நூல்களின் காலத்திற்குச் சிறிது காலம் பிற்பட்ட நூலாகிய (கி.பி. இரண் டாம் நூற்றாண்டுக்குரிய) திருக்குறளுக்கும் பலகாலம் பிற் பட்டே எழுந்தன என்பதைத் தெரிவிக்கும்.

மேலும் நாத முனிகள் தம்மூராகிய காட்டுமன்னார் கோயிலில் (பின்னால் வீர நாராயணபுரம் என்று பெயர் பெறு கிறது). முதன் முதலில் நம்மாழ்வாருடைய திருக்குடந்தை ஆராவமுதன் பாசுரத்தைக் கேட்டார் என்பது வரலாறு. ஆனால் நாதமுனிகள் காலமே நம்மாழ்வார் காலத்தைக் கொண்டு நிச் சயிக்கத்தக்கதாயிருப்பதால் இச்செய்தி நம்மாழ்வார் கால நிர்ணயத்திற்கு அதிகம் பயன்படாது. இருப்பினும் இராமானுசர் 1017இல் பிறந்தார். அவர் இளம்பிள்ளையாய் இருந்தபோது ஆளவந்தார் அவரைத் தெரியாமல் வந்து பார்த்து அவரது ஆற்றலைக் கண்டு மகிழ்ந்தார் என்றும் வரலாறு. ஆளவந்தார் நாதமுனிகள் பெயரர். அவர் இறந்தபின் பிறந்தார். நாதமுனி கள் இதற்குமுன் காலமாகி விட்டார். நாதமுனிகள் பராங்குச தாசரைச் சந்தித்தார். பராங்குசதாசர் மதுரகவிகளின் சீடர். மதுரகவி வயது முதிர்ந்தவர், இளைஞரான நம்மாழ்வாரின் சீடர் என்ற சம்பிரதாயச் செய்திகளை நாம் அப்படியே ஏற்றுக் கொண்டு பார்த்தாலும், நம்மாழ்வாரின் காலம் சுமார் கி.பி. 800ஐ ஒட்டி வருதல் கூடும்.

## 2. கல்வெட்டுச் சான்றுகள்

இவை 144-146 பக்கங்களில் சுருக்கித் தரப்பட்டு உள்ளன. இவற்றில் காட்டியபடி,

1. முதலாம் இராசராசன் காலத்தில் (கி.பி. 998) திருவாய் மொழித்தேவர் என்ற பெயர் ஆட்சிக்கு வந்து விட்டது.

2. அதே காலத்தில் (கி.பி.1001) சடகோபர் என்ற பெயர் ஆட்சிக்கு வந்து விட்டது.

3. 1031, 1038, 1048 முதலான ஆண்டுகளில் திருவாய் மொழி விண்ணப்பம் செய்ய நிபந்தங்கள் அளிக்கப் பெற்றன.

இவற்றால் கி.பி. 998க்கு முன்னதாக நம்மாழ்வார் பெயரான சடகோபர் என்பதும் அவரது திருவாய்மொழியும் சோழ நாட்டில் பிரசித்தம் அடைந்திருந்தன என்பது மிகவும் தெளிவு. சொந்த நாட்டில் (பாண்டி நாட்டில்) பிரசித்தம் பெறுவதற்கு 100 ஆண்டுகள். அயல் நாடாகிய சோழநாட்டில் பிரசித்தம் ஆவதற்குப் பின்னும் 50 ஆண்டுகள் என்று கொண்டாலும், ஆழ்வார் காலம் கி.பி. 1000க்கு 150 ஆண்டுகளேனும் முற்பட்டிருக்க வேண்டும் என்று சாமானியமாகக் காலவரையறை செய்யலாம். அதாவது கி.பி. 850க்கு முன். இதனால் இதற்குப் பிற்பட்ட காலம் என்று சொல்வோர் கூற்றெல்லாம் மறுக்கப்பட்டுப் போகிறது.

## 3. அகச்சான்றுகள்

முன்னமே திருக்குறளைக் குறிப்பிட்டோம்.

ஊரவர் கவ்வை எருவாக அன்னை சொல்
நீராக நீளும் இந் நோய்.

என்ற குறட்பாடலை இவர் ஒரு பாசுரத்தில் முழுமையாக எடுத்தமைத்திருக்கிறார்.

ஊரவர் கவ்வை எருவிட்டு அன்னை சொல் நீர்படுத்து
ஈரநல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்.

இவ்வாறு இவர் குறளை எடுத்து அமைப்பதால் இவர் காலம் கலியின் பிறப்பையொட்டி என்பார் கூற்று பொருந்தாததாகி, குறளின் காலமாகிய இரண்டாம் நூற்றாண்டுக்கு இவர் பிற்பட்டவராகிறார்.

இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும் வலிந்து வாது செய்வீர்களும் மற்றும் தெய்வமுமாகி நின்றான்.

இங்கு ஆழ்வார் இலிங்க புராணத்தைக் கூறுகிறார். இது 18 புராணங்களில் சிவ புராணமாக உள்ள பத்தினுள் ஒன்று. இதன் காலம் கிறிஸ்து பிறந்த பின்னரே. இதனாலும் மேற்கூறிய கருத்து உறுதியாகும்.

இதேபாடலில் ஆழ்வார் சமணரையும் சாக்கியரையும் சொல்லுகிறார். ஆழ்வார் வரலாற்றில் சமணர் பௌத்தர் பேச்சே வரவில்லை. (திருமங்கையாழ்வார் நாகையில் பௌத்த விகாரத்தை அழித்தார் என்ற கதை ஒன்று தவிர) எந்த ஆழ்வார் வரலாற்றிலும் எங்குமே சமண பௌத்தர் பேச்சு வரவில்லை. சைவ நாயன்மாருள் சம்பந்தர் அப்பர் ஆகிய இருவர் வரலாறும் சமணத்தோடு தொடர்புடையது. அப்பர் சமணத்தால் பெருந் துன்புற்று அதிலிருந்து மீண்டு தம்மைத் துன்பத்துக்குள்ளாக்கிய மகேந்திர பல்லவ மன்னனையே சைவம் சாரும்படி செய்த பெருமை உடையவர். சம்பந்தரோ சமணமே ஓங்கியிருந்த பாண்டி நாட்டுக்குச் சென்று, சமணரோடு பல வாதுகள் நிகழ்த்தி, சமணனாக மாறியிருந்த பாண்டிய மன்னனையும் நாட்டு மக்கள் அனைவரையும் மீண்டும் சைவத்துக்குக் கொணர்ந்தார். இவ்வாறு இவரால் திருத்தி ஆட்கொள்ளப் பட்ட பாண்டி மன்னன் நெல்வேலி வென்ற நின்ற சீர் நெடு மாறன் என்று சிறப்பிக்கப்பட்ட மாறவர்மன் அரிகேசரி என்ற பாண்டியன். இவன் ஆட்சிக் காலம் கி.பி. 640 முதல் 670 வரை என்று பாண்டியர் வரலாறுகள் கூறும்.

மேலும் சம்பந்தர் பாண்டி நாட்டிலிருந்து சோழ நாட்டுக்கு மீண்ட போது வழியில் பௌத்த சமயத்தார் சந்தித்து இவரோடு வாதிட்டார்கள் என்று பெரிய புராணம் கூறுகிறது.

எனவே எந்த ஆழ்வார் வரலாற்றிலும் சமணரும் சாக்கியரும் இடம் பெறாமையால் நம் ஆழ்வார், சமணரும் சாக்கியரும் வலிந்து வாது செய்கிறார்கள் என்று பாடும் போது, இது அவருடைய அனுபவம் அல்ல, பிறருடைய அனுபவத்தைச் சொல்கிறார் என்றுதான் நாம் கருத வேண்டும். இவ்வாறு பிறருக்கு அனுபவம் ஏற்பட்டதென்றால் அது அப்பர் சம்பந்தர் அனுபவமே. இதை நாம் நன்கு ஊன்றிச் சிந்திக்கும் போது இவ்

வலிந்த வாதைக் கூறுகின்ற ஆழ்வார், வலிந்த வாதில் ஈடுபட்ட அப்பர் சம்பந்தருக்குப் பின் வந்தவர் என்றே கருத வேண்டும். இலிங்கத்திட்ட புராணத்தீர் என்பது சைவரை. சிறப்பாகச் சைவம் பரப்பினோர் மேற்கூறிய இரு நாயன்மார் ஆகிய சைவ சமயா சாரியர். இவ்விருவர் காலமும் முறையே 590-671, 635-656 ஆகும்.

இனி நம்மாழ்வார் பாடலில் காணும் இரு முக்கியக் குறிப் புக்கள் கருத்துக்களே. அவையே திட்டமாக இவருடைய காலம் இன்னது என்று வரையறுக்கப் பயன்படுகின்றன. அக்குறிப்புக் களாவன - சீவர மங்கலம் வரகுண மங்கை என்ற இரு தலங்களும் இவர் பாடல்கள் பாடினார் என்பது. இவ்விரண்டும் இவர் காலம் பற்றிய எல்லாச் செய்திகளையும் தெளிவுபடுத்த உதவுகின்றன.

**சீவர மங்கலம் (ஸ்ரீவரமங்கை, மங்கலம்):**

இத்திருப்பதி இன்று தோதாத்திரி, நாங்குனேரி, வானமா மலை என்ற பெயர்களாலும் வழங்குகிறது. இங்குத் திருமால் தெய்வ நாயகர் தாயார் இச்சீவரமங்கைத் தாயார். திருவாய் மொழி 5ஆம் பத்தில் 7ஆம் திருமொழி 11 பாடல்களும் இத் தலத்துக்கு உரியன. சிரீவர மங்கை (மங்கலம்) என்ற எல்லாப் பாடல்களிலும் ஆழ்வார் பெயர் குறிப்பிடுகிறார். வானமா மலையே என்று ஆறாம் பாடலிலும் தெய்வநாயகன் என்று பத்து பதினோராம் பாடல்களிலும் கூறுகிறார். அன்றி இங்கு திருமால் வீற்றிருந்த கோலம்; இதை 1, 4ஆம் பாடல்களில் வீற்றிருந்தாய் எந்தாய் என்றும், இருந்தாய் என்றும் 3, 5, 9 பாடல்களிலும் குறிப்பிடுகிறார். இத்திருப்பதியை இவர் புகழ்ந்து கூறும் செய்திகள் அறியத்தக்கன: இது செல்வ மிக்க நகர்; மணிமாடம் நீடு சிரீவர மங்கை (28) கரும்பும் பெருஞ் செந் நெல்லும் மலிவது (10). சேற்றுத் தாமரைச் செந்நிநலூடு மலர்வது (1) ஞானத்தால் வேத வேள்வியறா (4), வேள்வி செந்தொழிலர் வேத வேள்வியறா (7) நான்மறை வல்லவர் (3, 9).

இனி இத்தல வரலாறு அறியத்தக்கது. மாறவர்மன் அரிகேசரி பராங்குசன் (715-765) என்ற பாண்டி மன்னனுடைய புதல்வனான நெடுஞ்சடையன் பராந்தகன் (765-796) ஸ்ரீவரன் என்ற பட்டப் பெயரும் உடையவன். வேலங்குடி என்ற பழைய பெயர் உடையதாயிருந்த இவ்வூருக்கு இவன் தன் பெயரைச் சூட்டி ஸ்ரீவர மங்கலம் எனப்பெயரிட்டு இதை மகத நாட்டு

மறையவனான பெஜ்ஜடபட்டன் என்பவனுக்குத் தானமாக அளித்தான். இவனது ஆட்சியாண்டு எழுந்த பிரசித்தி பெற்ற ஸ்ரீவர மங்கலச் செப்பேடு இத்தானத்தைச் சாசனம் செய்வதாகும். இவன் சிறந்த திருமால் பக்தன் என்பதை இச்சாசனத்துள் பயிலும் 'பரமவைஷ்ணவன் தானாகியும்' என்ற வரி உணர்த்தும்.

இப்பாண்டி மன்னன் தன் பெயரால் சீவர மங்கலம் என்ற இத்தலத்தைப் புதுப் பெயரிட்டுத் தானம் செய்திருப்பதாலும், இங்கு எழுந்தருளியுள்ள திருமாலை நம்மாழ்வார் பாடியிருப்பதாலும் ஆழ்வார் இவன் காலமாகிய 765-790க்குள் அல்லது பிற்பட்டு வாழ்ந்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

**வரகுண மங்கை**

வரகுண மங்கையை ஆழ்வார் குறிப்பிடுவது இவர் வரலாற்றை நிர்ணயிப்பதற்கு மற்றொரு முக்கிய சான்றாகும். இவ்வூருக்கு இவர் தனியே ஒரு திருமொழிப் பாடாவிட்டாலும், திருப்புளிங்குடிக்குப் பாடிய 9-2 திருவாய்மொழியின் நான்காம் பாடலில் வரகுண மங்கையில் இருந்த கோலத்தைக் குறிப்பிடுகிறார்.

புளிங்குடிக் கிடந்து வர குண மங்கையிலிருந்து
  வைகுந்தத்துள் நின்று
தெளிந்த என்சிந்தை அகம்கழி யாதே
  என்னையாள்வாய் எனக் கருளி
நனிந்தசீ ருலகம் மூன் றுடன் வியப்ப
  நாங்கள் அத் தவடிநின் றார்ப்பப்
பளிங்குநீர் முகிலின் பவளம் போல் கனிவாய்ப்
  சிவப்பநீ காண வா ராயே.

இவ்வரகுண மங்கை என்ற திருப்பதி ஆழ்வார் அவதரித்த திருக்குருகூருக்கு அருகிலும் சீவைகுண்டம் என்ற மற்றொரு திருப்பதிக்கும் அருகிலும் உள்ளது. வரகுண மங்கை வரகுண மங்கலம், இது, ஸ்ரீ வர பாண்டியன் அமைத்த ஊர் ஸ்ரீவர எனப் பெயர் பெற்றாற் போல் வரகுண பாண்டியனால் அமைக்கப் பெற்று வரகுண மங்கலம் எனப்பெயர் பெற்றது. இப்பாண்டியர் வரலாற்றை அறிவதற்குக் கல்வெட்டு ஆய்வாளர் வகுத்து உள்ள பாண்டியர் பரம்பரை அட்டவணை துணை புரியும்.

| | |
|---|---|
| மாறவர்மன் அரிகேசரி பராங்குசன் | கி.பி. 710-765 |
| நெடுஞ்சடையன் பராந்தகன் - வைணவன் | 765-790 |
| இராசசிம்ம பாண்டியன் II | 790-792 |
| வரகுண பாண்டியன் I - சைவன் | 792-835 |
| ஸ்ரீமாறன் சீவல்லபன் | 835-862 |
| வரகுண பாண்டியன் II | 862- 880 |
| பராந்தக பாண்டியன் | 880-900 |
| இராசசிம்மன் III | 900- 920 |

இப்பட்டியலில் வரகுண பாண்டியன் என்ற பெயரோடு இரு பாண்டியரை நாம் பார்க்கிறோம். இவ்விருவரில் முதலாம் வரகுணனே மங்கையைத் தோற்றுவித்தவன். பிந்தி வருகின்ற இரண்டாம் வரகுணன் இடவைப் போரில் ஆதித்த சோழனை வென்றவன்; அவனே பின்னால் அதே ஆதித்த சோழனால் திருப்புறம்பயம் போரில் முறியடிக்கப்பட்டு, பின்னால் சோழ நாட்டில் எவ்வித ஆதிக்கமும் இன்றி ஒடுக்கப்பட்டவன். திருக்கோவையார் குறிப்பிடும் வரகுணன் இவ்விரண்டாம் வரகுணனே. இவன் மிகச் சிறந்த சிவபக்தன் இவனுடைய சிவபக்திச் செயல்கள் பட்டினத்தாரால், திருவிடை மருதூர் மும்மணிக்கோவையில் போற்றப் பெறுகின்றன. மாணிக்கவாசகர் காலத்துக்குரிய பாண்டியன் இவனே. இவன் நம்மாழ்வார் காலத்துக்குரியவனென்று கொள்ள முடியாது. ஆதலால் நம்மாழ்வார் பாடும் வரகுண மங்கை என்ற தலத்தைத் தோற்றுவித்தவன் முதலாம் வரகுணனே (792-835).

எனவே சீவர மங்கை, வரகுண மங்கை என்ற இரு தலங்களையும் ஆழ்வார் பாடியுள்ள தன்மையால் இவர் இவற்றுக்குரிய பாண்டியர் காலங்களில் (765-835) வாழ்ந்தவராதல் வேண்டும் என்பது பெறப்படுகிறது. ஆழ்வார் இத்தலங்களைப் பிற்காலத்தில் பாடியிருக்கலாம். ஆயினும் பிற்காலப் பாண்டியர் வரலாறு அவருடைய வரலாற்றுக்குப் பொருந்தி வரவில்லை. அன்றியும் வேறு வரலாறுகளால் நாதமுனிகள் காலம் 823-918 என்று அறிகிறோம். மேலும் நாதமுனி கலிகால மரபில் பிறந்த ஆளவந்தார் இராமானுசர் ஆகியோர் வரலாறுகள் 920-1037, 1017-1137 என்றெல்லாம் தெளிவாக ஏற்படுவதால்,* இவ்வாழ்வார்

---

* இக்காலங்களுக்குரிய எமது 10, 11 நூற்றாண்டுகளின் இலக்கிய வரலாறு பார்க்க.

வரலாற்றைப் பின்னால் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ள ஆசாரியர்கள் வரலாற்றோடு சேர்த்துப் பார்க்கும் போது, முதலாம் வரகுண மன்னன் காலமே இவருக்குரிய காலமாக முடிவு செய்வது திருத்தமாகும். ஆழ்வார் 35 திருநட்சத்திரம் வாழ்ந்தார் என்று அறியும் போது இவருடைய காலம் 785-820 என்றும் கொள்வது பொருந்தி வரலாம்.

## 4. ஆராய்ச்சியாளர் முடிவுகள்

ஆங்கிலத்தில் வரலாறு எழுதியவர்களில் எம். சீனிவாசய்யங் கார் எழுதிய தமிழாய்வுகள் என்ற நூலும் (1914), கோபிநாத ராயரின் ஆழ்வார்கள் காலம் என்ற நூலுமே (1917) கருதத்தக்கன. ஏனையவற்றில் காலம் எதுவுமில்லை, அனேகர் ஏனிந்த வம்பு என்று காலமே பேசவில்லை.

சீனிவாசய்யங்கார் கருத்துக்கள் : குரு பரம்பரை நூல்கள் இவர் காலம் கி.மு. 3102 என்றும், இவர் அரி அவதாரமாக இருந்தே நாதமுனிகளுக்கு ஆசாரியரானார் என்றும் சொல்லும். ஆங்கிலம் கற்ற ஆராய்ச்சியாளர் இவர். ஆழ்வாருள் இறுதியானவர் காலம் கி.பி. 10ஆம் நூற்றாண்டுத் தொடக்கம் என்று கூறுவர். வாசகம், கிருமிகண்டம் உபகாரம் கதிமூடம் கோதி போதனை கண்ட ளன் அரவிந்த லோகனன் மாதா பிதுவு, மதுர போகம், இந்திர ஞாலம் மாக லெகுந்தம் (விரோதம்) முதலான பிற்காலச் சொற் களை இவர் கூறுவதால் இவர் சங்ககாலத்துக்குப் பிற்பட்டவர். இது என்ற நிகழ்கால இலக்கண வழக்கு பூவும் புகையும் விளக்கும் கந்தமும் நீரும் என்ற பூசை வழக்கு, வெற்றிலை என்ற குறிப்பு, சைனமும் பௌத்தமும் மறைந்து சைவமும் வைணவமும் ஓரளவு தோழமை பூண்டு வாழ்ந்த நிலை, வரகுண மங்கை, சீவர மங்கை என்ற தலங்களை இவர் பாடியவர் என்றும், (திருக் குறுங்குடியில் தங்கிய திருமங்கையாழ்வார் சீவலமங்கையைப் பாடாமை, பெரியாழ்வாரின் சீவிலிபுத்தூர் திருமங்கையும் நம் மாழ்வாரும் பாடாமையால் அப்பதி பண்டைய பதியன்று. ஆகவே பெரியாழ்வார் சடகோபருக்கு மூத்தவராய்ச் சம காலத்தில் வாழ்ந்திருத்தல் கூடும் என்ற முடிவு, நம்மாழ்வாருக்கு மட்டும் பண்கள் பழமையாகக் குறிப்பிடப்பட்டு ஏனையோ ருக்குக் குறிப்பிடப்படாமை ஆகியவை முக்கியமானவை.

ஆனைமலைச் சாசன மொன்றிலிருந்து திருமால் கோயில் கட்டிய மதுரகவி என்பவர் பாண்டியன் அமைச்சராயிருந்தார்.

அவர் மாறன் புதல்வர் என்ற செய்தி குறிப்பிடப்படுகிறது. மதுரகவி அந்தணர் நம்மாழ்வாரின் சீடர். காரிமாறப் பிரான் என்று ஆழ்வாருக்குப் பெயர் வழங்கியதால் மதுரகவி இவர் புதல்வர் என்று சொல்வதற்கில்லை. அவர் வேறு, நம்மாழ்வார் சீடர் மதுரகவி வேறு என்பது தெளிவு. குருகூர் என்ற பெயர் ஒரு தளிப்பெண்டின் பெயராக ராசராசன் கல்வெட்டில் அமைந் திருப்பதும், திருவாய் மொழித்தேவர் என்ற பெயர் அவ்வாறு வந்திருப்பதும் இயல்வே. இவை ஆழ்வார் காலத்தால் இராச ராசனுக்கு முற்பட்டவர் என்பதை மட்டுமே காட்டும். மற்றும் நாதமுனிகள் வரலாற்றில் வரும் வீரநாராயணபுரம், கங்கை கொண்ட சோழபுரம் என்ற நகரப் பெயர்களை மட்டும் வைத்துக் கொண்டு அவருடைய காலம் இராசேந்திர சோழன் (1012-1044) காலம் என்று சொல்வது பொருத்தமன்று என்று வேறிடத்தில் விளக்கியிருக்கிறோம். இதைக் கொண்டு நம்மாழ்வார் காலம் பிற்பட்டது. 11ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என்று கூறுவதும் பொருந்தாது.

கோபிநாத ராயரே முதல் முதலாகத் தம் காலத்தில் கிடைத்த எல்லாச் செய்திகளையும் குருபரம்பரை வரலாறுகள் கல்வெட்டுச் சான்றுகள் ஆராய்ந்து தமது சென்னைச் சர்வ கலாசாலைச் சொற்பொழிவுகளில் நம்மாழ்வார் காலத்தைத் தெளிவு செய்திருக்கிறார். ஆதித்த சோழனுடைய சாசனம் ஒன்றால் (திருக்கண்ணபுரம்) சடகோபன் என்ற பெயரை கி.பி. 908இன் முன் ஒருவன் தரித்திருந்தான் என்பது தெரிகிறது. சடகோபன் என்ற பெயர் இவ்வாழ்வாருக்கே உரியது. ஆகவே இப்பெயர் பிரபலமாகி அதை ஒருவன் தரித்துக் கொள்வதற்குக் காலம் கொஞ்சம் பிடிக்குமாதலால் ஆழ்வார் 9ஆம் நூற்றாண் டின் முற்பாதியில் வாழ்ந்தவராய்க் கொள்வது பொருந்தும் என்று எழுதுகிறார்.

தமிழில் இலக்கிய வரலாறோ நம்மாழ்வார் வரலாறே எழுதியவர்கள் யாரும், இவர் காலத்தைக் கணக்கிடவில்லை. ஆழ்வார்கள் காலநிலை எழுதிய மு. இராகவையங்கார் அவர்கள் நம்மாழ்வார் காலம் எழுதவில்லை. டாக்டர் ராசமாணிக்கம் ஆழ்வார் காலம் கணக்கிடுமிடத்து, இவ்வாழ்வார் காலம் முதல் வரகுணன் காலமே என்று முடித்தார்.

இவ்வாறு ஐதிகக் கதைகளை மறுத்து அதாவது ஆழ்வார் கள் துவாபரயுகம் கலியுகம் தொடக்கம் என்ற போலிக் கதை

களை விட்டு, நிகழ்காலத்தில் இறங்கி இராமானுசர் அமுதனார் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு நோக்கினால், முன் விரிவாய்க் காட்டியவாறு ஆழ்வார் கி.பி. 785-820 ஆகிய காலப்பகுதியில் வாழ்ந்தவர் என்பது தெளிவாகும். நம்மாழ்வார் காலத்தைக் குறித்துப் பூரணலிங்கம்பிள்ளை சில சொற்கள் கூறுகிறார். நம் நாட்டில் வெற்றிலை நுழைந்த காலம் 6ஆம் நூற்றாண்டு. வெற்றிலை வெள்ளிலை அடைக்காய் இலையமுது திவரியல் என்றெல்லாம் பாசுரங்களில் இது சொல்லப் பெறு கிறது. நம்மாழ்வார் 'தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' (3517) என்று கூறுகிறார். இவர் காலத்தில் சீவில்லிபுத்தூர் சிறப் பான வைணவத் தலமாகவில்லை; ஆகவே அதை இவர் பாட வில்லை, இவருடைய பாடல்களில் சமண பௌத்த கண்டனம் காணப்படவில்லை. நாதமுனிகளும் மதுரகவியும் இவருடைய சீடர் என்றால், இவர் 9ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் பிறந்து ஒரு நூறு ஆண்டு வாழ்ந்தார் என்று கருதுவது நியாய மாகும். சமயப்பூசல் மறைந்த 9ஆம் நூற்றாண்டிலாயினும் இவர் வாழ்ந்தார் என்பதே ஆராய்ச்சியாளர் முடிவு.

இது ஒரு தெளிவில்லாத கூற்று. காலம் 7 அல்லது 9ஆம் நூற்றாண்டு என்று சொல்வது முடிவாகாது. அடைக்காய் வெற்றிலைப்பை - அடைப்பை சிலப்பதிகாரத்தில் சொல்லப் பட்டது (14.128) காலம் 2-3 ஆம் நூற்றாண்டு எனவே, இக்குறிப்புப் பயன்படாது. மற்றும் சீவிலிபுத்தூர் நம்மாழ்வார் காலத்தில் சிறப்படையவில்லை. ஆகவே இவர் பாடவில்லை என்கிறார். பெரியாழ்வார் - ஆண்டாள் வரலாறுகளால் இந்நகர் மிக்க பிர சித்தி அடைந்தது. இவர் கருத்துப்படி அவ்விருவரும் நம்மாழ் வாருக்கும் பிற்பட்டவர் என்றாகிறது. இது சரியன்று. பெரி யாழ்வார் வரலாற்றில் இது பரிசீலிக்கப்படும்.

வெற்றிலை குறித்து இவர் கூறியவற்றைச் சீனிவாசபிள்ளை தம் தமிழ் வரலாறு இரண்டாம் பாகத்தில் (1930 ஆம் ஆண்டுப் பதிப்பு பக்கம் 172, 173) நன்கு மறுத்திருக்கிறார். அவர் கூறும் முக்கியமான ஒரு கருத்து, "காவிரிப் பூம்பட்டினத்தருகே இலையமுது கூடம் என ஓர் ஊர் இன்றும் உள்ளது. இது கி.பி. 5ஆம் நூற்றாண்டு வரையில் (கி.மு. 2ஆம் நூற்றாண்டு தொடங்கி) பிரசித்த நகராயிருந்த புகார் நகரத்தில் வெற்றிலை வியாபாரம் செய்த இடம்' என்பதாகும். அன்றியும், கி.மு. 6 ஆம் நூற்றாண் டுக்கு முன் தமிழ்நாட்டில் எழுதப்பட்ட வடமொழி ஆகமங்

களில், தெய்வ நிவேதனப் பொருளாகத் தாம்பூலம் முக்கியப் பொருளாய்ச் சொல்லப்பட்டுள்ளது. இவ்வாதாரங்களால் வெற்றிலைக் குறிப்பு காலத்தால் பிற்பட்டது என்ற கூற்று பிழை பட்டுப் போகிறது.

**சில கூற்றுக்கள்**

மணவாள மாமுனிகள் தம் உபதேச ரத்தின மாலை நாலாம் பாடலில் ஆழ்வார்களைப் பற்றிப் பேசுகிறார்.

> **பொய்கையார் பூதத்தார் பேயர் புகழ் மழிசை**
> **அய்யன் அருள்மாறன் சேரலர்கோன் – துய்யபட்ட**
> **நாதன் அன்பர் தாள்தூளி நற்பாணன் நன்கலியன்**
> **ஈதிவர்தோற் றத்தடைவாம் இங்கு.**

இது ஆழ்வார் தோற்றத்தடைவு என்று அவரே சொல்லுவதால், இதில் சொல்லப்பட்ட வரிசைமுறை திருத்தமானது, இதுவே கொள்ளத்தகுந்தது என்று சிலர் சொல்லக் கேட்டிருக்கிறோம். உண்மை அப்படி இல்லை, மாமுனிகள் (1369-1433) நம்மாழ் வாருக்குப் பின் 500 ஆண்டுகள் கழித்து வாழ்ந்தவர். ஆனால் திருவரங்கத்தமுதனார் (சுமார் 1100) இதைப் பார்க்க மிக நெருங்கிய காலத்தில் வாழ்ந்தவர். அன்றியும் அவருடைய பாடல்கள் இராமானுசராலேயே ஒப்புக் கொள்ளப்பட்டமை யால் அவர் சொல்லிய முறை திருத்தமுடையது என்று நாம் கருத வேண்டும். அவர் ஆழ்வார் வரிசையைச் சொல்லி வரவில்லை; இருப்பினும் அவருடைய கருத்தையும் இங்கு காட்ட எண்ணி னோம். மாறனை இடையில் வைத்துப் பேசியது முதலான முறைகள் கொள்ளத்தக்கன அல்ல.

காலம் பற்றிய ஆய்வில் உண்மையாகவே ஈடுபட்டு ஏதேனும் ஆய்வு நிகழ்த்தியவர்கள் மிகச்சிலரே. கா. சுப்பிரமணியப்பிள்ளை, மு. வரதராசன் போன்றோர் இது பற்றி எதுவும் சொல்லவில்லை. மு. இராகவையங்கார் தம் ஆழ்வார்கள் காலநிலை முதல் பாகத் தில் இதை எழுதவில்லை. பிற ஆழ்வார் காலமே ஆராய்ந்தார். இரண்டாம் பாகம் எழுதவில்லை ஆகவே இதை ஆராயவில்லை. எனினும் இவர் கலைக்களஞ்சியத்தில் எழுதியபோது, "காலம் 7 முதல் 9 நூற்றாண்டுக்குள் எனக் கொள்ளத்தகும். நாதமுனிகள் 10ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார்" என்று எழுதியுள்ளார். ஆழ் வார் காலம் 8 இறுதி 9 தொடக்கம் என்று வேறிடத்தில் நிறுவி இருக்கிறோம். நாதமுனிகள் 823 முதல் 918க்குள் வாழ்ந்தவர்.

ஆதலால் அவர் காலம் 10ஆம் நூற்றாண்டு என்றதை ஓரளவு பொருந்த உணர்ந்து கொள்ளலாம். நாதமுனிகள் நம்மாழ்வாரை நேரில் பார்க்கவில்லை. நம்மாழ்வார் அர்ச்சையாகத்தான் நாத முனிகளுக்கு அருள்கரந்தார். ஆதலால் நம்மாழ்வார் காலத்தை முன் காட்டியவாறு கொள்வதே உண்மை மட்டுமன்று, பின் எல்லாக் கருத்துக்களையும் உள்ளடக்கிய முடிவுமாகும்.

திரு. வையாபுரிப்பிள்ளை அவர்கள் நம்மாழ்வார் காலத்தை ஆராய்ந்திருக்கிறார். இவர், வீரநாராயணபுரத்தில் நாதமுனிகள் பிறந்தார். கங்கை கொண்ட சோழபுரத்தில் இறந்தார் என்று சொல்லி வீரநாராயணனாகிய பராந்தகச் சோழனுடைய காலம் கி.பி. 907-953 என்றும், கங்கை கொண்ட சோழபுரம் கட்டிய இராஜேந்திர சோழனுடைய காலம் கி.பி. 1012-1044 என்றும் எழுதியிருக்கிறார். இந்தத் தேதிகள் வரலாற்றில் ஒப்புக் கொள்ளப்பட்ட தேதிகள், நாதமுனிகளுக்கு நம்மாழ்வார் நாலாயிரத்தை அருள் செய்த காலம் கி.பி. 935 என்றும், நாத முனிகள் வாழ்ந்த காலம் கி.பி. 910-990 என்றும் எழுதியிருக் கிறார். இது பார்த்த அளவிலே பொருந்தமாட்டாது என்பது விளங்கும். கி.பி. 990 என்று வரையறை செய்த பிறகு அவர் இராஜேந்திரன் சோழன் காலத்தில் இருந்திருக்க முடியாது. மேலும் அவர் நம்மாழ்வாருக்கு ஒன்பதாம் நூற்றாண்டின் கால்கூற்றில் வாழ்ந்தார் என்று நாம் கொண்டோமானால் இது வரையில் நாம் குறிப்பிட்ட தேதிகள் அனைத்தும் அடங்கிவிடும் என்று எழுதுகிறார். இது பொருந்தவில்லை. இந்தக் கால எல்லை நாதமுனிக்குப் பொருந்தவில்லை. இதை நம்மாழ்வார் வரையில் பின் நோக்கி நீட்டிக் கொண்டு போக முடியாது.

மேலும் அவர் நம்மாழ்வார் வரகுண மங்கலம் என்னும் வரகுண மங்கையை குறிப்பிட்டு இருப்பதனால் அந்த நகரைத் தோற்றுவித்த வரகுணன் காலத்தில் (780-820) இவர் வாழ்ந் திருக்கக் கூடும் என்பர். நம்மாழ்வார் குறிப்பிட்ட மற்றொரு தலம் சீவல மங்கலம். இதுவே வானமாமலை, இந்த நகரில் முதலாம் வரகுணன் என்று பெயர் பெற்ற சேரமாறன் உடையன் அமைத்தான். இவ்விரண்டு காரணங்களால் ஆழ்வார் காலம் கி.பி. 800ஐ ஒட்டி ஆகக்கூடும் என்று குறிப்பிடுகின்றார். இவரு டைய குறிப்புக்களே நம்மாழ்வார் பற்றிய காலவரையறைக்குப் பொருத்தமாய் இருக்கிறது. நாதமுனிகள் காலம் பொருத்த மாய் இல்லை.

## *பிற ஆசாரியர்*

நம்மாழ்வார் வரலாற்றையும் நூல்களையும் சமய தத்துவத்தையும் ஆய்ந்த இவ்விடத்து, இதே 9ஆம் நூற்றாண்டில், அவருடைய வரலாற்றுத் தொடர்பு உடையவர்களாய் வாழ்ந்த சிலருடைய செய்திகளையும் கூறி இந்நூற்றாண்டு வைணவ வரலாற்றை முடிக்க எண்ணுகிறோம். நம்மாழ்வாரை உலகம் அறிந்து கொள்ளுவதற்குக் காரணமாயிருந்தவர் அவருடைய முதிய சீடரான மதுரகவிகள். அடுத்து நாதமுனிகள் திருக்குருகூர் வந்தபோது அவருக்கு நம்மாழ்வாரை உபாசிக்கும் முறை சொல்லிக் கொடுத்த பராங்குசதாசர். இறுதியாக நாத முனிகள். மதுரகவியாழ்வார் நம்மாழ்வார் துதியாகக் கண்ணி நுண் சிறுத்தாம்பு என்ற ஒரு திருமொழி பாடினார். மற்ற இருவரும் தமிழில் எதுவும் பாடவில்லை. எனினும், வைணவ ஆசாரியர் பரம்பரையின் தொடர்பை நோக்கி, இவர்கள் அனைவரின் வரலாற்றையும் இங்கே கூறி இவ்வரலாற்றுப் பகுதியை முடிப்போம்.

## *மதுரகவி ஆழ்வார்*

### வரலாறும் காலமும்

மதுரகவியாழ்வார் திருமால் மீது ஒரு பாடல் கூடப் பாடாதபடி ஆழ்வார் என்று போற்றப்பெறும் பேறு வாய்ந்த புண்ணியசாலி. இவர் பாடியதெல்லாம் நம்மாழ்வாரையே. குருபரம்பரை **ஆறாயிரப் படியில்** சொல்லப்பட்ட இவரது வரலாற்றை, வடமொழிச் சுலோகம் முதலியவற்றை நீக்கி, அப்படியே இங்கு பெயர்த்தெழுதுகிறோம். இக்குருபரம்பரையின் காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி. இதுவே ஏனைய குரு பரம்பரை அனைத்துக்கும் தோற்றுவாய்.

“செல்வம் மல்கிய வளங்கிடந்த திருக்கோளூரிலே ஸ்ரீமத்தாகச் சொல்லப்படுகின்ற சித்திரை மாசத்தில் சித்திர

நட்சத்திரத்திலே, ஸ்ரீகுமுதகணே சாம்சரான ஸ்ரீ மதுரகவிகள் ஆதித்திய உதயத்திற்கு அருணோதயம் முற்படுமாப் போலே வகுள பூஷண பாக்ரோதயத்துக்கு அருணோதயம் போலே முன்னே அவதரித்தருளினார். இவர் பிராம்மண வர்ணத்தில் அவதரிக்கையாலே, இவருக்குத் தத்தங் காலங்களில் உபநயனாதி களையும் செய்து, அங்கம் வேதம் மீமாம்சை நியாயம் புராணம் தர்ம சாஸ்திரம் என்று சொல்லப்பட்ட சதுர்த்தச வித்தை களையும் (சதுர்த்தச வித்தை: இங்கு கூறிய அங்கம் 6, வேதம் 4, மற்றவை 4 ஆகப் பதினான்கு) அதிகரித்தார்கள். அந்த வேத வேதாங்கருமாய் மகாவிரகதருமான இவர், முக்திப் பிரதமாகச் சொல்லப்பட்ட திருஅயோத்தியை முதலான திவ்விய தேசங் களைச் சேவிக்க எழுந்தருளினார்.

"அப்போது திருக்குருகூரில் பதினாறு பிராயமாய் மௌனி யாய்த் திருப்புளியாழ்வாரின் அடியிலே நம்மாழ்வார் எழுந் தருளியிருந்தார். இந்த நிலையில் திரு அயோத்தியைச் சேவிக்க எழுந்தருளிய மதுரகவிகளும் கேட்டருளி இருக்கச் செய்தே, இராத்திரி ஜலசங்கர நிவிருந்தியர்த்தமாகப் புறப்பட்டவர் தென் திசையிலே ஒரு அப்பிராகிருத திவ்விய தேஜஸைக் கண்டு, இது என்னென்று திகைத்து நின்று, ஏதேனும் கிராம நகரங்கள் வேகிறதோ? காட்டுத் தீயோ? என்று தம்மிலே விசாரித்து அன் றைக்குக் கண் வளர்த்தருளினார். பின்னையும் இரண்டு மூன்று நாள் இப்படியே கண்டு, 'இது பிராகிருத தேஜசன்று, அப் பிராகிருத திவ்ய தேஜ சாயிருந்தது, இக்காரணத்தை நாம் பரீக்ஷிப்போம்" என்று பகலெல்லாம் கண் வளர்ந்தருளி, இராத்திரி அத்தேஜசே குறியாக அதித்வரைவுடனே மீண்டெழுந்தருளி, புண்ணிய க்ஷேத்திரங்கள் தோறும் சோதித்துக் கொண்டு வந்து, திருவரங்கப் பெருநகரிலே சோதிக்க, அதற்கும் அப்பாலே தென் திசையிலே இருக்க பின்னையும் பூர்வம் போலே த்வரித்து எழுந் தருளி, மாடமாளிகை சூழ்ந்து அழகாய திருக்குருகூரிலே சென்று அப்பால் பார்த்துக் காணாமையாலே' இது இங்கேயே இருக்கு மென்று சோதித்து வந்து, திருப்புளி யாழ்வார் அடியிலே உறங் காப்புளிதன் நிழல்தனிலே சோடச கலா பூரணனான சந்திரனைப் போலவே இருந்த பரமாசாரியரான ஸ்ரீ பராங்குசரைப் பார்த்து, "இவர்க்கு சைதன்யம் உண்டோ, செவி கேட்குமோ?" என்று பரீட்சைக்காக ஒரு குண்டுக்கலை அவர் முன்னே திடீரென்று

எடுத்துப் போட, அவரும் அது கேட்டுத் திடுக்கென்று திருக் கண்களை மலர விழித்துப் பார்த்தருளினார்.

ஸ்ரீ மதுரகவிகளும், இவருக்கு வாக்குண்டோ, இல்லையோ என்று அறியக் கடவோம் என்று அவரைக் குறித்து, 'செத்ததின் வயிற்றிலே சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' என்ன 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்று ஆழ்வார் அருளிச் செய்ய, மதுரகவிகளும் கேட்டருளி ஆழ்வார் திருவடி களிலே தாளும் தடக்கையும் கூப்பி விழுந்து சேவித்து, "மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே' என்கிறபடி ஆசிரயித்துக் கிருதார்த்தராய்த் திரிவித கரணங்களாலும் ஆழ் வாரை சதானுகதம் பண்ணிக் கொண்டு தம்மை அங்கீகரிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்போது எம்பெருமானும் என்று திருவுள்ளமான அளவிலே, பிராட்டி சமேதனாய் பெரிய திருவடி மேற்கொண்டு வந்துதோன்றி ஆழ்வாருக்கு மயர்வற மதிநலம் அருள, ஆழ்வாரும் அனுபவித்த அவ்வனுபவ ஜனிதப் பிரீதி உள்ளடங்காமல் வேத சதுஷ்டயத்தையும் இயற்பாவாகத் திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி என்கிற திவ்யப் பிரபந்தத் திரயத்தாலே வேதத்ரைய சாரார்த்தத்தை ஸ்ரீ மதுர கவிகள் முதலான நன்மக்கள் திருவுள்ளத்திலே அறியக்கற்று வல்லராம்படி பிரதிஷ்டிப்பித்தார். இவ்வாறு செய்து பரபக்தி, பரஞான பரமபக்திகளை உடையராய்த் தொண்டர்க்கு அமுதுண்ணச் சொல் மாலைகள் சொல்லி அவாவற்ற வீடு பெற்றருளினார்.

அதன் மேல் ஸ்ரீ மதுர கவிகள் ஆசாரிய வைபவத்தைக் கண்ணிநுண் சிறுத்தாம்பு என்கிற திவ்யப் பிரபந்தத்திலே அருளிச் செய்து, அர்ச்சாவதார ரூபமான ஆழ்வார் விக்கிரகத் தையும் ஏறியருளப் பண்ணி அவருக்கு நித்ய பக்ஷமாஸ அயன ஸம்வத்ஸரோத்ஸவங்களையெல்லாம் மஹோத்ஸவமாகத் தாழ்வற நடத்திக் கொண்டுவர, 'வேதம் தமிழ் செய்த பெரு மாள் வந்தார்' என்ற விருது பிடிக்க வொட்டோம் என்று சில சங்கத்தார் சிஷ்யர்கள் ஆட்சேபிக்க ஸ்ரீமதுர கவிகளும் எங்க ளாழ்வார் திவ்ய சூக்திக்குச் சங்கப்பலகை இடந்தருமாயின் அவருக்கும் இடங்கொடுத்ததாம்' என்று, திருவாய் மொழி யில் 'கண்ணன் கழலிணை' என்று தொடங்கும் திருப் பாசு ரத்தை ஒரு சிறு முறியில் எழுதித் தர், அச்சிறுமுறி சங்கப்

பலகையிலிருந்த புலவர்களை எல்லாம் கவிழ்த்துப் போட்டுத் தானே அப்பலகை மீது நிற்க அப்புலவர்கள் ஆழ்வாரைக் கொண்டாடி மன்னிப்புப் பெற்றார்கள். இப்படி ஸ்ரீமதுர கவிகள் தமது ஆசாரியரான ஸ்ரீபராங்குசருடைய வைபவத்தைச் சிலகாலம் பிரகாசிப்பித்துக் கொண்டு எழுந்தருளியிருந்து லோகத்தை வாழ்வித்தருளினார்.*

மதுரகவியின் இயற்பெயர் என்ன என்பது தெரியவில்லை. ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்ற நால்வகைக் கவியுள் இவர் மதுரமான கவிதை பாடவல்லவராய், நம்மாழ்வாரைக் காணு முன்னமே அவ்வாறு பாடியிருந்து, மதுரகவி என்று பெயர் பெற்றிருந்தாரென்று நாம் கருதக்கூடும். அக்கவியோ வரலாறோ விளங்கவில்லை; குருபரம்பரை வரலாறுகளில் அது பற்றிய பேச்சு எழவே இல்லை. இவர் காலம் நம்மாழ்வார் காலமே.

**பாடல்**

மதுரகவியாழ்வார் பாடியது 11 பாடல் கொண்ட கண்ணி நுண் சிறுத்தாம்பு என்ற ஒரு சிறு பதிகம். வேறு எதுவும் இவர் பாடவில்லை. கண்ணி நுண் சிறுத்தாம்பு என்பது முதல் பாடலின் தொடக்கம் கொண்டே பதிகம் இப்பெயர் பெற்றது. திருப்பாணாழ்வார் பாடிய 'அமலனாதி பிரான்'. இப்படித் தொடக்கத் தொடரால் பெயர் பெற்ற பதிகமே. இப்பதிகம் வைணவர் நித்தியானு சந்தானத்திலுள்ளது. திருவாய்மொழி சேவிக்கு முன்னும் பின்னும் இப்பாசுரத்தைச் சேவிப்பது மரபு. மதுரகவியாழ்வார் கைத்தாளமிட்டு, தமக்கு நம்மாழ்வார் பிரசாதித்த பாசுரங்களைப் பாடி வந்தார் என்று ஒரு வரலாறு உண்டு. இவர் திருக்குருகூர் நம்பிக்குப் பணிவிடை புரிவ

* வழக்கமாக விசித்தரமாகவே கவிதை புனைகின்ற புலவர் புராண முடையார் மதுரகவி பற்றியும் அவ்வாறு கூறுகிறார். இவர் இமய மலை அடிவாரத்தில் தமிழ் வாசனை சிறிதும் இல்லாது நெடுமாலே தேசிகனாக வரவேண்டுமென்று உபாசனை செய்தார். கனவில் பெருமான் வந்து சோதியைப் பின்பற்றிச் செல் என்று கூற இவரும் அவ்விதமே சென்றார். சோதி குருகூர்ப் புளியின் பொந்தில் புகுந்தது. இவரும் அங்குச் சென்று, நம்மாழ்வாரைக் கண்டு வினாவி, ஆட்கொள்ளப் பெற்றார். அவரை மதுரமான சொற்களால் பாடிய காரணத்தால் இவர் மதுரகவி எனப் பெற்றார். இவ்வரலாறு குருபரம்பரைக்கு முரணானது; எனினும் இவர் அஷ்டாங்க யோகக்கிரமத்தால் பதரிகாசிரமத்தில் நாராயணனை ஆசிரயித்தார் என்று இவர் சொல்வர்.

தொன்றையே பரமானுஷ்டானமாகக் கொண்டு வாழ்ந்தமை யால், ஆன்றோர் இவரைச் சத்துருக்கனாழ்வாரோடு ஒப்பிட்டுச் சொல்வதுண்டு. இவர் வயதில் மிக முதிர்ந்தவர். நம்மாழ்வார் மிகவும் இளையவர் என்பதும், இவர் அந்தணர், அவர் வேளாளர் என்பதும் கருதத்தக்கன.

கண்ணிநுண் சிறுத்தாம்பின் பாடல்கள் யாவுமே மதுர கவி யாழ்வாரின் உள்ளத்தை நன்கு காட்டுவன என்றாலும், முதல் இரு பாடல்கள் மிகவும் சிறப்புடையவை.

கண்ணிநுண் சிறுத் தாம்பின் கட்டுண்ணப்
பண்ணிய பெரு மாயன் என் னப்பனில்
நண்ணித் தென்குரு கூர் நம்பி என்றக்கால்
அண்ணிக்கும் அமு தூறும் என் நாவுக்கே
நாவினால் நவிற்றின்ப மெய்தினேன்,
மேவினேன் அவன் பொன்னடி, மெய்ம்மையே
தேவுமற் றறியேன், குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவனே.

இவர் நம்மாழ்வாரைக் காரி மாறப்பிரான் என்றும், தமிழ்ச் சடகோபன் என்றும் அவர் அருமறையின் பொருள் அருள் கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடினார் என்றும், 'மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள் நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினார்' என்றும் கூறுவது காணத்தக்கது. பத்தாம் பாடலில் குருகூர் நம்பியின் இயல்பைக் கூறுகிறார்; தம்மிடம் தகுதி இல்லை எனினும், நம்மாழ்வார் திருத்திப் பணி கொள்வார் என்றும் சொல்கிறார்.

பயனன் றாகிலும், பாங்கல ராகிலும்
செயல்நன் றாகத் திருத்திப் பணி கொள்வான்
குயில்நின் றார்பொழில் சூழ்குருகூர் நம்பி,
முயல்கின்றேன் என்றன் மொய்கழற் கன்பையே.

இறுதிப்பாடல் பல சுருதியாயுள்ளது; தம் பெயரையும் இதில் குறிப்பிடுகிறார்.

அன்பன் தன்னை அடைந்தவர் கட்கெலாம்
அன்பன், தென்குருகூர் நகர் நம்பிக்கு
அன்பனாய் மதுர கவி சொன்னசொல்
நம்புவார் பதி வைகுந்தம் காண்மினே.

இவருடைய பாடலுக்கு, நாதமுனிகள் வடமொழியிலும் தமிழ்மொழியிலும் தனியன்கள் செய்தாரென்பது வரலாறு. பின்வருவது தமிழ்ப் பாடல்.

வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த
மாறன் சடகோபன் வண்குருகூர், – ஏறுஎங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவி யாரெம்மை
ஆள்வார் அவரே அரண்.

மதுரகவிக்குரிய வாழித் திருநாமம் பின்வருவது; அடுத்துக் காட்டியதும் அவருக்குரிய மற்றொரு வாழித் திருநாமமாகும்.

சித்திரையிற் சித்திரைநாள் சிறக்க வந்தோன் வாழியே
திருக்கோளூர் அவதரித்த செல்வனார் வாழியே
உத்தரகங் காதீரத் துயர்தவத்தோன் வாழியே
ஒளிகதிரோன் தெற்கு திக்க வந்துதித்தோன் வாழியே
பத்தியொடு பதினொன்றும் பாடினேன் வாழியே
பராங்குசனே பரனென்று பற்றினேன் வாழியே
மத்திம மாம் பதப்பொருளை வாழ்வித்தோன் வாழியே
மதுரகவி திருவடிகள் வாழிவாழி வாழியே.

மொய்த்த பொழில் திருக்கோளூர் வந்த வள்ளல் வாழியே
முன்புதாம் அருளாள்போல் உதிக்குமவன் வாழியே
சித்திரையிற் சித்திரைநாள் சிறக்க வந்தோன் வாழியே
சிறப்புடைய பதினொன்று செய்தளித்தான் வாழியே
வைத்தநிதிப் பராங்குசரை யேயுரைத்தான் வாழியே
வையகத்தில் ஆசிரியன் பரனென்றான் வாழியே
சித்திரமாய்த் தென்கதிரோன் காணவந்தான் வாழியே
சீர்மதுர கவியார்தம் மலரடிகள் வாழியே.

உபதேச ரத்தின மாலையில் மணவாள மாமுனி மதுரகவி புகழை இரண்டு பாடல்களால் பாடியிருக்கிறார்.

ஏரார் மதுரகவி இவ்வுலகில் வந்துதித்த
சீராரும் சித்திரையில் சித்திரைநாள் – பாருலகில்
மற்றுள்ள ஆழ்வார்கள் வந்துதித்த நாள்களினும்
உற்றதெமக் கென்று நெஞ்சே ஓர். 25

வாய்த்த திரு மந்திரத்தின் மத்திமமாம் பதம்போல்
சீர்த்த மதுரகவி செய்லையை – ஆர்த்த புகழ்

ஆரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே
சேர்வித்தார் தாற்பரியம் தேர்ந்து.

*கண்ணி நுண் சிறுத்தாம்புக்கு நஞ்சியரும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் வியாக்கியானம் செய்திருக்கின்றனர். நம் பிள்ளை ஈடு, நடுவில் திருவீதிப் பிள்ளைப் பட்டார் ஈடு என்ற உரைகளும் எழுந்துள்ளன. பின்வருவது மதுரகவியாழ் வாரூசல் என்ற எட்டுப் பாடல் கொண்ட நூலிலிருந்து எடுத்த ஒரு பாடல்.*

சித்திரைமா தத்துதித்தோ னாடீரூசல்
திருமகிழ் மாறனைப் பணிவோனாடீரூசல்
பத்தரிரு தயத்துறைவோ னாடீரூசல்
பதினொருபாட் டினிதுரைத் தோனாடீரூசல்
உத்தமமுக் குணங்கடந்தோ னாடீரூசல்
உபநிடதம் பகுத்துணர்ந்தோ னாடீரூசல்
வைத்தமா நிதியையனு தினமும் போற்றும்
மதுரகவி யாழ்வாரே ஆடிரூசல்.

*(வைத்தமா நிதி - திருக் கோளூர் எம்பெருமான்) பதினைந்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் மணவாள மாமுனிகளின் சீடராயிருந்த கோயில் கந்தாடையண்ணன், மாமுனி மீது 13 பாடல்கள் கட்டளைக் கலித்துறை அந்தாதியாக கண்ணி நுண் சிறுத்தாம்பு என்ற பெயரிலேயே செய்திருக்கிறார். தேசிகருடைய பிரபந்த சாரத்தில், மதுர கவியைக் குறித்த பாடல்:*

தேறிய மா ஞானமுடன் திருக்கோ ளூரில்
சித்திரையிற் சித்திரைநாள் வந்து தோன்றி,
ஆறிய நல் லன்புடனே குருகூர் நம்பிக்கு
அனவரதம் அந்தரங்க அடிமை செய்து,
'மாறனை யல்லால் என்றும் மறந்துந் தேவு
மற்றறியேன்' எனும் மதுர கவியே, நீமுன்
கூறிய கண்ணி நுண்சிறுத்தாம் பதனிற் பாட்டுக்
குலவு பதி னொன்றும்எனக் குதவு நீயே.

*தேசிகர் அதிகாரசங்கிரக முதற் பாடலில், 'தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே' என்று சொன்ன பிறகு, அடுத்த பாடலில், மதுரகவி காட்டும் தொல் வழியைப் போற்றுகின்றார்.*

இன்பத்தில், இறைஞ்சுதலில், இசையும் பேற்றில்
இகழாத பல்லுறவில் இராக மாற்றில்
தன்பற்றில், வினைவிலக்கில், தகவோக் கத்தில்
தத்துவத்தை உணர்த்துதலில், தன்ம யாக்கில்,
அன்பர்க்கே அவதரிக்கு மாயன் நிற்க
அருமறைகள் தமிழ் செய்தான்தாளே கொண்டு
துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும்
தொல்வழியே நல்வழிகள் துணிவார் கட்கே.

எம்பெருமானுக்கும் சீவகனுக்கும் பத்துவித சம்பந்தம் உண்டென்பர். அவையாவன: 1. ஆனந்த ரூபமான பகவானுடைய அனுபவம். 2. அவனைச் சரணடைதல். 3. அவனையே தன் ஸ்வரூபத்துக்குத் தக்க பலனாகக் கொள்ளுதல் 4. அவனோடு பல்வகை உறவை உடைமை. 5. தகாத விஷயங்களில் ஆசையை அவனால் ஒழிக்கப்பெறுதல். 6. அவன் விஷயமான பற்று உண்டாகப் பெறுதல். 7. பாபங்களை ஒழிக்கப் பெறுதல். 8. அவனுடைய கருணைக்கு இலக்காயிருத்தல். 9. அவனால் தத்துவ ஞானம் உண்டாக்கப் பெறுதல். 10. அவன் தன்னைப் போலாக்கப் பெறுதல். இந்தப் பத்துச் சம்பந்தங்களையும் கண்ணிநுண் சிறுத்தாம்பின் பத்துப் பாசுரங்களும் முறையே குறிப்பிடுகின்றன என்பர் வைணவப் பெரியோர்.

மதுரகவியாழ்வாரே நம்மாழ்வார் அருளிச் செய்த பாசுரங்களைப் பட்டோலை கொண்டார் என்பது சம்ரபிதாயம். 'மாறன் வேதமாயிரம் தமிழும் எழுதி அந்நாள் மேன்மை பெறு மதுரகவி வியப்பைப் பாட' என்பது சீரங்கநாயகருசல். 16. அழகர் பிள்ளைத் தமிழ் பழிச்சினர்ப் பரவல் 10:

மட்டோ லிடுந் தொங்கல் வகுள மணம் நாறுதோள்
மாறன் வண் தமிழ்ப்படுத்தி
வசைவிட் டுறையுமுனி தன்னாலு மெழுதொணா
மறை நாலும் எழுதுவிக்கப்
பட்டோலை எழுதியாங் கவனைஈ ரைந்துகவி
பாடி நெடு மால் தன்னையும்
பாடாத மதுரகவி இருநாள் துதிக்கு வென்.

என்பதும் காண்க. இராமானுச நூற்றந்தாதி 18:

எய்தற்கரிய மறைகளை ஆயிரம் இன் தமிழால்
செய்தற் குலகில் வருஞ்சட கோபனைச் சிந்தையுள்ளே
செய்தற் கிசையும் பெரியவர் சீரை உயிர்களெல்லாம்
உய்தற் குதவும் இராமா னுசன்எம் உயிர்த்துணையே.

என்பர். சத்ருக்கனன், இராமானிடத்துத் தன் நெஞ்சைப் பறி கொடுக்கவில்லை. அவனைப் போல இவரும் கிருஷ்ணனுடைய குணங்களில் 'கால் தாழ்ந்திலர்,' அவனுக்குப் பரத சேவையே லக்ஷ்யமானாற் போல, இவருக்குச் சடகோபர் சேவையே லக்ஷ்யம். நம்மாழ்வாரின் வாழித் திருநாமங்களில் நன் மதுரகவி வணங்கும் நாவீரன் என்றும், 'மதுரகவி தம்பிரான்' என்றும் சிறப்பாய்ச் சொல்லியிருப்பது காணத்தக்கது.

மதுரகவிகள் நம்மாழ்வாருக்குத் திருவடித் தொண்டரா யொழுகியது பற்றி, அவருடைய திருவடி நிலை மதுர கவிகள் என்றே வழங்கப் பெறுகிறது.

கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பெயர், அமலனாதி பிரான் போல, நூலின் தொடக்கத் தொடரால் அமைந்தது. இது அந்தாதியாகவுள்ளது. மண்டலித்து வருவது என்பர்; முதல் 'கண்ணி நுண் சிறு' என்றும், இறுதி 'காண்மினே' என்றும் இருப்பதால் இக்கருத்து அத்துணை பொருத்தமில்லை. இறுதி யிலுள்ளது போலவே 6-7 பாசுரங்களின் ஈறும் தொடக்கமும் காண்மினே - கண்டு என்பதாகவே உள்ளமையும் அறியத்தக்கது.

பின்வந்தோர், வெறுப்பதில்லாத மதுரகவிகளுடைய அனு பவத்தை மிக்க நகைச்சுவையோடு போற்றியிருக்கிறார்கள். ஸ்ரீ வசன பூஷண வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் கூறு கிறார், ஆழ்வார் பதின்மரும் உண்ட போது ஒரு வார்த்தையும், உண்ணாத போது ஒரு வார்த்தையும் சொல்லுவர். அவர்கள் பாசுரம் கொண்டு அன்று இவ்வர்த்தம் (412) அறுதியிடுவது, 'பின்னை யார் பாசுரம் கொண்டு அறுதியிடுவது? எனில், அவர் களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே; அவர் பாசுரம் கொண்டு இவர்த்தம் அறுதியிடக் கடவோம்' என்கிறார். 'அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே' என்றது, மேவினேன் அவன் பொன்னடி, தேவுமற்று அறியேன், என்று தம்முடைய ஆசாரிய ரான ஆழ்வாருடைய திருவடிகளைப் பிராப்பியமும் பிராபக முகமாகப் புரையறப் பற்றி வேறு ஒரு தெய்வத்தை அறியாத

வராய் 'நாவினால் நவிற்று இன்பம் எய்தினேன்' என்று அவரைப் பேசுவதால் உண்டான ஆனந்தத்தாலே நிறைவுற்றவராய் 'அடியேன் சதிர்த்தேன் இன்று' என்று உறுவது அறிந்து பற்றின சதுரராய் இருக்கையாலே, சரம பர்வத்தின் ஏற்றம் அறிந்து பேசா நிற்கச் செய்தே, அந்தச் சரம பர்வத்திலேயே ஊன்றின நிலையினராயில்லாமல், பிரதம் பர்வத்திலே மண்டி, அவனுடைய அழகிலே பரவசப் பட்டவர்களாய் உண்டபோது ஒரு வார்த்தையும் உண்ணாத போது ஒரு வார்த்தையும் சொல்லுகிற ஆழ்வார்கள் பதின்மர்களையும் அடியிலே ஓர் ஆசாரியன் திருவடிகளைப் பற்றி, எப்பொழுதும் ஆனந்தத்தையுடையவர்களாயிருக்கப் பெறாமல், தன்னுடைய அழகினாலே பிச்சு ஏற்றும் பகவான் திறத்தாலே முந்துற முன்னம் இழிந்து அவனை அனுபவிக்கிற போது ஒன்றைச் சொல்வது, அவன் அனுபவம் கிடையாத காலத்தில் ஒன்றைச் சொல்லுவதாய் இவர்கள் படுகிறபாடு என்! என்று நகையாடி இருக்கின்ற ஸ்ரீமதுரகவி ஆழ்வார் உண்டிறே என்றபடி,"

## பராங்குசதாசர்

இவரைக் குறித்த எந்தச் சிறப்பு வரலாறும் இல்லை. இவர் செய்த எந்த நூலும் இல்லை. எனினும், இவர் நாத முனிகளை மதுரகவியினுடைய கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பாசுரத்தினிடம் ஆற்றுப்படுத்தினார் என்ற நிலைமையால், தமிழுக்குத் திவ்வியப் பிரபந்தங்கள் கிடைத்தன. இக்காரணம் பற்றி இவரை இலக்கிய மரபில் நினைவு கூர்தல் இன்றியமையாதது. இவர் வரலாற்றைக் குரு பரம்பரை ஆறாயிரம்படி பின் வருமாறு கூறும்.

நாத முனிகளும் சடகோபன் அவதரித்தருளின திருக்குருகூர்ப் பிரதேசத்திலே ஸ்ரீகோசம் உண்டாக வேணுமென்று திருநகரிக் கெழுந்தருளி, ஆழ்வாரையும் பொலிந்துநின்ற பிரானையும் சேவித்து, அங்கே ஸ்ரீமதுரகவிகளுடைய சிஷ்யரான ஸ்ரீபராங்குச தாசரைச் சேவித்து, இவ்விடத்திலே திருவாய்மொழி யோதினவர்களுண்டோ? ஸ்ரீகோசமுண்டோ? என்று கேட்டு அருள, அவரும், திருவாய்மொழியும் மற்றுமுள்ள திவ்வியப் பிரபந்தங்களும் நெடுங்காலம் உண்டு ப்ரமுஷிதமாய்த்து, இப்போது எங்களா

சார்யரான ஸ்ரீ மதுர கவியடிகள் அடியேனுக்குக் கண்ணிநுண் சிறுத்தாம்பு என்கிற திவ்யப் ப்ரபந்தத்தை ப்ரகாசித்தருளி இக்கண்ணி நுண் சிறுத்தாம்பை ஆழ்வார் திருமுன்பே ஏகாத சனத்திலேயிருந்து ஏகாக்ர சித்தராய், ஆழ்வார் திருவடிகளைத் தியானித்துக் கொண்டு நியமத்துடனே பன்னீராயிரமும் அனு சந்திக்க ஆழ்வார் ப்ரசன்னராவரென்று அருளிச் செய்தார் என்ன, நாத முனிகளும் அந்தத் திவ்யப் பிரபந்தத்தை அடியேனுக்கு ப்ரஸாதித்தருள வேணுமென்று தண்டன் சமர்ப்பித்து விண்ணப்பஞ் செய்ய அவரும் இவருக்கு மிகவும் உவப்புடனே அந்த திவ்ய ப்ரபந்தத்தை ஓதுவித்தருள, நாதமுனிகளும் ஓதி, திருப்புளி யாழ்வாரடியிலே ஆழ்வார் திருமுன்பே பன்னீராயிர முரு கண்ணி நுண் சிறுத்தாம்பை நியமத்தோடே அனுசந்திக்க சிஷ்யலஷ்மிமான ஆஸ்திக்யாதி குணங்களையுடையரான நாதமுனிகளுக்குப் பெரிய பிராட்டியார் நியோகேன மிகவும் ப்ரசன்னராயருளி, இந்நாத முனிகளைக் குறித்து அசரீரி வாணி சொல்லுமா போலே திருவாய் மலர்ந்து 'ஏன் காணும் நம்மைக் குறித்து பகுசாய் உபாசியாநின்றீர்?' என்று கேட்டருள; நாதமுனி களும் திருவாய் மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்களை அடியேனுக்கிரங்கி யருளவேணுமென்று விண்ணப்பஞ் செய்ய ஆழ்வாரும் ப்ரீதியுடனே சர்வேசுரன் தமக்கு மயர்வற மதிநல மருளினாற் போல நாதமுனிகளுக்கு திவ்யஞானசக்ஷு ப்ரசாதத் தருளி ரஹஸ்யத்ரயார்த்தத்தையும் திருவாய்மொழி முதலான மற்றுமுள்ள நாலாயிரம் பிரபந்தங்களையும், அகிலதர்சனதாத் பர்யங்களையும் அஷ்டாங்க யோக ரஹசியத்தையும் ப்ரசாதித் தருளினார்.

இவ்வளவே பராங்குசதாசரைக் குறித்து நாம் அறிவது. நம் மாழ்வார் மதுரகவிகளுக்கே பிரத்தியட்சம். நாதமுனிகளுக்கும் பிரத்தியட்சமல்ல, அர்ச்சாவதாரமாக அருளினார். இது பற்றி முடிச்சூர் அய்யாவு முதலியார் எளிமையாக எழுதி வெளி யிட்ட திருவாய்மொழி வியாக்கியான முகவுரையில் (பக்கம். 14) கூறியுள்ளது காணத்தக்கது. (1865ஐ ஒட்டி);

"இந்த உபய வேதங்களையும் கிருஷ்ணைக்கு வடக்குக் கீர்வாண தேசமாகையால் பகவான் கங்கா தீரத்தில் வியாசராய் அவதரித்துக் கீர்வாண வேதத்தைப் பிரகுரஞ் செய்து அவ்வேதத்தில் சொன்ன அர்த்தங்களை இதிகாசமாகிய பாரத

புராணங்களாக அருளிச் செய்தார். கிருஷ்ணைக்குத் தெற்குத் திராவிட தேசமாகையால் அந்தப் பகவான் தாமிரப்பாணி தீரத்தில் ஸ்ரீபராங்குச பகவானாய் அவதரித்தது. திராவிட வேதத்தை வெளிப்படுத்தி அவ்வர்த்தத்தை விபவாதரத்தில் ஸ்ரீ மதுரகவிகளுக்கும் அர்ச்சாவதாரத்தில் ஸ்ரீநாதமுனிகளுக்கு அருளிச் செய்து அது பரம்பரையாய் ஸ்ரீபாஷ்யக்காரர் பரியந்தம் உபதேசமாய் வந்து அவர் தம்முடைய சிஷ்யராகிய திருக்குருகூர் பிரான் பிள்ளான் முதலானவர்களுக்கும் உபதேசித்து...”

## நாதமுனிகள்

நம்மாழ்வார் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளி நெடுங் காலம் ஆன பின்பு, காட்டு மன்னார் கோயில் என்று இப்போது வழங்குகின்ற வீரநாராயணபுரத்தில் திருமாலாகிய மன்ன னாரைச் சேவித்த பரம்பரையில் ஈசுவர பட்டாழ்வார் (ஈசுவர முனிகள்) என்று ஒருவர் இருந்தார். அவர் குமாரர் நாதமுனிகள் அவர் குமாரர் ஈசுவர முனிகள். இவர்கள் ஒரு நாள் வடநாட்டுத் திவ்ய தேசங்களைத் தரிசிக்க வேண்டுமென்று விரும்பி மன்ன னாரிடம் விடைபெற்று அத்தலங்களைத் தரிசித்து யமுனா தீரத்தில் கோவர்த்தனபுரம் என்ற கிராமத்தில் தங்கியிருந்தார்கள். அங்கேயே யிறந்து விடலாம் என்று துணிந்திருந்த போது, நாத முனிகள் வீர நாராயணபுரம் திரும்ப வேண்டுமென்று மன்ன னார் அழைத்ததாகக் கனவு கண்டு எல்லோரையும் அழைத்துக் கொண்டு தம்மூர் வந்து சேர்ந்தார். மன்னனார் சந்நிதியில் பாகல தர கைங்கரியம் அத்யாதம சாஸ்திரப் பிரவசனகமும் செய்து கொண்டிருந்தார். ஒரு நாள் அங்கு மேல் நாட்டினின்றும் சில வைணவர் எழுந்தருளி மன்னனார் திருமுன்னே தங்களுக்குத் தெரிந்த தோத்திரங்களையெல்லாம் சொல்லித் துதித்த போது ‘ஆரா அமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே’ என்று தொடங்குகின்ற திருவாய் மொழிப் பதியம் 41ஆம் பாடலையும் பாடினார்கள். 11ஆம் பாடலில் குருகூர்ச் சடகோபன் குழலில் மலியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும் என்று பாடினார்கள். கேட்ட நாதமுனிகள் இப்பிரபந்தம், உங்களுக்கு முற்றப்போமே என்று கேட்டருள அவர்களும் இப்பத்துப் பாட்டுமே வருவ தென்று விண்ணப்பஞ் செய்தார்கள். இவரும் உங்கள் நாட்டிலே ஸ்ரீகோச முண்டோ? பாடல் வல்லவரு முண்டோ; என்று

கேட்டருள 'எங்களுக்கிவ்வளவு பாடமே வருவது, வேறொரு விடத்திலுமில்லை' என்று அவர்கள் விண்ணப்பஞ் செய்தார்கள். இருவரும் அவர்களுக்கு மன்னனாருடைய தீர்த்த ப்ரசாதமும் ப்ராஸாதிப்பித்தருளி, சடகோபன் அவதரித்தருளின திருக்குருகூர் பிரதேசத்திலேயுண்டாக வேணுமென்று திருநகரிக் கெழுந்தருளினார். இங்கு ஆழ்வாரையும் பொலிந்து நின்ற பிரானையும் (குருகூர் எம்பெருமான் திருநாமம்) சேவித்து, அங்கே ஸ்ரீமதுர கவிகளின் சிஷ்யரான ஸ்ரீ பராங்குச தாசரைச் சேவித்து 'இவ்விடத்திலே திருவாய்மொழி யோதினவர்கள் உண்டோ? ஸ்ரீகோசமுண்டோ?' என்று கேட்டருள, அவரும் திருவாய்மொழியும் மற்றுமுள்ள திவ்யப் பிரபந்தங்களும் நெடுங்கால முண்டு பரமுஷிதமாந்து இப்போது எங்களாசார்யரான ஸ்ரீ மதுரகவிகள் அடியேனுக்குக் கண்ணி நுண்சிறுத்தாம்பு என்கிற திவ்ய ப்ரபந்தத்தைப் ப்ரஸாதித்தருளி, இக்கண்ணி நுண் சிறுத்தாம்பை ஆழ்வார் திருமுன்பே ஏகாஸனத்திலேயிருந்து ஏகாக்ர சித்தராய், ஆழ்வார் திருவடிகளை தியாநித்துக் கொண்டு நியமத்துடனே பன்னீராயிரமும் அனுசந்திக்க ஆழ்வார் பரஸந்நராவர் என்று அருளிச் செய்தார் என்றார்.

நாதமுனிகளும், 'அந்தத் திவ்ய ப்ரபந்தத்தை அடியேனுக்கு ப்ரஸாதித்தருள வேணும்' என்று தண்டன் சமர்ப்பித்து விண்ணப்பஞ் செய்தார். அவரும் இவருக்கு மிகவும் உவப்புடனே அந்தத் திவ்ய ப்ரபந்தத்தை ஓதுவித்தருள, நாதமுனிகளும் ஓதி திருப்புளி யாழ்வாரடியிலே ஆழ்வார் திருமுன்பே பன்னீராயிரமும் கண்ணி நுண் சிறுத்தாம்பை நியமத்தோடே அனுசந்தித்தார். அதன்மேல் பெருமாளும் இவருக்கு ஞானம் பிரசாதித்தருளி, ரகசியத்தையும் திருவாய்மொழி முதலான நாலாயிரப் பிரபந்தங்களுள் யோக ரகசியங்களையும் உபதேசித்தருளினார்.

அதன்மேல் நாதமுனிகள் வீரநாராயணபுரம் அடைந்து, அங்கே தம்முடைய மருமக்களான கீழையகத் தாழ்வாரையும் மேலயகத் தாழ்வாரையும் கொண்டு இயலும் இசையுமாக்கி உலகத்திலே பரவச் செய்தார்.

தேவேச பாரதிகள் செய்த சடகோப திவ்ய சரித்திரத்தை முன்னமே குறிப்பிட்டோம். இவர் சென்ற நூற்றாண்டின் இறுதிக் கால்கூற்றில் வாழ்ந்தவர். அச்சரித்திரத்தின் இறுதிப்

படலம் நாதமுனிகள் படலம் என்ற பெயருடையது. அதனுள் நாதமுனிகள் நாலாயிரத்தையும் பெற்ற செய்தியைச் சற்று விரிவாகவே கூறுகிறார். ஒரு வந்தி தினம் வருமாறு போல் வந்தான். அன்று பாடல் பாடினான். நாதமுனி அவனை அணுகி, 'இன்னவை சொற்றனர் யார் கொலோ, இப்படி பந்தம் அனைத்துமே நின்னிடமுண்டு சொல், அன்றி நீ நெறியின் உணர்ந்ததுண்டோ, அய்ய மண்ணிப் புத்தகமேனு முண்டோ?' என வினவினார். அவன் இவை தவிர அடியேன் அறியேன், புத்தகமும் இல்லை. உணர் புனிதரும் இல்லை என்றான். பின்னர் நாதமுனிகள் குருவை அடைந்து, பராங்குச நம்பி துணையால் கண்ணி நுண் சிறுத்தாம்பு பன்னீராயிரம் உருச்செபித்தார். இவர் இசைத்த தேவ இசை கேட்டு அர்ச்சாபேமாயு நின்ற மாறர் உள்ளம் மகிழ்ந்து உரை செய்வார். 'அன்ப நாம் உனக்கு எதிரில் நின்று நவிலுதல் அறமன்று. சர்ச்சையாக்கி நாவின் வாய் திறந்து சொல்லும், திரையின் அப்பால் மனம் களிப்பக் கேட்டு வரைந்திடு நிழலா' என்றதும் நாதமுனிகளும் அப்படியே பட்டோலை கொண்டு வெளியில் அருளினார். இவர் அருமையாக நாதம் இசைத்தமையாலே நாத முனிகள் என்று சொல்லப் பெற்றார்.

நாத முனிகள் ஆசாரியராயிருந்தது மட்டும் இன்றி வரலாற்றில் முக்கிய இடம் பெறுவது, அவர் நாலாயிரத்துக்கு இசைப்பா இயற்பா என்ற பாகுபாடு அமைத்த காரணத்தால், இயற்பா ஒரு தொகுதி மட்டும் இயற்பாக்கள் மற்ற மூன்றும் இசைப்பாக்கள், திருவரங்கம் கோயில் நடைமுறையைச் சொல்லுகின்ற கோயிலொழுகு என்ற நூல்; நாதமுனிகள் தாம் அமைத்த திருமொழி - திருவாய்மொழித் திருநாளில் முதல் ஆயிரத்தையும் பெரிய திருமொழியையும் தேவகானத்திலே ஏறிட்டுச் சேவித்தார் என்றும் செரல்லுகிறது. பெரிய திருமொழிக்கும் திருவாய்மொழிக்கும் பண்ணும் தாளமும் ஏட்டில் குறிப்பிடப் பட்டு உள்ளன என்பர். இவ்வாழ்வார் இருவரும் தம் நூல்களை இசைப் பாடல் என்றே சொல்லவும் காண்கிறோம்.

தேவகானத்தை அறியாமல் மனுஷ்ய கானத்திலேயே மயங்கிக் கிடந்த கங்கை கொண்ட சோழபுர மன்னனுக்கு இவர் தேவ கானத்தின் மேன்மையைப் புகட்டி அவனை அதில் ஈடுபடச் செய்தாராம். இவர் யோகத்தில் இருந்த நிலைமை பின்னர் அம்மன்னன் தன் தேவியருடன் வந்து தரிசித்துத் திரும்பிய

பிறகு, இவர் அவர்களைக் கண்ணனும் கோபியருமாக நினைத்துப் பின் தொடர்ந்து சென்று, பிறகு தம் மாணாக்கர் அறிவுறுத்த உண்மையறிந்து வீரநாராயணபுரம் திரும்பினாராம்.

இவரிடத்தில் சீடராயிருந்தவர்கள் எண்மர், அவர்களுள் முக்கியமானவர்கள்; உய்யக் கொண்டார், குருகை காவலப்பன், திருக்கண்ணமங்கை யாண்டான் என்போர். யோக இரகசியத்தைக் குருகை காவலப்பனுக்கு அருளிச் செய்தார். உய்யக் கொண்டார் தமக்கு யோக இரகசியம் வேண்டாம் என்று சொல்லவே அவருக்கு சாஸ்திரத்தையும் திருவாய் மொழி முதலியவற்றையும் உபதேசித்தார். பின்னர் தம் புதல்வரான ஈசுவர முனிகளை அழைத்து, 'உமக்குப் பிறக்கப் போகும் பிள்ளைக்கு யமுனைத் துறைவர் என்று பெயரிடும் என்று சொல்லி, குருகை காவலப்பனுக்கும் உய்யக் கொண்டாருக்கும் இரகசியங்களை உபதேசித்து யமுனைத் துறைவருக்கு இவற்றைப் பிற்காலத்தில் அவர் பிறந்து வளர்ந்து பக்குவம் அடைந்த காலத்தில் உபதேசியுங்கள் என்று சொல்லி, யோகத் துறையில் அமர்ந்திருந்தார்.

ஒருநாள் அவ்வரசன் வேட்டை முடித்துக் கொண்டு தம் பரிவாரங்களோடு நகர் திரும்பினான். இவருடைய பெண் பிள்ளைகள் இவர் யோகம் கலைந்து எழுந்ததும், "ஐயா, நம் அகத்திலே ஒரு குரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண் பிள்ளையும் வந்து நாதமுனிகள் எங்கே என்று தேடிப் போனார்கள்" என்று சொல்லவும் இவர், அவர்கள் பெருமாளும் பிராட்டியும் இளைய பெருமாளும் ஐந்திர வியாகரண பண்டிதனுமாகும்" என்று சொல்லிப் பின் தொடர்ந்து, வழி நெடுக விசாரித்துக் கொண்டு போய், கங்கை கொண்ட சோழ புரம் கீழ்வாயில் வரையில் சென்று அவர்களைக் காணாமல் ஏங்கி மோகித்து விழுந்து உயிர் துறந்தார்.

பின்னால் உரிய காலத்தில் குருகை காவலப்பன் யமுனைத் துறைவனுக்கு யோக ரகசியங்களை உபதேசித்தார். உய்யக் கொண்டார் தம் அந்திம திசையில் இரகசியங்களைத் தம் மாணாக்கர் மணக்கால் நம்பிக்குச் சொல்லி வைத்து யமுனைத் துறைவருக்கு உபதேசிக்கும்படி சொல்லிவிட்டுக் காலமானார். அவரும் உரிய காலத்தில் யமுனைத் துறைவருக்கு அவற்றை உபதேசித்தார்.

தாம் செபித்த 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' சம்பந்தமாக நாதமுனிகள் 'வேறொன்றும் நானறியேன்' என்ற தனியன் பாடினார் என்று வழங்கும். இவர் பாடிய வகுமொழித், தனியனில், திருவாய்மொழியைச் 'சடகோபருபனிஷத்' என்று கூறுகிறார்.

நாதமுனிகள் தமிழிலே எந்த நூலும் பாடாவிட்டாலும் கூட, நாலாயிரப் பிரபந்தங்களும் வெளிப்பட்டுத் தமிழ் நாடெங்கும் உலவுவதற்குக் காரணமாயிருந்தவர் இவரே. அன்றியும் வைணவ ஆசாரிய பரம்பரையில் நம்மாழ்வாருக்குப் பின் இவரே முதல் ஆசாரியராயிருந்து இரகசியார்த்தங்களையும் யோக இரகசியங்களையும் சீடர் மூலமாகப் பரவச்செய்தவர், வியாசரை ஒத்த பெருமை இவருக்கு வைணவ சமயத்தில் உண்டு. இவர் நியாய தத்துவம், யோக ரகசியம், புருஷ தத்துவம் ஆகிய சம்பிரதாய நூல்கள் செய்திருக்கிறார்.

இவரைக் குறித்த இராமானுச நூற்றந்தாதிப் பாடல் பின் வருவது. (20)

ஆரம் பொழில்தென் குருகைப் பிரான்அமு தத்திருவாய்
ஈரத் தமிழின் இசைஉணர்ந் தோர்கட்கு இனியவர்தம்
சீரைப் பயின் றுய்யும் சீலங்கொள் நாதமுனியை நெஞ்சால்
வாரிப் பருகும் இராமா னுசனென்றன் மாநிதியே.

உபதேச ரத்தின மாலைப் பாட்டு (36):

தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மை அறிவாரார்,
அருளிச் செயலை அறிவாரார் –அருள் பெற்ற
நாதமுனி முதல் நம்தேசி கரையல்லால்
பேதைமனமே, உண்டோ பேசு.

நாதமுனிகளுக்குரிய வாழித் திருநாமம்:

ஆனிதனி லனுடத்தில் அவதரித்தான் வாழியே
ஆளவந்தார்க் குபதேசம் அருளிவைத்தான் வாழியே
பானுதெற்கிற் கண்டவன்சொல் பலவுரைத்தான் வழியே
பராங்குசனார் சொற்பிரபந்தம் பரிந்துகற்றான் வாழியே
கானமுறத் தாளத்திற் கண்டிசைத்தான் வாழியே
கருணையினால் உபதேசக் கதியளித்தான் வாழியே

நானிலத்தில் குருவரையை நாட்டினான் வாழியே
நலந்திகழும் நாதமுனி நற்பதங்கள் வாழியே.

*வேதாந்த தேசிகர் செய்த அதிகாரசங்கிரகம் (6):*

காளம் வலம்புரி யன்னநற்காத லடியவர்க்குத்
தாளம் வழங்கித் தமிழ்மறை யின்னிசை தந்த வள்ளல்
மூளுந் தவநெறி மூட்டிய நாத முனிகழலே
நாளுந் தொழுதெழு வோம்,நமக் கார்நிகர் நானிலத்தே.

*தடைபட்டுப் போன வைணவத்தை மீண்டும் உயிர்ப்பித்த நாதமுனிகள் நின்று போயிருந்த திருமொழி, திருவாய் மொழித் திருவிழாவை நடத்தி வைத்ததும் அன்றி, ஏகாதசி திதிக்கு முன்பு பிரதமை நாள் முதல் பகல் பத்து என்று பெயர் வைத்து அந்நாட்களில் முதல் ஆயிரத்தையும் பெரிய திருமொழியை யும் ஓதும்படியும் பின் 10 நாள்களாகிய 'இராப்பத்தில் ஒவ் வொரு நாளும் திருவாய் மொழியினை ஒரு பத்து ஓதி மறு நாளில் இயற்பாவை ஓதும்படியும் செய்தனர் (இயற்பா சாத்து முறைக்கு மறுநாள் திருப்பல்லாண்டு தொடக்கம், அதன் பிறகே இல்லங்களில் இந்நூல் ஓதுவது மரபு).*

*பின்பும் நாதமுனிகள், பெரிய பெருமாள் நியமனத்தால் வேதத்தோடு சமநிலை பெற்ற திராவிட வேதத்துக்கும் வடமொழி வேதம் போலவே விடுவதும் தொடங்குவதுமான காலங்களை நியமிக்க எண்ணி; பெருமாள் தைலக்காப்பு சாத்திக் கொள்ளும் கார்த்திகைத் திருக்கார்த்திகை தொடங்கி அத்யயன விழாத் தொடக்கம் வரை இப்பனுவல் ஓதப்படாமல் விடப்பட்ட காலம் என்றும் அந்த நாள்களில் எங்கும் அவற்றை ஓதக்கூடாது என்றும் மார்கழியில் வளர்பிறை பிரதமை முதல் இவைகளுக்கு மீண்டும் தொடக்ககாலம் என்று அப்போது தான் சந்நிதி களில் இவைகளைத் தொடர்ந்து ஓத வேண்டும் என்றும் சில வரையறைகளை ஏற்படுத்தி இந்நூல்களின் பெருமையைப் பாராட்டினர்.*

*நாதமுனிகள் காலம் 823 - 918 என்று கொள்வதில் இரண்டு முரண்பாடுகளைக் காட்டி ஆய்வாளர் இவர் காலம் இன்னும் பின்னால், அடுத்த நூற்றாண்டுக்கும் பின்னால் கங்கை கொண்ட சோழன் காலம் (1012 - 1044) என்று கூறவும் பார்க் கிறோம். இக்கருத்தை இங்கு தெளிவுபடுத்துவது அவசியம்.*

ஒன்று வீரநாராயணபுரம் என்ற பெயர் மேல்நாட்டி லிருந்து வந்த சில ஸ்ரீவைணவர்கள் வீரநாராயணபுரம் வந்து மன்னனாரைச் சேவித்து அவர் திருமுன்பே "ஆணவமுதே" என்கிற திருவாய்மொழியை அனுசந்தித்தார்கள். கேட்டிருந்த நாதமுனிகள் அது தோத்திரமாகத் தேடி நாலாயிரத்தையும் பெற்றார் என்று பின்பழகிய பெருமாள் ஜீயர் (கி.பி. 1290) எழுதி யுள்ள வரலாறு வீரநாராயணபுரம் என்பது சிதம்பரத்திலிருந்து 15 மைல் தொலைவிலுள்ள ஊர். இன்று காட்டு மன்னார் கோயில் என்று வழங்குவது, வீரநாராயணன் என்பது முதற் பராந்தக சோழன் (907-953) பெயராகும். இவன் பெயரைக் கொண்டது அவ்வூர். ஆதலால் அங்கு தோன்றினவர் நாதமுனிகள் என்றால் அவர் காலம் பராந்தக சோழன் காலத்துக்கும் பிற்பட்டிருக்க வேண்டும் என்று சொல்வர். இதற்கு விடை: வரலாற்றைக் கொள்பவர் பின் பழகிய பெருமாள் ஜீயர். காலம் 1290. இவர் காலத்தில் வீர நாராயணபுரம் என்ற பெயர் பிரசித்தி அடைந்து விட்டது. பிரசித்தியடைந்த பெயரையே அழகியார் சொல்கிறார் இவ்வூரில் திருமால் பெயர் மன்னார் என்பது. பாடல் பெற்ற (மங்களா சாசனம் பெற்ற) திருமறையூர் (நாச்சியார் கோவில்) திருமால் திருநாமம் இராசகோபாலர், அதுபற்றி இவர் இராச மன்னார் என்று பெயர் பெறுகிறார். அதனால் ஊர்ப் பெயரே (இராச) மன்னார்குடி. இதிலிருந்து வேறு பிரித்துக் காட்ட, சிதம்பரத்தை ஒட்டி இருந்த மற்றொரு பழைய மன்னார் தலம், காட்டுமன்னார் கோயில் எனப்பட்டது. இங்கும் திருமால் மன் னார் (மன்னனார் என்றும் குரு பரம்பரை கூறும்.) பிற்காலத் தில் வீரநாராயணன் என்ற பெயருடைய பராந்தக சோழன், (907 - 953) இருந்த ஊருக்கு அருகே (இன்று வீராணத் தேரி என்று பிரசித்தி பெற்றிருக்கிற) வீர நாராயணன் ஏரியை அமைத்தபோது, இந்த ஊருக்கும் வீரநாராயணபுரம் என்று பெயர் கொடுத்தார். இதற்கும் நான்கு நூற்றாண்டுகள் பின்னால் (கி.பி. 1290இல் குரு பரம்பரைக் கதை எழுதிய பின் பழகிய பெருமாள் ஜீயர் இவ்வூரை வீரநாராயணபுரம் என்ற தடபுட லான வடமொழிப் பெயரால் சொன்னார். முழுமையும் பட்டிக் காட்டுப் பெயரான காட்டு மன்னார் கோயில் என்பது பெரும் பகுதி வடமொழி கலந்த மணிப்பிரவாள நடையில் கதை எழுதிய ஜீயருக்கு ரசிக்கவில்லை. எனவே நாதமுனிகள் கதை வீர

நாராயண புரத்தில் நடந்தது என்று இவர் கொள்ளுவதனா லேயே வீரநாராயணபுரம் என்ற பெயர் ஏற்பட்ட பிறகு தான் இவ்வாசாரியருடைய வரலாறே நடந்தது என்று கொள்வது பொருந்தாது. காட்டு மன்னார் கோயில் என்ற பெயரை அறியாமலோ அல்லது அதை அங்கீகரிக்க மனமில்லாமலோ ஜீயர் கதை எழுதுகிறார். திருமாலைக்காட்டு மன்னார் என்று பெயர் சுட்டுவது அவருக்கு எப்படி ரசிக்கும்? இக்கதைக்கும் அவருடைய பெயரே பின்பழகியர் என்ற அழகான தமிழ்ப் பெயரே என்பதையும் மறுக்கக் கூடாது. எனவே வீரநாராண புரம் என்ற பிற்காலப் பெயர் கொண்டு நாதமுனிகள் வர லாற்றை நிர்ணயிக்கலாகாது என்பது தெளிவு.

பராந்தகனுக்கு வீரநாராயணன் தேவேந்திரன் சக்கரவர்த்தி பண்டிதவத்சவன், குஞ்சரமல்லன் சூரசூளாமணி முதலான பல பட்டங்கள் வழங்கின. இவன் காட்டு மன்னார் கோயிலில் பிராமணர்களைக் குடியேற்றி அதற்குப் புதிதாக வீர நாராயணச் சதுர்வேதி மங்கலம் என்று பெயர் கொடுத்தான். ஆகவே இவ் வூரின் பழம்பெயர் இன்றும் வழங்கும் பெயராகிய காட்டு மன்னார் கோயிலே என்பது தெளிவு. உடன்காலக் கல்வெட்டுக் களில் வீரநாராயணச் சதுர்வேதி மங்கலம் என்று பெயர் வழங்குகிறதேயன்றி, வேறிடத்திலும் வரலாற்றிலும், தற்காலத் திலும் அப்பெயர் வழங்கவில்லை, காட்டு மன்னார் கோயில் என்பதே வழக்கு.

மற்றொரு கருத்தும் இதையொத்ததே. பின்பழகியார் நாதமுனிகள் தம்மைத் தேடி வந்தவர்கள் சென்ற வழியைப் பின்பற்றிச் சென்று அவர்களைக் காண முடியாமல் கங்கை கொண்ட சோழபுரம் வரைசென்று அங்கு விழுந்து உயிர் துறந் தார் என்பது கதை. கங்கை கொண்ட சோழராஜன் முதல் இரா சேந்திரசோழன் (கி.பி. 1012 - 1014). இச்சோழன் அனேகமாய் ஒன்றுமே இல்லாத இடத்தில் புதிதாய்க் கோபுரமும் கோட்டை யும் நகரமும் அமைத்து, அங்கு பிராமணர் குடியேற்றமாகக் கங்கை கொண்ட சோழச் சதுர்வேதி மங்கலம் அமைத்தான். முன்னமே இங்கு ஓர் சிற்றூர் இருந்தது. அந்தச் சிற்றூர் ஓர் அரசன் பரிபாலனத்துக்குட்பட்டிருந்தது. அவரே வந்து நாதமுனி களைத் தரிசித்தார். தேவகானம் மனுஷ்ய கானம் என்ற வரலாறு அவனுடைய அவையில் நடைபெற்றது. அவனே வேட்டை

யாடித் திரும்பும்போது நாதமுனிகள் வீடு வந்து தேடிவிட்டும் போனான். அவனை வில்லி ஆதலால் ராம லஷ்மணர் முதலான வர்கள் என்று கருதி நாதமுனிகள் தொடர்ந்து சென்று இச்சிற்றூர் வரை சென்று அப்பாற் செல்ல முடியாமல் இங்கு உயிர்விட்டார். இச்சிற்றூரே பிற்காலத்தில் ராஜேந்திர சோழனது கங்கை கொண்ட சோழபுர நிர்மாணத்துக்கு இடமாயிருந்தது. இங்கேயே அவன் கங்கை கொண்ட சதுர்வேதி மங்கலம் அமைத்தான் என்றெல்லாம் நாம் கொள்ள வேண்டும். முந்திய வரலாற்றில் காட்டு மன்னார் கோயில் என்ற பெயர் நமக்குத் தெரிந்தது. இன்றும் வழங்குகின்றது. ஆனால் கங்கை கொண்ட சோழ புரம் பெருந்தலை நகராகி விளங்கிட முடியாமல், இதன் பழம் பெயர் தெரியவும் இல்லை; வழங்கவும் இல்லை. வேறுபாடு இவ்வளவே. நாதமுனிகள் ஓடிவந்து உயிர்விட்டது இந்த ஊரே. பின்னால் இதுவே இச்சோழபுரமாயிற்று. தமக்குத் தெரிந்த பெயரையே பின்பழகியர் சொல்கிறார் என்று நாம் கொள்ள வேண்டும். மற்றுமொரு முக்கியமான செய்தியை அறிந்தால் பல சிக்கல்கள் தாமே தெளிவுபடக் காணலாம். பிற்காலம் மணவாள மாமுனிகள் (1369 - 1433) சீடர் கோயில் கந்தாடை யண்ணன் என்பவர். அவர் புதல்வர் கந்தாடை நாயன் அவர் பெரிய திருமுடியடைவு என்றொரு நீண்ட குறிப்பு எழுதினார். இது, ஸ்ரீமந்நாராயணன் எழுந்தருளியிருக்கும் ஐந்து நிலைகள் (பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி அர்ச்சை) என்று தொடங்கி, முறையாகப் பெரிய பிராட்டியார் சேனை முதலியார் பொய் கையாழ்வார் தொடக்கமாக மதுரகவியாழ்வார் வரையில், பின் நாதமுனிகள் தொடக்கமாக, தமது தந்தை கோயில் கந்தாடை யண்ணன் வரையில் முறையாக 104க்கு மேற்பட்ட சுலோகங் கள் சொல்லி ஒவ்வோர் ஆழ்வார் ஆசாரியருக்கும் தேசம் அவதார ஸ்தலம் (அம்சம்) வருஷம் மாசம் பக்ஷம் திதி கிழமை திருநட்சத்திரம் தந்தை தாய் உடன் பிறந்தார், திருநாமங்கள் குலம், குடி கோத்திரம் காலக சூத்திரம் தேவி குமாரர் ஆசாரியர், திருவாராதளம் இருப்பிடம் செய்தருளின கிரந்தங்கள் சீடர் ஆயுள் ஆகிய எல்லாம் சொல்லி வருகிறார். முறையாக யாவற்றை யும் சொல்லி வருவதால் காலம் சுமார் 1475 ஆக இருத்த லினாலும் இவர் கூற்றுக்களைப் பொதுப்படையாக ஏற்றுக் கொள்வதில் இடையூறில்லை. பின்பழகிய பெருமாளையடுத்து இவர் கூற்றே ஏற்கத்தக்கது.

பொய்கையாழ்வார் தொடங்கி இராமானுசர் வரையில் இவர் ஒவ்வோர் ஆழ்வாரும் ஆசாரியரும் திருமாலின் இன்ன அம்சபூதராக உற்பவித்தார் என்று தொடக்கத்தில் சொல்லி, இறுதியில் அவரவருக்கு ஒரு தனியனும் (வடமொழி) கூறுகிறார். நாதமுனிகள் பற்றி இவர் கூறுவன பின்வருமாறு: சேனை முதலியாருடைய மந்திரியான கஜாஸ்யருடைய அம்ச பூதரான ஸ்ரீமந் நாதமுனிகளுக்குத் திருவவதாரஸ்தலம் சோழ தேசத்தில் வீரநாராயணபுரம். திருநட்சத்திரம் கலியுகம் 3224 வருஷத்துக்கு மேல் சோபகிருது ஆனி ஏழாந் தேதி பௌர்ணிமை புதன் அனுஷம், திருத்தகப்பனார் ஈசுவர பட்டாழ்வார். குடி சொட்டை. குமாரர் ஈசுவர முனிகள் திருநாமங்கள் நாதமுனிகள் ஸ்ரீரங்க நாத முனிகள். நாதப் பிரம்மர். ஆசாரியர் நம்மாழ்வார். புருஷகாரர் மதுரகவி யாழ்வார், திருவாராதனம் மன்னனார். இருப்பிடம் நம் பெருமாள் கோயில், சிஷ்யர் உய்யக் கொண்டார் தொடங்கி மேலையகத்தாழ்வார் வரையில் 11 பெயர். இவர் அருளிச் செய்த பிரபந்தங்கள் நியாய தத்துவம் என்கிற சாஸ்திரமும் யோக ரகஸ்யமும் புருஷ நிர்ணயமும்... இவரே குரு பரம்பரைக்கும் பிரதானர். இவர் யோகாப்பியாசக் கிரமத்தாலே 330 திருநட்சத்திரம் எழுந்தருளியிருந்து, குருகை காவலப்பன் கோயிலிலே சக்ரவர்த்தித் திருமகனார் திருவடிகளிலே சேர்ந்தார், நாத்ருசம்வத்ஸாம் மாக சுக்ல ஏகாதசி தீர்த்தம். இவர்க்குத் தனியன்:

நாமோ கிந்த்யாக் புதாக்லிஷ்ட ஞான வைராக்ய ராசயே
நாதாய முநாய அகாத பகவத் பக்தி ஸிந்தவே.

இங்கு நம்முடைய சிந்தனைக்குரிய பொருள் ஒன்று. இவர் பரமனடி சேர்ந்தது குருகை காவலப்பன் கோயிலில் குருகை காவலப்பன் கோயில் என்பது கங்கை கொண்ட சோழ புரத்துக்கு மேற்கில் ஒரு மைல் தூரத்தில் உள்ள பழமையான சிற்றூர். இது திருமால் தலம். இரு வில்லிகளையும் பின் தொடர்ந்து வந்த நாதமுனிகள் இந்த இடம் வரையில் வந்து அப்பால் செல்ல முடியாமல் இங்கேயே சோர்ந்து விழுந்து உயிர்துறந்தார். பின் பழகிய பெருமாள் ஜீயர் முனிகள் உயிர் துறந்தது கங்கை கொண்ட சோழபுரம் என்று சொல்லி, கந்தாடைநாயன், குருகை காவலப்பன் கோயில் என்று சொல்லுகிறார். 'இங்கு நாம் இரு பொருத்தங்களைக் காண முடிகிறது. ஒன்று, குருகை காவலப்பன் கோயில் என்பது பழைய ஊர், பழைய பெயர்; பின்னால்

இராசேந்திரசோழன் நகர் நிர்மாணித்த போது கங்கை கொண்ட சோழபுரம் என்று பெயரிட்டான். அப்பகுதியும் முன்னால் குருகை காவலப்பன் கோயில் என்ற ஊரின் பகுதியே சீயர் பெருநகரம் என்ற சிறப்பினால் அதை நினைத்துச் சொல்ல, கந்தாடை நாயன் திருமால் தலமாகிய அதன் பழைய பெயரை அறிந்து குறிப்பிடுகிறார். இருவர் கூற்றிலும் முரணில்லை. இரண்டும் ஒரே ஊர்தான். சீயர் பின் வந்த பெயரைக் குறிப்பிட, மற்றவர் முந்திய பழம் பெயர் தெரிந்து, திருமால் தலம் என்ற பொருத்தம் பற்றிக் குறிப்பிடுகிறார். ஆதலால், நாதமுனிகளின் மறைவு கங்கை கொண்ட சோழபுரம் என்ற பெயரைக் கருதாமல் குருகை காவலப்பன் கோயில் என்ற பெயரைக் கருதினால் கால முரண் நீங்கி விடுகிறது.

மேலும் குருகை காவலப்பன் என்றதனால் நம்மாழ்வார் ஊராகிய திருக்குருகூரை இங்கு தொடர்புபடுத்த வேண்டியதில்லை. குருகூர் தெரிய வந்ததே நாதமுனிகளால், ஆனால் இச் சிற்றூர் முன்னமே இருந்திருக்கிறது. இங்கு குருகை என்பது குருகு என்ற பறவையின் பொதுப் பெயரைக் கொண்டது. பறவை இங்கு வழிபட்டுத் திருமாலின் அருளுக்குப் பாத்திரமான படியால் இவ்வூர் குருகை காவலப்பன் கோயிலாற்று.

திருவரங்கம் கோயிலொழுகு கூறும் குறிப்புக்களும் இங்கு கருதத்தக்கன. “கல்யப்தம் 3924க்கு மேல் ஸ்ரீமந் நாதமுனிகள் அவதரித்தருளினார். அதாவது கி.பி. 823. இவர் 95 சம்வத்ஸரம் வாழ்ந்தார் என்றமையால் இவர் காலம் 823 - 918 என்பது தெளிவாயிற்று. மேலும் நாதமுனிகள் திருவரங்கத்தில் பிரபந்தங்களைத் தேவ கானத்தில் அமைத்து ஓதி வரும்படி செய்தபோது, இவர் மருகரான கீழை யகத்தாழ்வார் மேலை யகத்தாழ்வார் இருவருக்கும் திருவரங்கநாதன் மதியாத தெய்வங்கள் மணவாளப் பெருமாளரையர் என்றும் நாத வினோத அரையர் என்றும் திருநாமம் சாதித்தார் என்றும் அறிகிறோம். அது முதலாய் பாடுவாருக்கு இவ்விரண்டு பட்டப்பெயரும் அரையர் என்ற வியவகாரமும் நடந்து வருகிறது.

இவ்வாறு இரண்டிடங்களிலும், வீரநாராயணபுரம், கங்கை கொண்ட சோழபுரம் என்ற ஊர்ப் பெயர்களைச் சொன்ன காரணத்தினாலேயே கதாநாயகரான நாதமுனிகள்

வீரநாராயணனுக்கும் (907-953) கங்கை கொண்ட சோழனுக்கும் (1012 - 1044) காலத்தால் பிற்பட்டு வந்தவரென்பது பெரிதும் பொருந்தாத முடிவாகும்.

மேலும் இதில் மற்றோர் அசம்பாவிதமும் உண்டு. நாத முனிகள் பெயரர் ஆளவந்தார். இவர் இராமானுசரை ஓர் இளைஞராகக் கண்டார். இராமானுசர் பிறப்பு 1017 கண்ட காலம் சுமார் 1035 ஆதல் கூடும். அவருக்கே அப்போது வயது அதிகம் ஆகிவிட்டது. கங்கை கொண்ட சோழன் காலத்தில் நாதமுனிகள் இருந்தாரென்றால், அவர் இறந்த பிறகு தான் பெயரர் பிறக்கிறார். இராமானுசர் பிறக்கும் போது ஆளவந்தார் முதுமை அடைந்து விட்டாராதலால் இந்தக் காலநிலை ஒத்துவராது. நாதமுனிகள் காலம் 823-918; ஆளவந்தார் காலம் 920-1027; இராமானுசர் 1017-1137 என்பதே எல்லா வகையிலும் பொருந்தக் கூடியது.

சைவ சமயத்தில் மாணிக்கவாசகருக்கு என்ன பெருமையோ அதைவிட அதிகமாக பெருமை நம்மாழ்வாருக்கு வைணவத்தில் சொல்லப்படுகிறது. அவர் சேனை முதலிகளின் அம்சபூதராகப் பிறந்தவர். அது மாத்திரமல்ல. "வேதத்தைத் தமிழ் செய்த மாறன்" என்று அவரை உலகம் போற்றும். அது மட்டுமல்ல. தாம் தமிழ் வேதம் செய்ததோடு கூட மற்ற வேதங்களாகிய பிற நாலாயிரப் பிரபந்தங்கள் யாவையும் அவர் மூலமாகத்தான் வைணவ உலகம் உய்யுமாறு நாதமுனிகள் வெளிப்படுத்தினார். நம்மாழ்வாருடைய சீடராக வந்தவர் நாதமுனிகள். ஆனால் நாதமுனிகளுக்கு ஆழ்வார் நேரே உபதேசிக்கவில்லை. அர்ச்சாவ தாரமாகவே எல்லாவற்றையும் உபதேசித்தார்.

நம்மாழ்வார் செய்த பெரிய நூல் திருவாய்மொழி, இது 1102 பாடல், அவர் செய்த மற்றவை திருவிருத்தம் இயற்பா 100 பாடல்கள், திருவாசிரியம் ஆகிய 7 பாடல், பெரிய திருவந்தாதி வேணி 87 பாடல். இவருடைய நேர் சீடரான மதுரகவி ஆழ்வார் முதலாயிரத்துள் சேர்க்கப்பட்டுள்ள தமது 'கண்ணினுள் சிறுத்தாம்பு' என்ற பதினோரு பாடல்களையும் நம்மாழ்வார் மீதே பாடியிருக்கிறார். அது மட்டுமல்ல அவர் திருமாலை ஒரு பாடல் கூடப் பாடாமல் நம்மாழ்வாரைப் பாடிய விசேடத் தாலே ஆழ்வாராக எண்ணப்பெறுகிறார்.

திருவாய்மொழி என்றாலும் திருவாசகம் என்றாலும் பொருள் ஒன்றுதான். வாய்மொழி வாசகம். நம்மாழ்வார் ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் வாழ்ந்தார். மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதி ஆண்டு களில் வாழ்ந்தார். இருவரும் பாண்டி நாட்டில் பிறந்தவர்கள்.

திருவாசகத்துக்கு உரை எழுதக்கூடாது என்ற ஒரு மரபு சைவர்களிடையே வழங்குகிறது. அப்படியே அதற்குப் பண்டைய உரை எதுவும் இல்லை. ஆனால் நம்மாழ்வாருடைய திருவாய் மொழிக்குப் பண்டைக் காலம் முதல் மிகவும் சிறப்பான பல உரைகள் எழுந்துள்ளன. குருகைப்பிரான் பிள்ளானின் ஆறாயிரப் படி நஞ்சீயரின் ஒன்பதினாயிரப்படி, அழகிய மணவாளஜீயரின் பன்னீராயிரப்படி, பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்தி நாலாயிரப்படி, நம்பிள்ளையின் ஈடு என்னும் முப்பத்தாறாயிரப் படி என்பன பெருஞ்சிறப்புடைய பண்டைய உரைகள். இவற்றின் காலம் பன்னிரண்டு, பதின்மூன்று ஆகிய நூற்றாண்டுகள். இவை யன்றி அரும்பத விவேகம் முதலான சிறப்புக் குறிப்புரைகளும் வாசகமாலை முதலான திரட்டுக்களும், உரைகளும் பலவாக எழுந்துள்ளன. விசிஷ்டாத்வைதம் என்று இராமானுசர் புதிதாக ஒரு அத்வைதக் கொள்கையை நிலை நாட்டப் புகுந்ததற்கு ஆதாரம் நம்மாழ்வாரின் திருவாய்மொழியே.

திருவரங்கக் கோயிலில் திருவாய் மொழிக்கென்றே திரு விழாக்கள் நடைபெறுகின்றன. சமயத்தில் மேல் எல்லைக்கு வந்தவர்களுக்குச் சாதி என்பது இல்லை என்பது அனைவரும் அறிந்த செய்தி. வேளாளக்குலத்தில் பிறந்த நம்மாழ்வார் பரம பதத்தில் வீற்றிருக்கின்ற திருமாலுக்குப் பிறகு பூலோகத்தில் முதல் ஆசாரியர் ஆகிறார். இது சமயத்திலுள்ள ஒப்பற்ற ஒரு பெருநிலை, ஆனால் சமயத்தில் சாதியைக் கருதக்கூடாது என்று சொன்ன இராமானுசருடைய கருத்துக்கு மாறாக இன்று ஸ்ரீவைஷ்ணவம், ஸ்ரீ வைஷ்ணவர் என்றால் இன்று அது பிராமணருக்கே உரிய ஒரு சமயமாக ஆக்கப்பட்டிருக்கிறது. இது மிகவும் வருந்தத்தக்க ஒரு நிலை. எத்தகைய சிறப்பான பொருளும் காலகதியில் தாழ்ந்து போகிறது என்பதற்கு இதை விடச் சிறந்த உதாரணம் தேவையில்லை. எனினும் எல்லா வைஷ்ணவ மடங்களும் இன்று பிராமணர் ஆதிக்கத்தில்

இருந்தும்கூட அவர்கள் அனைவருக்கும் முதல் ஆசாரியர் வேளாளரான நம்மாழ்வாரே.

ஆயினும் இதில் பெரிதும் வருந்தத்தக்க ஒரு நிலையையும் நாம் பார்க்கிறோம். வைணவத்தில் தென்கலை, வடகலை என இரண்டு பெரும் பிரிவுகள், இரண்டு பிரிவுகளுக்கும் மூலம் இராமானுஜர் என்பதில் மறுப்பில்லை. தென்கலை, மணவாள மாமுனிகளைப் பெரிய ஜீயராகக் கொண்டு பரவியிருக்கிறது. வடகலை வேதாந்த தேசிகரைத் தலைவராகக் கொண்டு பரவி யிருக்கிறது. இரண்டுமே திருமால் சமயம். இரண்டுமே நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை வேதமாகக் கொண்டு வளர்ந்துள்ளன. ஆயினும் இரண்டுக்குமிடையில் இன்று இருக்கும் பூசலும் போரும் மற்றவர்கள் பார்த்துப் பரிகசிக்கும்படி உள்ளன.

இவற்றை மறந்து விடுவோம். நம்மாழ்வாரைப் போற்று கின்ற புகழ் நூல்கள் தமிழ்மொழியில் ஏராளம். அவற்றுள் சடகோபரந்தாதி என்பது ஒன்று. அதைப் பாடியவர் பன்னி ரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கம்பர் என்று இராமாயணம் செய்த கம்பருடைய பெயரை சூட்டிக் கொண்ட மற்றொரு பிற்காலப் புலவர், இப்புலவர் நம்மாழ்வாரைப் போற்றும் முகத்தால் வடமொழிவாணருக்கு, "உங்கள் வேதம் என்ன செய் யும்? அதில் என்ன இருக்கிறது. பரம்பொருள் ஒன்று என்ற உணர்வைத் தருமா? இவையெல்லாம் எம்முடைய குருகைப் பிரானுடைய பாசுரங்களைப் போல என்று சவால் விடுக்கிறார். இத்தகைய சவால், வடமொழிவாணருக்கு வேறு எவராலும் சொல்லப்பட்டது இல்லை. இதுபோன்ற கருத்துக்கள் எல்லாம் சொல்லிய புலவருக்கு வைணவ சமயத்திடமுள்ள பக்தியின் ஆழத்தை மட்டுமல்ல தமிழ் மொழியிடத்து உள்ள பக்தியின் ஆழத்தையும் காட்டுகிறது. இதை அறியும் போது நாம் "இந்தப் பாடல்கள் வாழ்க. இவற்றுக்கு மூலமாயுள்ள திருவாய்மொழி வாழ்க. நம்மாழ்வார் வாழ்க" என்று நம்மை அறியாது போற்று கிறோம். சடகோபரந்தாதியை ஏன் வைணவர் நாலாயிரத் தோடு சேர்க்கவில்லை? சாதி காரணமா?

**வேதத்தின் முன்செல்க, மெய்யுணர்ந்தோர்**
**விரிஞ்சன் முதலார்**
**கோதற்றஞானக் கொழுந்தின் முன்செல்க**
**குணங்கடந்த**

போதக் கடல் எம் குருகூர்ப் புனிதன்
கவியின் ஒரு
பாதத்தின் முன்செல்லுமோ, தொல்லை மூலப்
பரஞ்சுடரே?

சாதிக்கு மேபர தத்துவத்தை, சம
யத்திருக்கைச்
சேதிக்கு மே, ஒன்று சிந்திக்கு மே, அத
னைத்தெரியப்
போதிக்குமே, எங்குமோங்கிப் பொதுநிற்கும்
மெய்யைப் பொய்யைச்
சோதிக்குமே உங்கள் வேதம்எங் கோன்தமிழ்ச்
சொல்லெனவே?

– சடகோபரந்தாதி.

எய்தற் கரிய மறைகளை ஆயிரம்
இன்தமிழால்
செய்தற் குலகில் வரும்சடகோபனைச்
சிந்தையுள்ளே
பெற்றதற் கிசையும் பெரியவர் சீரை
உயிர்களெல்லாம்
உய்தற் குதவும் இராமா னுசன்எம்
உறுதுணையே.

– இராமானுஜ நூற்றந்தாதி.

*இதில் சிறிய திருமடல், பெரிய திருமடல் இரண்டையும் கண்ணிகளாக எண்ணிக் கணக்கிட்டுக் கூட்டப்படுகிறது.*



## அட்டவணைகள்

இந்நூலகத்தும் இறுதியிலும் பல்வேறு அட்டவணைகள் பயன் கருதி அமைத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலைக் கீழே காண்க.



## நாலாயிரம் என்ற தொகை

| | | |
|---|---|---|
| முதலாழ்வார் மூன்று நூறு | - | 300 |
| மழிசைப்பிரான் இருநூற்றொருபத்தாறு | - | 216 |
| மாறன் மறை ஆயிரத்து இருநூற்று தொண்ணூற்றாறு | - | 1296 |
| மதுரகவி பதினொன்று | - | 11 |
| குலசேகரப் பெருமான் நூற்று ஐந்து | - | 105 |
| பெரியாழ்வார் நானூற்றெழுபத்து மூன்று | - | 473 |
| கோதை நூற்றெழுபத்து மூன்று | - | 173 |
| தொண்டரடிப் பொடி ஐம்பத்தைந்து | - | 55 |
| திருப்பாணாழ்வார் பத்து | - | 10 |
| திருமங்கையாழ்வார் ஆயிரத்து இருநூற்றைம்பத்து மூன்று | - | 1253 |
| இராமானுச நூற்றந்தாதி நூற்றெட்டு | - | 108 |
| ஆகக் கூடுதல் | - | 4000 |

## மேற்கோள் செய்யுள் முதற்குறிப்பு அகராதி

கி.பி. ஐந்து, ஆறாம் நூற்றாண்டுகளிலிருந்து
தொடர்ச்சியாக வளர்ந்துவந்த
வைணவப் பாசுர இலக்கியம்
இந்த நூற்றாண்டில்
தன் உச்ச நிலையை அடைகிறது.
முதலில் முதலாழ்வார் மூவரும் தோன்றி
ஒவ்வொருவரும் ஓர் அந்தாதி பாடி
நாராயணனைத் தரிசித்தார்கள்.
ஆழ்வார் பரம்பரை வளர்ந்தது.
ஒன்பதாம் நூற்றாண்டில்
அவ்வளர்ச்சியின் சிகரமாக
நம்மாழ்வார் தோன்றினார்.
அவர் தோன்றியது முதல்
வைணவம் என்றாலே நம்மாழ்வார்
என்று பொருளாகி விட்டது.
நாலாயிரப் பிரபந்தங்களில்
மிகவும் அதிகமான பாடல் பாடியவர் இவரே.
தமிழ்நாட்டின்
தென்கோடியில் இருந்துகொண்டு
அதிகமான தலங்களையும்
இவர் பாடியிருப்பது
பின்னும் சிறப்பு.

The PARKAR